# நகரத்தார் 96 ஊர்ப் பாதயாத்திரை திருவாசகம் முற்றோதல்






"பொற்கிழிக் கவிஞர்"

அரு. சோமசுந்தரன்

# நகரத்தார்
# 96 ஊர்ப் பாதயாத்திரை
# திருவாசகம் முற்றோதல்

## அருசோ 80 நிறைவு முத்துவிழா வெளியீடு

'கவிஞர்கோ' 'பொற்கிழிக்கவிஞர்' 'காசிஸ்ரீ'
'கபிலைமணி' 'முத்தமிழ்ப் பேரறிஞர்'
**அரு.சோமசுந்தரன்,** M.A.B.T. (அருசோ)




பொன்முடி பதிப்பகம்
183,முத்துப்பட்டணம்.3வதுதெரு.காரைக்குடி 630001.

பொன்: 110
உரிமை: ஆசிரியர்க்கு
முதல் பதிப்பு: 2016 ஆகஸ்டு

தயாரிப்பு: அருசோ அருணாசலம்
ஆசிரியர் : "பொற்கிழிகவிஞர்" அரு.சோமசுந்தரன்
உதவி : "திருவாசகமணி" தெ.சொக்கலிங்கம்
"காசிஸ்ரீ" பழ.மாணிக்கம்

விலை: ரூ. 225.00

கிடைக்கும் இடம்:

**வெற்றி புக் சென்டர்**
29, புதுமண்டபம், மதுரை -1
தொலைபேசி : 04521-2627839

**Publishers:**

**Ponmudi Pathippagm**
**(founded on 3.6.1963)**
**48/123 Muthupatnam III street**
**Karaikudi Sivagangai District - 630001**
**Phone: 0456 - 238196 Cell: 9443138196**
**E.mail: Ponmudi Pathippagam @ yahoo.com**

---

அச்சிட்டோர்: மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ்,
சென்னை-600 021, தொலைபேசி: 25954528

3014

# காணிக்கை





அமரர் "திருவாசகமணி"
என் பால்ய நண்பர்
காரைக்குடி ஈப்போ
நாராயணன் நினைவுக்கு.

- அருசோ

# பொருளடக்கம்

| வ.எண் | தலைப்பு | பக்க எண் |
|---|---|---|

# 1. தொடக்கம்

(பொற்கிழிக்கவிஞர் அரு. சோமசுந்தரன்)

அடியேனின் பிறந்த நாள் 1.8.1936. பிறந்த நட்சத்திரம் புனர்பூசம். 80 ஆண்டுகளில் புனர்பூச நட்சத்திரம் அதே ஆகஸ்ட் 1–ல் வருகிறது. என் அறுபதாம் ஆண்டில் ஆகஸ்டு 12–ல் புனர்பூசம் வந்தது. ஆகவே அடியேனின் அறுபது நிறைவு மணி விழாவை 12.8.1996–ல் தேவ கோட்டையில் அடியேனின் இல்லத்தில் கொண்டாடி னோம். அந்த விழாவை மணிவாசகர் பதிப்பக நிறுவனர் பதிப்புச் செம்மல் டாக்டர் ச.மெய்யப்பன் அவர்கள் முன்னின்று நடத்தினார்கள். பெரிய தமிழ்மாநாடாகவே 2 நாட்கள் விழா நிகழ்ந்தது. 'தத்புருஷதேசிகர்', 'சிவஸ்ரீ' 'பாலகவி' இராமநாதன் செட்டியார் அவர்கள் முன் னின்று வைதீக காரியங்களை நிகழ்த்த, ச.மெய்யப்பன் அவர்கள் இலக்கிய விழாவினை முன்னின்று நடத்தினார்கள். முதல் நாள் இரவு மாபெரும் கவியரங்கம் நிகழ்ந்தது. அதனை 800 பேர் கேட்டு ரசித்தார்கள். மணிவிழா வாழ்த்தரங்கம் 12.8.1996 காலை 10 மணி முதல் மாலை 4 மணி வரை நிகழ்ந்தது. 2000 பேர் சொற்பொழிவுகளைக் கேட்டு மகிழ்ந்தார்கள். நூறு ஆண்டு பழமையான எங்கள் வீட்டைப் புதுப்பித்து அங்கு அடியேனின் மணி விழாவை நடத்தினேன்.

தேவகோட்டையில் எங்கள் வீட்டைக் கட்டியவர் என் முப்பாட்டனார் கட்டமுருகப்ப செட்டியார். அவர் ஒரு பெரிய மகான். வீடு மிகவும் சிதிலம் அடைந் திருந்தது. எனவே பல லட்சம் ரூபாய் செலவு செய்து வீட்டைப் புதுப்பித்து அங்கு ஒரு பெரிய வேள்வியாக அடியேனின் மணிவிழாவை நடத்தினேன், இப்பொழுது மேலும் 20 ஆண்டுகள் கழிந்துவிட்டன.

என் முப்பாட்டனார் கட்டமுருகப்ப செட்டியார் கட்டிய காட்டுத்தண்ணீர்ப்பந்தல் என்னும் நால்வர் குருபூசைமடம் மிகவும் பழுதடைந்திருந்தது. என் மணி விழா முடிந்ததும் பாலகவி இராமநாதன் செட்டியார், பிள்ளையார்பட்டி பிச்சைக் குருக்கள் மற்றும் கொத்தனார், பொறியாளர் ஆகியோரைக் கலந்து காட்டுத்தண்ணீர்ப்பந்தல் என்னும் நால்வர் குருபூசை மடத்தைப் பழுது பார்த்துப் பல லட்ச ரூபாய் செலவில் திருப்புணி செய்து, நால்வர் கோவிலாக உருவாக்கினேன். தேவகோட்டை ஜமீன்தார் 'திருப்பணிச் செம்மல்' சோம.நாராயணன் செட்டியார் அவர்கள் பூமிபூசை செய்தார்கள். இராமேஸ்வரம் முதல் கேதார்நாத், பத்ரிநாத் வரை சென்று, இறைவணங்கி, மண்ணும் தீர்த்தமும் கொண்டு வந்து பூமிபூசை நடத்தினேன். இறையருளால் நால்வர் கோவில் நன்கு உருவாகியது. பாலகவி இராமநாதன் செட்டியார் அவர்கள் தலைமையில் கும்பாபிஷேகம் (8.2.1998ல்) நிகழ்ந்தது அதில் நம் ஆதீன கர்த்தர்கள் அனைவரும் கலந்து கொண்டனர். ச. மெய்யப்பன் முன்னின்று நடத்தினார்.

இன்று ச.மெய்யப்பன் இல்லை. ஆனால் அவரது நினைவில் அடியேனின் முத்துவிழா 1.8.2016-ல் நிகழ்கிறது. அதற்கு முன்பு நால்வர் கோவிலை மீண்டும் புதுப்பித்து, இரண்டாவது குடமுழுக்கும் ஜமீன்தார் சோம.நாராயணன் செட்டியார் தலைமையில் 14.7.2016-ல் நடத்தி, நால்வர் கோவிலில் அடியேனின் முத்துவிழா நிகழ்கிறது. வீட்டைப் புதுப்பித்து மணிவிழாவை வீட்டில் நடத்தினேன். நால்வர் கோவிலைப் புதுப்பித்து நால்வர் கோவிலில் முத்துவிழாவை நடத்துகிறேன். எல்லாம் இறையருள்! நால்வர் கோவில் மடமாகத் தொடங்கியது கி.பி.1848ல்.

அடியேன் எழுதி உள்ள நூற்றுக்கும் மேலான நூல்களை எனது பொன்முடி பதிப்பகத்தின் மூலமே இதுவரை வெளியிட்டுள்ளேன். எனது நூல்களின் உரிமை எனக்கும் என் வாரிசுகளுக்கும் எனது பொன்முடி பதிப்பகத்துக்குமே உரிமை. இப்பொழுது எனது நூல்கள் எல்லாமே பொன்முடி பதிப்பகத்தில் கிடைக்கின்றன. 1 செட் ரூபாய் 5000 ஆகும். எனக்குப் பிறகும் இவை கிடைக்கும். நான் இன்னும் 20 ஆண்டுகள் உடல்நலத்தோடு வாழ்ந்து, நூற்றாண்டு விழாவும் கொண்டாடுவேன் என்று நம்புகிறேன். எல்லாம் இறையருள்! ஒருகால் அதற்கு முன் நான் காலமானால், என் நூல்களை என் வாரிசுகள் வெளியிடுவார்கள். ஒருகால் அவர்கள் வெளியிடாவிட்டால் மணிவாசகர் பதிப்பகம் வெளியிட இதன் மூலம் உரிமை அளிக்கிறேன். அவர்களும் வெளியிடாவிட்டால் தமிழக அரசு நாட்டுடைமை ஆக்கி வெளியிடலாம். எனது நூல்கள் அனைத்துமே நாட்டுக்கும் மக்களுக்கும் பயன்படக் கூடிய வரலாற்றுக் கருவூலங்கள் ஆகும்!

நால்வர் கோவிலில் அருசோநீலா நூலகம் ஏற்படுத்தி, அதற்கென ஒரு மண்டபமும் அமைத்து, என் மாணவர், நீதி அரசர் மாண்புமிகு டாக்டர் அரு. இலக்குமணன் அவர்களைக் கொண்டு திறக்கச் செய்தேன். என் மாணவர் நீதிஅரசர் மாண்புமிகு கற்பகவிநாயகம் அவர்களைக் கொண்டு நூலகத்தின் முதலாண்டு விழாவை நடத்தினேன். நானும் என் மனைவி நீலாவும் திருக்கயிலை மானசரோவர் சென்றுவந்த நினைவாக மண்டபம் கட்டி அதில் அருசோநீலா நூலகம் 12.6.2005ல் ஏற்படுத்தினேன். அதில் தினந்தோறும் அன்பர்கள் இருபது பேர் படித்து வருகின்றனர்.

இப்பொழுது கட்டடத்தை மேலும் விரிவுபடுத்தி இரண்டாவது குடமுழுக்கு நடத்தி, அடியேனின் 80 நிறைவு சதாபிஷேக முத்து விழாவை நால்வர் கோவிலில் எளிமையாக நடத்தும் இந்நேரத்தில் இந்த நூலை முத்து விழாவில் வெளியிடுவதைப் பெரும்பேறாகக் கருதுகிறேன்.

எத்தனையோ நாடுகளுக்கு யாத்திரை சென்று வந்து நூல்கள் எழுதி வெளியிட்டுள்ளேன். இராமேஸ்வரத்தில் இருந்து காசிக்குப் பாதயாத்திரை சென்று வந்தேன். அதுவும் மாபெரும் நூலாக வெளிவந்து விற்பனையில் சாதனை படைத்துள்ளது. அதனைத் தொடர்ந்து எங்களது குழுவினர் பல தலங்களுக்கும் பாதயாத்திரை சென்று வந்தனர். அத்தனைக்கும் அடியேன் குருவாக இருந்து வழிகாட்டி, தொடங்கி வைத்து ஆசி கூறி, விழா நிறைவுரையும் நிகழ்த்திப் பட்டங்கள் வழங்கும் பேறு பெற்றேன்.

அப்படி நிகழ்த்திய ஒரு சாதனைதான் நகரத்தார்களின் 96 ஊர்களுக்கும் பாதயாத்திரை சென்று வந்த நிகழ்ச்சி! நான் பத்து வயதுச் சிறுவனாக இருந்தபொழுது எங்கள் ஊரில் (புதுவயலில்) பெரியவர் ஒருவர் இருந்தார். அப்பொழுது அவருக்கு வயது 60 இருக்கும். என்னைவிட 50 வயது மூத்தவர். அவரைத் "தொண்ணூற்றாரூர் (96 ஊர்) வெங்கடாசலம் செட்டியார் என்று எல்லோரும் அழைத்தார்கள். அப்படி அழைக்கக் காரணம் என்ன என்று என் தாயாரிடம் கேட்டேன். அதற்கு என் தாயார் மீனாட்சி ஆச்சி கூறிய பதில்... "நம் செட்டி நாட்டில் மொத்தம் 96 ஊர்கள் உள்ளன. இந்தச் செட்டியார் 96 ஊர்களுக்கும் சென்று வந்துள்ளார். ஆகவே இவரைத் தொண்ணூற்றாரூர் வெங்கடாசலம் செட்டியார் என்று அழைக்கிறார்கள்.

வேறு யாரும் 96 ஊர்களுக்கும் சென்று வந்ததில்லை. முடிந்தால் நீ பிறகு சென்று வா" என்றார்கள் அவர்கள் ஆசி பலித்தது!

எங்கள் குழுவினரை காசிஸ்ரீ தேனப்ப செட்டியார் தலைமையில், காசிஸ்ரீ பழ.மாணிக்கம் செயற்பாட்டில் 96 ஊர்களுக்கும் பாதயாத்திரை அனுப்பி வைத்தேன். முன்பே இந்த ஊர்களுக்கு நான் சொற்பொழிவு நிமித்தம் சென்று வந்துள்ளேன். இந்தப் பாதயாத்திரையைப் பிள்ளையார்பட்டியில் தொடங்கி, அங்கேயே நிறைவு செய்தோம். நடந்து சென்ற அனைவருக்கும் '96 ஊர்' என்ற பட்டத்தை முன் அடைமொழியாக வழங்கினேன். அதன் மூலம் 96 ஊர் தேனப்ப செட்டியார், 96 ஊர் மாணிக்கம் செட்டியார் என்ற சிறப்புப் பட்டத்தை அவர்கள் பெற்றார்கள். அந்தப் பாதயாத்திரை விவரத்தைச் செயலாளர் காசிஸ்ரீ பழ. மாணிக்கம் இதில் விரிவாக எழுதி உள்ளார்கள்.

இந்த 96 ஊர்களுக்கும் அடியேன் தலைமையில் சுமார் 100 பேர் ஆண்களும் பெண்களும் வாகனங்களில் சென்று திருவாசகத்தை நகரக்கோவில்களில் முற்றோதல் செய்து வந்தோம். மாதந்தோறும் இரண்டு ஊர்களுக்குச் சென்று வந்தோம். நான்கு ஆண்டுகளில் இத்திட்டம் நிறைவேறியது. பிள்ளையார்பட்டியில் தொடங்கினோம். 30 பேர் கலந்து கொண்டனர். சிதம்பரம் நடராசர் கோவிலில் நிறைவு செய்தோம். 300 பேர் கலந்து கொண்டனர். எல்லாம் இறையருள்!

இந்த 96 ஊர்களைப் பற்றியும் நம் மெய்யன்பர் தெ.சொக்கலிங்கம் இதில் சிறப்பாக எழுதி உள்ளார். காரைக்குடியில் திருநாவுக்கரசர் இறைபணி மன்றம் என்ற இயக்கத்தை என் இனிய நண்பர் ஈப்போ நாராயணன்

செட்டியாருடன் இணைந்து தொடங்கி நடத்தி வருபவர் சொக்கலிங்கம். ஈப்போ நாராயணன் செட்டியாரும் அவர் மனைவி பாலாம்பாள் ஆச்சியும் சொக்கலிங்கமும் அவர் மனைவி மீனாட்சி ஆச்சியும் செயலர் காசிஸ்ரீ மாணிக்கமும் இந்த 96 ஊர் திருவாசக முற்றோதலை பக்தி சிரத்தையுடன் நடத்தினர். எல்லா உறுப்பினர்களும் ஆர்வமுடன் கலந்து கொண்டு திருவாசகம் பாடினர். நானும் என் மனைவி கயிலைமணி நீலாவும் பங்கு கொண்டு பாடினோம். அடியேன் ஒவ்வொரு ஊரிலும் அந்தந்தக் கோவில் பற்றிக் கவிதை பாடினேன். ஆகவே 96 ஊர்களும் இப்பொழுது பாடல் பெற்ற தலங்கள் ஆகி இருக்கின்றன. அந்தப் பாடல்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. இந்நூலை என் முத்துவிழாவில் வெளியிடுவதைப் பெரும்பேறாகக் கருதுகிறேன். ஈப்போநாராயணன் இப்பொழுது அமரராகி விட்டார். ஆனால் அவர் தொடங்கிய காரியம் தொடர்ந்து சிறப்பாக நடைபெற்று வருகிறது. அவரது மனைவி பாலாம்பாள் ஆச்சியின் பணி அற்புதமானது. இந்நூல் வெளிவர மணிவாசகர் பதிப்பக உரிமையாளர் சோமு அவர்களும் மேலாளர் குருமூர்த்தி அவர்களும் பேருதவி செய்தனர். என் மனைவி நீலா, என் மகன் அருணாசலம் என்ற இராமநாதன், மருமகள் அலமு, மகள் பொன்முடி இராமசாமி, இளவெயினி இராமநாதன், மங்கையர்க்கரசி மீனாட்சி அய்யப்பன் ம்ற்றும் பேரன்கள் சோலையப்பன், சோழீஸ் என்ற அருண், கிருஷ்ணகுமார், மணிகண்டன் என்ற சோமசுந்தரம், கைலாசம், திருஞானசம்பந்தன் ஆகியோருக்கு என் ஆசிகள்!

துழாவூர் பெண்கள் குருபீடக் குருபூசையில் பெரியவர் உடையப்ப செட்டியார், ஜமீன்தார் சோம.நாராயணன் செட்டியார், அடியேன் ஆகிய

மூவரும் ஒரு முறை உரை ஆற்றிய பொழுது 96 ஊர் பற்றிய பேச்சு வந்தது. அப்பொழுது அடியேன் பேசினேன். “நகரத்தார்களைப்பற்றிய எல்லாவற்றையும் நகரத்தார்களின் நடமாடும் கலைக் களஞ்சியமாக இருக்கும் பெரியவர் உடையப்பசெட்டியார் அறிவார், எல்லாரையும் ஜமீன்தார் நாராயணன் செட்டியார் அறிவார். எல்லா ஊர்களையும் அடியேன் அறிவேன்” என்றேன். பேரவை முழுதும் கைதட்டி அங்கீகரித்தது.

இப்பொழுது இந்த நூல் மூலம் 96 ஊர்களைப்பற்றி நம் மக்கட்கு அறிமுகப்படுத்துகிறேன். எல்லா ஊர்களிலும் எங்களைச் சிறப்பாக வரவேற்று உபசரித்த வள்ளல்கள் அனைவர்க்கும் என் நன்றி உரியது. எங்களுடன் திருவாசகம் முற்றோதல் பாடிய அனைவர்க்கும் நன்றி.

இது ஒரு பெரிய வேள்வி! 4 ஆண்டுகள் நடைபெற்ற வேள்வி! இதனால் எல்லா ஊர்களுக்குமே நன்மை விளைந்திருக்கிறது! எல்லா மக்களுக்கும் நன்மை கிட்டியிருக்கிறது. இதனைப் படியுங்கள். உங்கட்கும் நன்மை விளையும். வாழ்த்துக்கள்.

– அருசோ
1.8.2016

## 2. நகரத்தார் 96 ஊர்ப்பாடல்

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

மீனாட்சி சுந்தரேசர் திருவடிகளே!
    மேலாட்சி செய்துவரும் திருக்கயிலையே!
தானாட்சி செய்துவரும் தமிழரசியே
    தலையாய நகரத்தார் குல அரசியே! (தலையாய)

தொண்ணூற்றாறு ஊர்களிலே நாட்டார் போற்றத்
    தொண்டாற்றி வருகின்ற தூய நகரத்தார்
கண்ணாகத் தரிசிக்கும் ஊர்த் தெய்வமே!
    கவினார்ந்த மீனாட்சி சுந்தரேசரே! (கவினார்ந்த)

வான்முட்டும் கோயில்கள் வலம் வருவோமே
    வற்றாத திருமுறைகள் பாடிடுவோமே
தேன்சொட்டும் தேவாரம் திருவாசகம்
    தினம்பாடித் திருவடிகள் தொழுதிடுவோமே! (தினம்பாடி)

கோயில்குளம் மடப்பள்ளி நந்தவனங்களும்
    குறையாத பாடசாலை பசுமடங்களும்
வாயிலிலே வரவேற்கும் மாடமனைகளும்
    வளர்ந்தோங்கி நலம்பயக்க வணங்கிடுவோமே (வளர்ந்தோங்கி)

பழைமைமிகு வீடுமனை பாதுகாப்போமே
    பண்புடனே ஒற்றுமையைப் பரப்பிடுவோமே!
தலைமையினைக் காத்து நலம் தந்திடுவாயே
    மணமுறிவு வேற்றுமைகள் நீக்கிடுவாயே (மணமுறிவு)

செய்கின்ற தொழில்கள் எலாம் சிறந்தோங்கவே
    செகம்புரக்கும் மீனாட்சி அருள்சுரக்கவே
கொய்மலரால் அர்ச்சித்து வணங்கிடுவோமே
    குலம்தழைக்க நாடுயரக் கும்பிடுவோமே!

(குலம் தழைக்க)

– *மீனாட்சி சுந்தரேசர்*

## 3. பாதயாத்திரை பயணத்திட்டம்

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

தென்னாடுடைய சிவனே போற்றி! எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!!

### நகரத்தாரின் 9 நகரக் கோயில்கள் மற்றும் தொண்ணூற்று ஆறு ஊர் நகரத்தார் இப்பொழுது வாழும் ஊர்க்கோயில்கள்

காலம்: 21 நாட்கள் நடைப்பயண தூரம்: 450 கிலோ மீட்டர்
2010 டிசம்பர் 1–ஆம் தேதி முதல் டிசம்பர் 21–ஆம் தேதி வரை

நகரத்தார் பெருமக்கள் காவிரிப்பூம்பட்டினத்தி லிருந்து செட்டி நாட்டிற்கு வந்தபின் 96 ஊர்களில் வீடு கட்டிக்கொண்டு வாழ்ந்து வந்திருக்கிறார்கள். அவ்வாறு வாழும் காலத்தில் சிவவழிபாடு செய்வதற்கு ஒவ்வொரு ஊரிலும் சிவன் கோயில் கட்டித் தவறாமல் நித்திய பூசைகள் நடத்தி வழிபட்டு வந்திருக்கிறார்கள். சுமார் 1000 ஆண்டுகளுக்கு முன்னர் நகரத்தார் பெருமக்களின் கோத்திரக் கோயில்களான 9 நகரக்கோயில்களும் பாண்டிய மன்னரிடம் கேட்டு உரிமைப் பட்டயம் பெற்று இன்று வரை அவரவர் கோயில்களில் திருப்பணி மற்றும் குடமுழுக்குச் செய்து தினந்தோறும் பூசைகள் செய்து வழிபாடு செய்து வருகிறார்கள். குறிப்பிட்ட கால இடைவெளிகளில் காரியத்தனம் பார்க்க, காரியக்காரர் களைத் தேர்ந்தெடுத்து சரியான நிர்வாகம் நடத்தி வருகிறார்கள். அதுபோல் தங்கள் தங்கள் ஊர்க்கோயில் களிலும் நிர்வாக முறை ஏற்படுத்திக் கொண்டு சரியாகவும் அழகாகவும் நிர்வாகம் செய்து வருகிறார்கள்.

உ

கோயிலுக்கான அன்றாடச் செலவுகள், திருவிழா மற்றும் சுவாமி புறப்பாடு காலங்களில் உபயதாரர்களிடமிருந்து பொருள் பெற்று விழாக்களைச் சிறப்பாகச் செய்து வருகிறார்கள். மேலும் மற்ற தெய்வ, சிறுதெய்வ, ஆலயங்களிலும் திருப்பணி செய்து கொண்டிருக்கிறார்கள். பாடல் பெற்ற தலங்கள் 276–ல் அதிகமான ஆலயங்களில் பலவிதமான கோயில் திருப்பணிகள் செய்தும் குடமுழுக்குச் செய்தும் வருகிறார்கள். முன்னோர்கள் சென்ற வழிகளை மறவாது வாழும் நெறி அறிந்து வாழ்வாங்கு வாழ்ந்துவரும் நகரத்தார் பெருமக்களின் 9 நகரக் கோயில்களும் மற்றும் 96 ஊர் நகரத்தார் ஊர்க் கோயில்களும் பாடல் பெற்ற தலங்களுக்கு ஒப்பானவை என்றே கருதலாம். ஆகவே அப்புனிதத் தலங்களுக்கும் கோத்திரக் கோயில்கள் 9–க்கும் பாதயாத்திரை சென்றுவர இறைவனின் அருள் கிடைத்துள்ளது.

இப்பாதயாத்திரையின் நோக்கம்; 1. நகரத்தார் பெருமக்கள் இன்று போல் என்றும் வந்தவழி மறவாது வாழ்வாங்கு வாழ்ந்து, நற்செயல்களை முனைப்புடன் செய்து, நாட்டிற்கும் மொழிக்கும் அரசுக்கும் சமூகத்திற்கும் தங்கள் குலத்திற்கும் பக்தியோடு இருப்பதோடு மட்டுமல்லாது அவைகளைத் தொடர்ந்து வளர்த்துவரவும் வேண்டும். 2. மேலும் செட்டிநாட்டுப் பகுதி ஒரு அமைதிப் பூங்காவாகவும் ஆன்மிக நெறி தழைக்கும் இடமாகவும் தர்மமும் சத்தியமும் சாந்தியும் நிலவும் பகுதியாகவும் நிலைத்து ஓங்கும் இடமாகவும் முற்றிலும் மாறி இன்னும் சிறப்புற வேண்டும் என வழிபாடு செய்தல். 3. அனைவரின் குடும்பங்கள் ஒற்றுமையாக வாழ இறைவனிடம் கூட்டுப்பிரார்த்தனை

செய்வது. 4. நகரத்தார்களின் ஒற்றுமையும் செழுமையும் வளமையும், வள்ளன்மையும் கண்ணோட்டப் பண்பும் நாணயமும் என்றும் நிலைபெற்று ஓங்க வேண்டும். 5. மற்ற மதத்தார் மற்றும் சமூகத்தார்களோடு ஒற்றுமையாகவும் சகோதர மனப்பான்மையுடனும் நேசமுடனும் வாழ்ந்து நம் தேசம் உலகில் ஒரு சிறந்த நாடாகப் போற்றப்பட வேண்டும். அதற்கான இறையருளும் மனப்பக்குவமும் பெற வேண்டும்.

என்னுடைய தலைமையிலும் வழிநடத்தலிலும் வெற்றிகரமாக நிறைவேறிய இராமேஸ்வரம் – காசி பாதயாத்திரை முதற்குழு 1983, இரண்டாம் குழு 1990, மூன்றாம் குழு 1997, நான்காம் குழு 2004 இவைகளை அடுத்து 12 ஜோதிர்லிங்கப் பாதயாத்திரை 2007, தேவாரப் பாடல் பெற்ற 267 திருத்தலப் பாதயாத்திரை 2009. அடுத்து, இந்த 21 நாள் பாதயாத்திரை 1–12–2010–ல் தொடங்கி 21–12–2010–ல் நிறைவடைகிறது. நகரத்தார் பெருமக்களின் கோத்திரக் கோயில்களான 9 நகரக் கோயில்களையும் ஊர் நகரச் சிவன் கோயில்களையும் தரிசித்து ஓர் ஆன்மிக எழுச்சி மலர இப்பாதயாத்திரை யில் கலந்து கொள்ளும் அடியார்கள் மனம் உருகி வேண்டிக் கொள்வார்கள்.

இப்பாதயாத்திரைக் குழுவிற்குத் தலைமை ஏற்று வழிநடத்த கானாடுகாத்தான் **காசிஸ்ரீ தேனப்ப செட்டியார்** அவர்கள் முன்வந்துள்ளார்கள். செயலர், பொருளாளராக **காசிஸ்ரீ திருத்தலச் செல்வர் பழ.மாணிக்கம்** அவர்கள் செயல்படுகிறார்கள்.

காசிச்சத்திர நிர்வாகத்திலுள்ள நிர்வாகக்குழு மற்றும் பொதுக்குழு உறுப்பினர்கள் இப்பாதயாத்திரைக் குழுவினருக்கு வேண்டிய உதவிகள், முன்னேற்பாடுகள் செய்ய வேண்டுமாறும் 96 ஊர் நகரத்தார் பெருமக்கள் பாதயாத்திரை மேற்கொள்ளும் அடியார்களுக்கு வேண்டிய உணவு, உறைவிடம் முதலியன வழங்கிச் சிறப்பித்து உதவுமாறும் அன்புடன் கேட்டுக் கொள்கிறேன். முன்னதாகவே தொடர்பு கொள்ள வேண்டுகிறேன். பிள்ளையார்பட்டியில் தொடங்கி 21 நாளில் பிள்ளையார் பட்டியில் நிறைவு பெறும் இந்தப் பாதயாத்திரை இனிது நிறைவேற என் ஆசிகள்.

''முத்தமிழ்ப்பேரறிஞர்'' ''கவிஞர்கோ'' ''பொற்கிழிக்கவிஞர்''
''காசிஸ்ரீ'' ''கயிலைமணி''
அரு. சோமசுந்தரன் M.A., B.T., – குருநாதர்,
செல்: 94431 38196

தொடர்புக்கு முகவரி:

தலைவர்: 'காசிஸ்ரீ' T.C.T. தேனப்பன், பி.இ.,
தூ.கரு.தெரு, கானாடுகாத்தான் – 630 103.
செல்: 94433 29604

செயலர் – பொருளாளர்: 'காசிஸ்ரீ' 'திருத்தலச்செல்வர்'
பழ. மாணிக்கம், பி.இ.,
323, வ.உ.சி. சாலை, காரைக்குடி – 630 001.
செல்: 9444556931

| நாள் | தேதி 2010 | கிழமை | புறப்படும் இடம் | செல்லும் ஊர்கள் தரிசிக்கும் கோயில்கள் | தூரம் கி.மீ. |
|---|---|---|---|---|---|
| 1 | விக்ருதி<br>கார்த்திகை<br>யருஉ<br>01-12 | புதன் | பிள்ளையார்பட்டி | 1. குன்றக்குடி | 3 |
| | | | | 2. துலாவூர் | 2 |
| | | | | 3. குன்றக்குடி | 2 |
| | | | | 4. பாதரக்குடி | 4 |
| | | | | 5. கோவிலூர் | 2 |
| | | | | 6. செக்காலை | 3 |
| | | | | 7. காரைக்குடி | 1 |
| 2 | விக்ருதி<br>கார்த்திகை<br>யகாஉ<br>02-12 | வியாழன் | காரைக்குடி | 1. மாத்தூர் | 6 |
| | | | | 2. இலுப்பக்குடி | 2 |
| | | | | 3. அரியக்குடி | 4 |
| | | | | 4. அமராவதிபுதூர் | 4 |
| | | | | 5. ஆறாவயல் | 6 |
| 3 | விக்ருதி<br>கார்த்திகை<br>யஎஉ<br>03-12 | வெள்ளி | ஆறாவயல் | 1. தாணிச்சாவூரணி | 4 |
| | | | | 2. இராம்நகர் | 2 |
| | | | | 3. நால்வர் கோயில், தேவகோட்டை | 6 |
| 4 | விக்ருதி<br>கார்த்திகை<br>யஅஉ<br>04-12 | சனி | நால்வர்கோயில்<br>தேவகோட்டை | 1. கல்லுப்பட்டி | 7 |
| | | | | 2. கல்லல் | 10 |
| | | | | 3. அரண்மனை சிறுவயல் | 4 |
| 5 | விக்ருதி<br>கார்த்திகை<br>யசெஉ<br>05-12 | ஞாயிறு | அரண்மனை சிறுவயல் | 1. வெற்றியூர் | 5 |
| | | | | 2. கொ.அழகாபுரி | 9 |
| | | | | 3. நாட்டரசன்கோட்டை | 4 |
| | | | | 4. காளையார்மங்கலம் | 4 |

| நாள் | தேதி 2010 | கிழமை | புறப்படும் இடம் | செல்லும் ஊர்கள் தரிசிக்கும் கோயில்கள் | தூரம் கி.மீ. |
|---|---|---|---|---|---|
| 6 | விக்ருதி கார்த்திகை உயஉ 06-12 | திங்கள் | காளையார் மங்கலம் | 1. சோழபுரம் விலக்கு<br>2. சக்கந்தி<br>3. சோழபுரம்<br>4. ஒக்கூர் | 3<br>7<br>8<br>2 |
| 7 | விக்ருதி கார்த்திகை உயகஉ 07-12 | செவ்வாய் | ஒக்கூர் | 1. கீழப்பூங்குடி<br>2. ஒக்கூர்<br>3. நடராஜபுரம்<br>4. பனங்குடி<br>5. பாகனேரி | 4<br>4<br>9<br>2<br>2 |
| 8 | விக்ருதி கார்த்திகை உயஉஉ 08-12 | புதன் | பாகனேரி | 1. மதகுபட்டி<br>2. அலவாக்கோட்டை<br>3. மதகுபட்டி<br>4. சொக்கநாதபுரம்<br>5. செம்பனூர் | 6<br>3<br>2<br>6<br>5 |
| 9 | விக்ருதி கார்த்திகை உயஙஉ 09-12 | வியாழன் | செம்பனூர் | 1. கல்லல்<br>2. மானகிரி<br>3. நாச்சியாபுரம்<br>4. சிறாவயல்<br>5. நாச்சியாபுரம் | 4<br>8<br>6<br>2<br>2 |
| 10 | விக்ருதி கார்த்திகை உயசஉ 10-12 | வெள்ளி | நாச்சியாபுரம் | 1. கண்டரமாணிக்கம்<br>2. பட்டமங்கலம்<br>3. கருங்குளம்<br>4. பட்டமங்கலம் | 5<br>3<br>2<br>2 |

| நாள் | தேதி 2010 | கிழமை | புறப்படும் இடம் | செல்லும் ஊர்கள் தரிசிக்கும் கோயில்கள் | தூரம் கி.மீ. |
| --- | --- | --- | --- | --- | --- |
| | | | | 5. திருப்பத்தூர் | 5 |
| | | | | 6. கண்டவராயன்பட்டி | 5 |
| 11 | விக்ருதி | சனி | கண்டவராயன்பட்டி | 1. மகிபாலன்பட்டி | 3 |
| | கார்த்திகை | | | 2. ஆ. தெக்கூர் | 7 |
| | உயருஉ | | | 3. நெற்குப்பை | 3 |
| | 11-12 | | | 4. வேந்தன்பட்டி | 4 |
| | | | | 5. மேலைச்சிவபுரி | 1 |
| | | | | 6. வலையபட்டி | 5 |
| 12 | விக்ருதி | ஞாயிறு | வலையபட்டி | 1. உலகம்பட்டி | 5 |
| | கார்த்திகை | | | 2. கொப்பனாபட்டி | 6 |
| | உயகாஉ | | | 3. பொன்புதுப்பட்டி | 4 |
| | 12-12 | | | 4. வேகுப்பட்டி | 3 |
| | | | | 5. பூலாங்குறிச்சி | 3 |
| | | | | 6. செவ்வூர் | 3 |
| 13 | விக்ருதி | திங்கள் | செவ்வூர் | 1. மிதிலைப்பட்டி | 4 |
| | கார்த்திகை | | | 2. ராங்கியம் | 2 |
| | உயஎஉ | | | 3. குருவிக்கொண்டான்பட்டி | 2 |
| | 13-12 | | | 4. இளையாத்தக்குடி | 2 |
| | | | | 5. இரணியூர் | 3 |
| | | | | 6. ஆவணிப்பட்டி | 2 |
| | | | | 7. விராமதி | 4 |
| | | | | 8. கீழச்சிவல்பட்டி | 2 |

| நாள் | தேதி 2010 | கிழமை | புறப்படும் இடம் | செல்லும் ஊர்கள் தரிசிக்கும் கோயில்கள் | தூரம் கி.மீ. |
|---|---|---|---|---|---|
| 14 | விக்ருதி<br>கார்த்திகை<br>உயஅஉ<br>14-12 | செவ்வாய் | கீழச்சிவல்பட்டி | 1. பி.அழகாபுரி<br>2. சிறுகூடல்பட்டி<br>3. வயிரவன்பட்டி<br>4. நேமம்<br>5. பலவான்குடி<br>6. ஆ. முத்துப்பட்டணம்<br>7. ஆத்தன்குடி<br>8. கோனாபட்டு | 1<br>5<br>2<br>6<br>4<br>-<br>2<br>1 |
| 15 | விக்ருதி<br>கார்த்திகை<br>உயசெ உ<br>15-12 | புதன் | கோனாபட்டு | 1. திருமயம்<br>2. நெய்க்கோணம்<br>3. வீராச்சிலை<br>4. பனையப்பட்டி<br>5. குழிபிறை<br>6. நற்சாந்துபட்டி | 8<br>5<br>1<br>4<br>2<br>7 |
| 16 | விக்ருதி<br>மார்கழி<br>க உ<br>16-12 | வியாழன் | நற்சாந்துபட்டி | 1. புதுக்கோட்டை<br>2. அரிமளம் | 10<br>12 |
| 17 | விக்ருதி<br>மார்கழி<br>உஉ<br>17-12 | வெள்ளி | அரிமளம் | 1. ராயவரம்<br>2. கடியாபட்டி<br>3. கொத்தமங்கலம்<br>4. கொ.லெட்சுமிபுரம்<br>5. தேனிபட்டி | 7<br>4<br>5<br>1<br>8 |

| நாள் | தேதி 2010 | கிழமை | புறப்படும் இடம் | செல்லும் ஊர்கள் தரிசிக்கும் கோயில்கள் | தூரம் கி.மீ. |
|---|---|---|---|---|---|
| 18 | விக்ருதி<br>மார்கழி<br>ஙஉ<br>18-12 | சனி | தேனிபட்டி | 1. கொ.லெட்சுமிபுரம்<br>2. கானாடுகாத்தன்<br>3. நேமத்தான்பட்டி<br>4. கானாடுகாத்தான்<br>5. பள்ளத்தூர்<br>6. கண்டனூர் | 8<br>3<br>2<br>2<br>3<br>7 |
| 19 | விக்ருதி<br>மார்கழி<br>சஉ<br>19-12 | ஞாயிறு | கண்டனூர் | 1. புதுவயல்<br>2. கண்டனூர்<br>3. கோ.அழகாபுரி<br>4. கோட்டையூர்<br>5. வேலங்குடி<br>6. சூரக்குடி<br>7. சொக்கலிங்கம்புதூர்<br>8. உ.சிறுவயல் | 3<br>3<br>2<br>2<br>1<br>7<br>3<br>4 |
| 20 | விக்ருதி<br>மார்கழி<br>ரு உ<br>20-12 | திங்கள் | உ.சிறுவயல் | 1. குன்றக்குடி<br>2. பிள்ளையார்பட்டி | 3<br>3 |
| 21 | விக்ருதி<br>மார்கழி<br>கா உ<br>பௌர்ணமி<br>21-12 | செவ்வாய் | பிள்ளையார்பட்டி | 1. கிரிவலம்<br>2. குன்றக்குடி<br>3. கிரிவலம்<br>4. பிள்ளையார்பட்டி | 2<br>3<br>2<br>3 |

**நகரத்தார் முதலில் 96- ஊர்களில் வாழ்ந்தனர்.**
**ஆகவே அவர்களுக்கு**
**96 ஊர் நகரத்தார் என்ற பெயர் ஏற்பட்டது.**
**பிறகு பல ஊர்களை விட்டு வேறு ஊர்களில் குடியேறினர்.**
**எனவே இப்பொழுது**
**எல்லா ஊர்களையும் கூட்டினால் 96-க்கு மேல் வரும்**

| நகரத்தார்கள் விட்டு வந்த சில ஊர்கள் | | |
|---|---|---|
| 1. ஆற்காடு | 7. சித்தாட்டிவயல் | 13. பக்கிரிப்பட்டி |
| 2. ஆலங்குடி | 8. சித்திவயல் | 14. பழைய ஆத்தங்குடி |
| 3. கீரணிப்பட்டி | 9. செங்கல்கோவில் | 15. மல்லுப்பட்டி |
| 4. கீழக்கோட்டை | 10. செப்பவயல் | 16. மேலமாகாணம் |
| 5. கூத்தலூர் | 11. செவரக்கோட்டை | 17. வாரியப்பட்டி |
| 6. கொரட்டி | 12. சேந்தணி | 18. மற்றும் உறுதிக்கோட்டை மேலும் பல |

**நகரத்தார் கிராமங்கள் 200 ஆண்டுகளுக்கு முன்**
**(திரு.மா.சந்திரமூர்த்தி எழுதியுள்ள**
**'நகரத்தார் மரபும் பண்பாடும்' புத்தகப்படி**

| | | | |
|---|---|---|---|
| 1. | அரணிக்கோட்டை | 15. | உறங்கான்பட்டி |
| 2. | அழகிச்சிப்பட்டி | 16. | ஓணான்குடி |
| 3. | ஆத்திக்காடு | 17. | ஓலைக்குடிபட்டி |
| 4. | ஆற்காடு | 18. | கத்தப்பட்டு கருங்குளம் |
| 5. | ஆய்ங்குடி | 19. | கத்தாளைப்பட்டி |
| 6. | ஆலங்குடி | 20. | கடியாவயல் |
| 7. | ஆலம்பட்டு | 21. | கம்பனூர் |
| 8. | இடையப்பட்டி | 22. | கம்பங்காடு |
| 9. | இறகுசேரி | 23. | கருணாக்குடி |
| 10. | இலங்குடி | 24. | கண்ணன்கோட்டை |
| 11. | இலுப்பைக்குடி | 25. | கடகம்பட்டி |
| 12. | இளையாத்தக்குடி | 26. | கண்ணனூர் |
| 13. | உடப்பன்பட்டி | 27. | கல்லிவயல் |
| 14. | உதையாச்சி | 28. | களபம் |

29. காவனவயல்
30. கானப்பூர்
31. கைக்குளம்
32. கீரணிப்பட்டி
33. கீழக்கோட்டை
34. கீழமாகாணம்
35. குருவிக்கிணாம்பட்டி
36. குளத்துப்பட்டி
37. கூத்தலூர்
38. கொ.அழகாபுரி
39. கொல்லங்குடி
40. கொரட்டி
41. கொன்னையூர்
42. கௌரிப்பட்டினம்
43. சாக்குக்கோட்டை
44. சாத்துக்குளி
45. சாலூர்
46. சித்தாட்டிவயல்
47. சித்திவயல்
48. சீராத்தக்குடி
49. சுண்டைக்காடு
50. சூரைக்குளம்
51. செங்கல்கோவில்
52. செப்பவயல்
53. செம்பொன்மாரி
54. செவரக்கோட்டை
55. செவலூர்
56. செஞ்சை
57. சேந்தணி
58. தட்டட்டி
59. தளக்காவூர்
60. தாஞ்சூர்
61. திருக்கோளக்குடி
62. துவார்
63. தெண்ணீர்வயல்
64. தேக்காட்டூர்
65. தேவிரிப்பட்டி
66. நகரம்பட்டி
67. நடுவிற்கோட்டை
68. நெய்க்குளம்
69. நெய்வாசல்பட்டி
70. நேமம்
71. பக்கிரிப்பட்டி
72. பட்டணம்
73. பரவிப்பட்டணம்
74. பரியன்வயல்
75. பழைய ஆத்தங்குடி
76. பாலையப்பட்டி
77. புலிக்குத்தி
78. புலிக்குளம்
79. புளியங்குடி
80. பெருங்கானூர்
81. பேயன்பட்டி
82. பொய்யலூர்
83. பொன்னாங்குடி
84. மலம்பட்டி
85. மல்லாக்கோட்டை
86. மல்லூப்பட்டி
87. முனையத்தை
88. மேலமங்கலம்
89. மேலமாகாணம்
90. வடகாட்டுப்பட்டி
91. வாணியங்குடி
92. வாரியப்பட்டி
93. வயிரவன்பட்டி
94. வெளியாறு
95. வேங்காவயல்
96. வித்திராவயல்

# நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் வாழும் ஊர்கள் - தொலைவும் வழியும்

| எண். | ஊர் | தொலைபேசி குறியீடு | அஞ்சல் குறியீடு | காரைக்குடியில் இருந்து தொலைவு (கி.மீ.) | காரைக்குடியிலிருந்து செல்லும் வழி |
|---|---|---|---|---|---|
| 1. | அமராவதிபுதூர் | 4565 | 630 301 | 7 | தேவகோட்டை சாலையில் |
| 2. | அரண்மனைசிறுவயல் | 4565 | 630 305 | 26 | கோவிலூர், மானகிரி, கல்லல்வழி |
| 3. | அரிமளம் | 4333 | 622 201 | 33 | பள்ளத்தூர், கொத்தமங்கலம் வழி |
| 4. | அரியக்குடி | 4565 | 630 202 | 5 | தென்கிழக்கில் |
| 5. | அலவாக்கோட்டை | 4575 | 630 564 | 35 | கோவிலூர், மானகிரி, கல்லல், செம்பனூர், மதகுபட்டிவழி |
| 6. | அழகாபுரி (கோட்டையூர்) | 4565 | 630 106 | 10 | கோட்டையூர் வழியாக, அறந்தாங்கி சாலையில் |
| 7. | அழகாபுரி (கொல்லங்குடி) | 4565 | 630 561 | 42 | கல்லல், அரண்மனை சிறுவயல் சாத்தரசன்பட்டி, நாட்டரசன்கோட்டை காளையார்கோயில் சாலையில் |
| 8. | அழகாபுரி (பில்லமங்கலம்) | 4333 | 630 205 | 24 | கோவிலூர், பாதரக்குடி, குன்றக்குடி, நேமம் வழி |
| 9. | ஆத்தங்குடி | 4565 | 630 101 | 13 | உ.சிறுவயல், ஆத்தங்குடி முத்துப்பட்டணம் வழி |

| எண். | ஊர் | தொலைபேசி குறியீடு | அஞ்சல் குறியீடு | காரைக்குடியில் இருந்து தொலைவு (கி.மீ.) | காரைக்குடியிலிருந்து செல்லும் வழி |
|---|---|---|---|---|---|
| 10. | ஆத்திக்காடு தெற்கூர் | 4577 | 630 201 | 34 | திருப்பத்தூர் – பொன்னமராவதி சாலையில் |
| 11. | ஆவினிப்பட்டி | 4577 | 630 205 | 30 | குன்றக்குடி, நேமம், பி.அழகாபுரி, கீழச்சிவல்பட்டி இளையாற்றங்குடி வழியாக |
| 12. | ஆறாவயல் | 4561 | 630 314 | 10 | தேவகோட்டைச் சாலையில் அமராவதிபுதூர் கடந்த பிறகு இடப்புறம் கிளைச்சாலையில் |
| 13. | இராங்கியம் | 4333 | 622 409 | 36 | குன்றக்குடி, நேமம், பி.அழகாபுரி, கீழச்சிவல்பட்டி ஆவினிப்பட்டி, குருவிக்கொண்டான்பட்டி வழி |
| 14. | இராயவரம் | 4333 | 622 506 | 26 | பள்ளத்தூர், கொத்தமங்கலம் வழி |
| 15. | இலட்சுமிபுரம் (கொ.மங்கலம்) | 4565 | 630 105 | 20 | பள்ளத்தூரிலிருந்து கிளைச்சாலையில் |
| 16. | இலட்சுமிபுரம் (விராச்சிலை) | 4333 | 622 412 | 38 | திருமயத்திலிருந்து கிளைச்சாலையில் |
| 17. | உலகம்பட்டி | 4333 | 622 410 | 54 | திருப்பத்தூர், நெற்குப்பை, பொன்னமராவதி வழி |
| 18. | ஒக்கூர் | 4575 | 630 557 | 36 | கல்லல், மதகுபட்டி, சிவகங்கை சாலையில் |
| 19. | கடியாபட்டி | 4333 | 622 505 | 25 | பள்ளத்தூர், கொத்தமங்கலம் வழி |
| 20. | கண்டரமாணிக்கம் | 4577 | 630 204 | 16 | கல்லல் சாலையில் ஆலங்குடி அருகே கிளைச்சாலையில் |

| எண். | ஊர் | தொலைபேசி குறியீடு | அஞ்சல் குறியீடு | காரைக்குடியில் இருந்து தொலைவு (கி.மீ.) | காரைக்குடியிலிருந்து செல்லும் வழி |
|---|---|---|---|---|---|
| 21. | கண்டவராயன்பட்டி | 4577 | 630 203 | 30 | திருப்பத்தூர் சென்று பொன்னமராவதி வழி |
| 22. | கண்டனூர் | 4565 | 630 104 | 13 | கோட்டையூர், அழகாபுரி வழி அறந்தாங்கி சாலையில் |
| 23. | கருங்குளம் (புதூர்) | 4577 | 630 204 | 27 | கல்லல் சாலை ஆலங்குடிக்கு அருகே பிரியும் கிளைச் சாலையில் கண்டரமாணிக்கம் பட்டமங்கலம் வழி |
| 24. | கல்லல் | 4565 | 630 304 | 18 | கோவிலூர், மானகிரி வழியாக |
| 25. | கல்லுப்பட்டி | 4565 | 630 306 | 10 | தேவகோட்டை சாலையில், அமராவதிபுதூர் தாண்டி வலப்புறம் கிளைச்சாலையில் |
| 26. | காரைக்குடி | 4565 | 630 001 | - | - |
| 27. | காளையார்மங்கலம் | 4575 | 630 557 | 40 | கல்லல் வழியாக மதகுபட்டியை அடைந்து சிவகங்கை சாலையில் இடதுபுறம் கிளைச்சாலையில் |
| 28. | கானாடுகாத்தான் | 4565 | 630 103 | 16 | கோட்டையூர், பள்ளத்தூர் வழியாக திருச்சி சாலையில் |
| 29. | கீழச்சிவல்பட்டி | 4577 | 630 205 | 24 | கோவிலூர், பாதரக்குடி, குன்றக்குடி நேமம் வழியாக |

| எண். | ஊர் | தொலைபேசி குறியீடு | அஞ்சல் குறியீடு | காரைக்குடியில் இருந்து தொலைவு (கி.மீ.) | காரைக்குடியிலிருந்து செல்லும் வழி |
|---|---|---|---|---|---|
| 30. | கீழப்பூங்குடி | 4575 | 630 552 | 40 | கல்லல், மதகுபட்டி வழியாக ஒக்கூர் சென்று மேலூர் சாலையில் |
| 31. | குருவிக் கொண்டான்பட்டி | 4333 | 622 415 | 33 | குன்றக்குடி, நேமம், கீழச்சிவல்பட்டி, ஆவினிப்பட்டி வழி |
| 32. | குழிபிறை | 4333 | 622 402 | 45 | திருமயம் கிளைச்சாலையில் இலட்சுமிபுரம், விராச்சிலை, பனையபட்டி வழியாக |
| 33. | கொத்தமங்கலம் | 4565 | 630 105 | 21 | பள்ளத்தூர், இலட்சுமிபுரம் வழியாக |
| 34. | கொப்பனாபட்டி | 4333 | 622 401 | 55 | திருப்பத்தூர், பொன்னமராவதி வழியாக பொன்னமராவதி – புதுக்கோட்டை சாலையில் |
| 35. | கோட்டையூர் | 4565 | 630 106 | 8 | காரைக்குடி – திருச்சி சாலையில் |
| 36. | கோனாபட்டு | 4565 | 622 503 | 15 | உசிறுவயல், ஆ.முத்துப்பட்டணம், ஆத்தங்குடி வழியாக |
| 37. | சக்கந்தி | 4575 | 630 560 | 56 | கல்லல், அ.சிறுவயல், சாத்தரசன்பட்டி, நாட்டரசன்கோட்டை வழியாகச் சிவங்கை – மேலூர் சாலையில் |
| 38. | சிறாவயல் | 4577 | 630 214 | 14 | மானகிரி, திருப்பத்தூர் வழியில் நாச்சியாபுரம் விலக்கு தாண்டியதும் வலப்புறம் கிளைச்சாலையில் |

| எண். | ஊர் | தொலைபேசி குறியீடு | அஞ்சல் குறியீடு | காரைக்குடியில் இருந்து தொலைவு (கி.மீ.) | காரைக்குடியிலிருந்து செல்லும் வழி |
|---|---|---|---|---|---|
| 39. | சிறுகூடல்பட்டி | 4577 | 630 215 | 18 | குன்றக்குடி, பிள்ளையார்பட்டி, வயிரவன்பட்டி வழியாக |
| 40. | சிறுவயல் (உய்யக்கொண்டான்) | 4577 | 630 208 | 5 | கழனிவாசல் வழியாக வடமேற்கில் |
| 41. | செம்பனூர் | 4565 | 630 313 | 27 | கல்லல் மதகுபட்டி சாலையில் |
| 42. | செவ்வூர் | 4333 | 622 417 | 40 | திருப்பத்தூர், கண்டவராயன்பட்டி வழியாக |
| 43. | சொக்கநாதபுரம் | 4577 | 630 313 | 32 | கல்லல் மதகுபட்டி சாலையில் |
| 44. | சொக்கலிங்கம்புதூர் | 4565 | 630 101 | 9 | கழனிவாசல், நகர சூரக்குடி வழியாக |
| 45. | சோழபுரம் | 4563 | 630 553 | 44 | கல்லல் வழியாக மதகுபட்டி - சிவகங்கை சாலையில் |
| 46. | தாணிச்சாவூரணி | 4561 | 630 314 | 14 | தேவகோட்டை சாலையில், ராம்நகரிலிருந்து இடதுபுறச் சாலையில் |
| 47. | தேவகோட்டை | 4561 | 630 302 | 16 | காரைக்குடி - இராமேசுவரம் சாலையில் |
| 48. | தேனிபட்டி | 4333 | 622 202 | 32 | கோட்டையூர், அழகாபுரி, கண்டனூர், புதுவயல்வழி |

| எண். | ஊர் | தொலைபேசி குறியீடு | அஞ்சல் குறியீடு | காரைக்குடியில் இருந்து தொலைவு (கி.மீ.) | காரைக்குடியிலிருந்து செல்லும் வழி |
|---|---|---|---|---|---|
| 49. | நடராஜபுரம் | 4575 | 630 555 | 32 | கல்லல், அ.சிறுவயல், சாத்தரசன்பட்டி, நடராசபுரம் விலக்கு வழியாக |
| 50. | நற்சாந்துபட்டி | 4333 | 622 404 | 42 | திருமயம், வி.இலட்சுமிபுரம் வழியாக |
| 51. | நாச்சியாபுரம் | 4577 | 630 207 | 12 | மானகிரி, திருப்பத்தூர் சாலையில் |
| 52. | நாட்டரசன்கோட்டை | 4575 | 630 556 | 38 | கல்லல், அரண்மனை சிறுவயல், சாத்தரசன்பட்டி வழி |
| 53. | நெற்குப்பை | 4577 | 622 405 | 40 | திருப்பத்தூர் - பொன்னமராவதி சாலையில் |
| 54. | நேமத்தான்பட்டி | 4565 | 630 103 | 18 | காரைக்குடி - திருச்சி சாலையில் |
| 55. | பட்டமங்கலம் | 4577 | 630 310 | 24 | கல்லல் சாலையில், ஆலங்குடிக்கு அருகே பிரியும் கிளைச்சாலையில் கண்டரமாணிக்கம் வழியாக |
| 56. | பலவான்குடி | 4565 | 630 208 | 9 | உ.சிறுவயல் வழியாக |
| 57. | பள்ளத்தூர் | 4565 | 630 107 | 15 | காரைக்குடி - திருச்சி சாலையில் |

| எண். | ஊர் | தொலைபேசி குறியீடு | அஞ்சல் குறியீடு | காரைக்குடியில் இருந்து தொலைவு (கி.மீ.) | காரைக்குடியிலிருந்து செல்லும் வழி |
|---|---|---|---|---|---|
| 58. | பனங்குடி | 4637 | 630 555 | 35 | கல்லல், அ.சிறுவயல், சாத்தரசன்பட்டி, நடராஜபுரம் வழி |
| 59. | பனையப்பட்டி | 4333 | 622 406 | 43 | திருமயம், வி. இலட்சுமிபுரம், விராச்சிலை வழியாக |
| 60. | பாகனேரி | 4575 | 630 558 | 29 | கல்லல், சொக்கநாதபுரம் - சிவகங்கை சாலையில் |
| 61. | பிள்ளையார்பட்டி | 4577 | 630 214 | 12 | குன்றக்குடி, திருப்பத்தூர் சாலையில் |
| 62. | புதுப்பட்டி | 4333 | 622 408 | 44 | திருப்பத்தூர், பொன்னமராவதி வழி |
| 63. | புதுவயல் | 4565 | 630 108 | 16 | கோட்டையூர், அழகாபுரி, கண்டனூர் - அறந்தாங்கி சாலை |
| 64. | பூலாங்குறிச்சி | 4577 | 622 413 | 42 | திருப்பத்தூர், கண்டவராயன்பட்டி, செவ்வூர் வழி |
| 65. | மகிபாலன்பட்டி | 4577 | 630 217 | 36 | திருப்பத்தூர், கண்டவராயன்பட்டி வழியாக |
| 66. | மதகுபட்டி | 4565 | 630 553 | 35 | கல்லல், செம்பனூர், சொக்கநாதபுரம் வழியாக |

| எண். | ஊர் | தொலைபேசி குறியீடு | அஞ்சல் குறியீடு | காரைக்குடியில் இருந்து தொலைவு (கி.மீ.) | காரைக்குடியிலிருந்து செல்லும் வழி |
|---|---|---|---|---|---|
| 67. | மானகிரி | 4565 | 630 307 | 6 | கோவிலூர், நாச்சியாபுரம் சாலை |
| 68. | மிதிலைப்பட்டி | 4333 | 622 409 | 38 | குன்றக்குடி, நேமம், கீழச்சிவல்பட்டி, இராங்கியம் வழி |
| 69. | முத்துப்பட்டணம். ஆ | 4565 | 630 101 | 13 | உ.சிறுவயல், பலவான்குடி வழியாக |
| 70. | மேலைச்சிவபுரி | 4333 | 622 403 | 46 | திருப்பத்தூர் - நெற்குப்பை அங்கிருந்து கிளைச்சாலை இடப்புறம் |
| 71. | வலையபட்டி | 4333 | 622 411 | 48 | திருப்பத்தூர், பொன்னமராவதி வழி |
| 72. | விராமதி | 4577 | 630 212 | 24 | குன்றக்குடி, நேமம், கீழச்சிவல்பட்டி வழியாக |
| 73. | விராச்சிலை | 4333 | 622 412 | 40 | திருமயம், வி.இலட்சுமிபுரம் வழி |
| 74. | வெற்றியூர் | 4565 | 630 305 | 30 | கல்லல் வழியாக அ.சிறுவயல் அடைந்து அங்கிருந்து காளையார்கோவில் சாலையில் வெற்றியூர் விலக்கு |
| 75. | வேகுப்பட்டி | 4333 | 622 408 | 45 | திருப்பத்தூர், கண்டவராயன்பட்டி, செவ்வூர், பூலாங்குறிச்சி வழி |
| 76. | வேந்தன்பட்டி | 4333 | 622 419 | 45 | திருப்பத்தூர் வழியாக நெற்குப்பை அங்கிருந்து இடது கிளைச்சாலை |

# 4. நகரத்தார் 96 ஊர்ப் பாதயாத்திரை

**(காசி ஸ்ரீ 96 ஊர் பழ.மாணிக்கம் B.E. செயலர்)**

*(96 ஊர் நகரத்தாரின் 9 நகரக் கோயில்கள் மற்றும் 96 ஊர் நகரத்தார் இப்பொழுது வாழும் 76 ஊர்க்கோயில்கள் பாதயாத்திரை பற்றிய வரலாறு)*

மேன்மை பொருந்திய நகரத்தார் பெருமக்கள் காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து குடிபெயர்ந்து செட்டிநாட்டுப் பகுதிக்கு வந்தபின் 96 ஊர்களில் வீடு கட்டிக் கொண்டு வாழ்ந்து வந்திருக்கிறார்கள். அவ்வாறு வாழ்ந்து வரும் காலத்தில் சிவ வழிபாடு செய்வதற்கு ஒவ்வொரு ஊரிலும் சிவன் கோயில் கட்டிக் கொண்டு தவறாமல் நித்திய பூசைகள் நடத்தி வழிபட்டு வந்திருக்கிறார்கள். சுமார் 1250 ஆண்டுகளுக்கு முன்னர் நகரத்தார் பெருமக்களின் கோத்திரக் கோயில்களான 9 நகரக் கோயில்களையும் அக்காலப் பாண்டிய மன்னரிடம் கேட்டு உரிமைப் பட்டயம் பெற்று இன்றுவரை அவரவர் கோயில்கள் திருப்பணி மற்றும் குடமுழுக்குச் செய்து தினந்தோறும் பூசைகள் செய்து வழிபாடு செய்து வருகிறார்கள். குறிப்பிட்ட கால இடைவெளிகளில் காரியத்தனம் பார்க்க, காரியக்காரர்களைத் தேர்ந்தெடுத்து, சரியான நிர்வாகம் நடத்தி வருகிறார்கள். அதுபோல் தங்கள் தங்கள் ஊர்க்கோயில்களிலும் நிர்வாகமுறை ஏற்படுத்திக் கொண்டு சரியாகவும் அழகாகவும் திறமையாகவும் நிர்வாகம் செய்து வருகிறார்கள்.

கோயில்களுக்கான அன்றாடச் செலவுகள் திருவிழா மற்றும் சுவாமி புறப்பாடு காலங்களில் உபயதாரர்களை

ஏற்பாடு செய்து, அவர்களிடமிருந்து பொருள் பெற்று, விழாக்களைச் சிறப்பாகச் செய்து வருகிறார்கள். மேலும் மற்ற தெய்வ, சிறுதெய்வ, குலதெய்வ ஆலயங்களிலும் திருப்பணிகள் செய்தும் திருவிழாக்கள் நடத்தியும் வழிபாடு செய்துகொண்டு இருக்கிறார்கள். மேலும் தேவாரப் பாடல்பெற்ற தலங்கள் 276-ல் அதிகமான ஆலயங்களில் பலவிதமான கோயில் திருப்பணிகள் மற்றும் திருவிழாக்கள், குடமுழுக்குகள் முதலியன செய்திருக்கிறார்கள்.

இன்றும் செய்து கொண்டிருக்கிறார்கள். முன்னோர் கள் சென்ற வழிகளை மறவாது பின்பற்றி வாழும் நெறி அறிந்து வாழ்வாங்கு வாழ்ந்துவரும் நகரத்தார் பெரு மக்கள் பெருமைக்கும் போற்றுதலுக்கும் உரியவர்கள். ஆகவே அவர்கள் போற்றி வழிபாடு செய்துவரும் 9 நகரக்கோயில்களும் மற்றும் அவர்கள் வாழ்ந்து வரும் ஊர்க்கோயில்களும் பாடல்பெற்ற தலங்களுக்கு ஒப்பானவை என்றே கருதலாம். குருநாதர் அருசோ அவர்கள் 96 ஊர்களையும் பாடி வாழ்த்தி இருக்கிறார். மேலும் அனைத்து நகரத்தார் பெருமக்களுக்கும் நகரத்தார் பெண்டிர்களுக்கும் இறை உணர்வையும் நல்வழிகளையும் உபதேசம் செய்யும் வரலாற்றுச் சிறப்பு மிக்க குருபீடங்களான பாதரக்குடி துழாவூர், கோயிலூர் மடங்களும் குன்றக்குடி சண்முகநாதன் கோயிலும் சிறப்பு மிக்கவை என்று கருதலாம். ஆகவே இவற்றையும் பாடல்பெற்ற தலங்களுக்கு ஒப்பானவை என்று எடுத்துக்கொள்ளலாம். இவற்றைப் பற்றியும் குருநாதர் அருசோ பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது.

தமிழ்நாட்டில் அமைந்துள்ள தேவாரப் பாடல்பெற்ற 267 தலங்களுக்கும் 2009-ம் ஆண்டு (ஜனவரி-ஜூன்)

19அடியார்கள் சேர்ந்து புண்ணியபாதயாத்திரை செய்து வந்துள்ளார்கள். அப்புனித யாத்திரை இராமேஸ்வரத் தில் தொடங்கி திருக்காளத்தியில் நிறைவு செய்யப் பெற்றது. அதனைத் தொடர்ந்து நகரத்தார் வாழும் 96 ஊர்க்கோயில்கள், 9 நகரக்கோயில்கள், 3 மடங்கள் மற்றும் அனைத்து நகரத்தார்களும் போற்றி வணங்கும் குன்றக்குடி கோயில் ஆகியவைகளுக்கும் பாதயாத்திரை செய்து வணங்கிச் சிறப்பிக்க வேண்டுமென்ற ஒரு எண்ணம் தோன்றியது. அந்த எண்ணம் நிறைவேற 2010ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் பாதயாத்திரை மேற்கொண்டு 96 ஊர் நகரத்தார்களையும் அவர்கள் செய்த மகோன்னதமான தெய்வ மற்றும் சமூகத் திருப்பணிகளையும் போற்றிப் பெருமைப்படுத்திச் சிறப்பிக்க இறையருள் கூட்டுவித்துள்ளது. இந்த யாத்திரைக்கு குருநாதர் அரு. சோமசுந்தரன் (அருசோ) அவர்கள் வழிகாட்டியும் தொடங்கி வைத்தும் ஆசிகள் வழங்கியும் உள்ளார்கள். அவர்களுக்கு எங்களின் வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கி றோம். இந்தப் பாதயாத்திரையால் செட்டிநாட்டுப் பகுதியில் ஆன்மிக எழுச்சி ஏற்பட அவர்கள் துணை செய்து உள்ளார்கள்.

இந்தப் பாதயாத்திரையின்போது வழிநடைப்பாடலாக வும் நகரத்தார் ஊர்க்கோயில்களில் பாடுவதற்காகவும் குருநாதர் அருசோ அவர்கள் இயற்றிய பாடல் மிகச் சிறப்பானது. அதனை எங்கும் பாடினோம். அனை வருக்கும் அது மனப்பாடம்.

இந்தச் சமயத்தில் குருநாதர் பொற்கிழிக்கவிஞர் அருசோ அவர்களின் தலைமையிலும் வழிகாட்டுதலின்

பேரிலும் நடைபெற்ற வரலாற்றுச் சிறப்புமிக்க பாதயாத்திரைகள் மற்றும் திருவாசக முற்றோதல், நாலாயிரத் திவ்வியப்பிரபந்தத் தொடர் முற்றோதல் மற்றும் குருபூசைகள் மற்றும் இராமாயணச் சொற்பொழிவுகள் ஆகிய ஆன்மிக எழுச்சி பெறச் செய்யும் அரிய பணிகள் பற்றிச் சிந்திக்கலாம்.

1. அறுபடை வீடுகளில் 4-வது படை வீடான திருத்தணி பாதயாத்திரை தொடக்கம் 1976. ஆண்டுதோறும் சென்னையிலிருந்து நடைபெற்று வருகிறது. தலைவர் காசிஸ்ரீராகவன் செட்டியார் சொக்கநாதபுரம். தற்போதைய தலைவர் திரு ஆண்டான் செட்டி புதுவயல்.

2. அறுபடை வீடுகளில் 2-வது படைவீடான திருச்செந்தூர் பாதயாத்திரை தொடக்கம் 1976. ஆண்டு தோறும் தேவகோட்டையிலிருந்து நடைபெற்று வருகிறது. தலைவர் அருசோ, துணைத்தலைவர் ந.காசிநாதன் தேவகோட்டை.

3. அறுபடை வீடுகளில் 6-வது படைவீடான சுவாமிமலை பாதயாத்திரை, இடைவெளிவிட்டு தேவகோட்டையிலிருந்து நடைபெற்று வருகிறது. தலைவர் திரு. நவகோடி நாராயணன், தேவகோட்டை.

4. அறுபடை வீடுகளில் முதல் படைவீடான திருப்பரங்குன்றம் பாதயாத்திரை.
இடைவெளிவிட்டு தேவகோட்டையிலிருந்து நடைபெற்று வருகிறது. தலைவர் திரு.நவகோடி நாராயணன், தேவகோட்டை.

5. அறுபடை வீடுகளில் 5ஆம் படைவீடான பழமுதிர் சோலை (குன்றுதோர் ஆடல்) பாதயாத்திரை ஆண்டுதோறும் தேவகோட்டையிலிருந்து ஆடி மாதம் நடைபெறுகிறது. தலைவர் திரு.நவகோடி நாராயணன், தேவகோட்டை.

6. ஆறுபடைவீடுகளில் 4-வது படைவீடான திருத்தணி பாதயாத்திரை. இடைவெளிவிட்டுத் தேவகோட்டையிலிருந்து நடைபெற்று வருகிறது. தலைவர் திரு. நவகோடி நாராயணன், தேவ கோட்டை.

7. இராமேஸ்வரம் காசி பாதயாத்திரை தொடக்கம் மற்றும் முதற்குழு 1983. தலைவர் திரு அருசோ.

8. இராமேஸ்வரம் – காசி பாதயாத்திரை இரண்டாம் குழு 1990. தலைவர் திரு. வயிரவன், தேவகோட்டை.

9. இராமேஸ்வரம் – காசி பாதயாத்திரை மூன்றாம் குழு 1997. தலைவர் திரு ந.காசிநாதன், தேவகோட்டை.

10. இராமேஸ்வரம் – காசி பாதயாத்திரை நான்காம் குழு 2004. தலைவர் திரு. அழ. அழகப்பன், பள்ளத்தூர், அடியேன் (பழ.மாணிக்கம் க.முத்துப் பட்டணம் காரைக்குடி) இந்தக் குழுவில் சேர்ந்து பாதயாத்திரை செய்துள்ளேன்.

11. இராமேஸ்வரம் 12 ஜோதிர்லிங்க பாதயாத்திரை 2007. தலைவர் காசிஸ்ரீ சுப. முத்துப்பழநியப்பன், திருச்சி.

12. சென்னை – கொல்லூர் மூகாம்பிகை கோயில் பாதயாத்திரை 2003. தலைவர் திரு. ச. இராமையா, கானாடுகாத்தான்.

13. கானாடுகாத்தான் – குருவாயூர் பாதயாத்திரை 2005 தலைவர் திரு.ச.இராமையா, கானாடுகாத்தான்

14. காரைக்குடி – பண்டரிபுரம் பாதயாத்திரை 2006. தலைவர் திரு.ச.இராமையா, கானாடுகாத்தான்.

15. 267 தேவாரப்பாடல்பெற்ற தலங்கள் பாதயாத்திரை 2009. தொடக்கம் இராமேஸ்வரம், நிறைவு திருக்காளத்தி. தலைவர் திரு.வ.சொ.சேது, சிறாவயல் (சென்னை).

16. 96 ஊர் நகரத்தார் வாழும் 76 ஊர்க் கோயில்கள் மற்றும் 9 நகரக்கோயில்கள் பாதயாத்திரை 2010 டிசம்பர். தலைவர் திரு. காசிஸ்ரீ தேனப்பன், கானாடுகாத்தான்.

17. 96 ஊர் நகரத்தார் வாழும் ஊர்கள், 9 நகரக் கோயில்கள், குருபீடங்கள், குன்றக்குடி குமரன் கோயில் முதலிய இடங்களில் திருவாசக முற்றோதல். 4 ஆண்டுத் திட்டம் தொடக்கம் ஜனவரி 2011 பிள்ளையார்பட்டி. 96 ஊர் பாதயாத்திரைக்குழு மற்றும் திருநாவுக்கரசர் இறைபணி மன்றம், காரைக்குடி.

18. காரைக்குடி 5 கோயில்களில் தேவாரத் தொடர் முற்றோதல் தொடக்கம் ஜூலை 2011. 96 ஊர் பாதயாத்திரைக்குழு மற்றும் திருநாவுக்கரசர் இறைபணி மன்றம், காரைக்குடி.

19. காரைக்குடி ஏகாதசி மடத்தில் (கிருஷ்ணன் கோயில் நாலாயிர திவ்யபிரபந்தம் தொடர் முற்றோதல் (தொடக்கம் 2012 ஏப்ரல்)

20. கன்னியாகுமரி – காசி மோட்டார் சைக்கிள் யாத்திரை 2012 பிப்ரவரி, தலைவர் காசிஸ்ரீ கே.ஓ.எல்.எம். சுப்பிரமணியன், பாகனேரி.

21. கன்னியாகுமரி – அமர்நாத் பாதயாத்திரை 2013 ஜனவரி. தலைவர் காசிஸ்ரீ அ.பழநிச்சாமி, சிவகாசி.

22. இராமேஸ்வரம் – காசி பாதயாத்திரை ஐந்தாம் குழு –2011, தலைவர் திரு. உ. தட்சிணாமூர்த்தி, தேவகோட்டை.

23. இராமேஸ்வரம் – காசி பாதயாத்திரை பெண்கள் மேற்கொண்டது 2008. தலைவர் திருமதி மீ.வசந்தாள், கண்டனூர்.

24. திரூர் (கேரளா) – பத்ரிநாத் 108 திவ்ய தேச பாதயாத்திரை 2013 செப்டம்பர். தலைவர் திரு. ச.இராமையா, கானாடுகாத்தான்.

25. இராமேஸ்வரம் – காசி பாதயாத்திரை 2013. தலைவர் காசிஸ்ரீ கனகசபாபதி, சேலம்.

26. சேலம் – சீரடி பாதயாத்திரை 2014. தலைவர் காசிஸ்ரீ கனகசபாபதி, சேலம்.

27. இராமேஸ்வரம் – திருக்காளத்தி – 267 பாடல் பெற்ற தலங்கள் பாதயாத்திரை இரண்டாவது குழு 2014. தலைவர் காசிஸ்ரீ வ.சொ.சேது, சிராவயல் (சென்னை)

28. புவனகிரி – பிருந்தாவனம் (ராகவேந்திரர் பாதயாத்திரை) 2012. தலைவர் திரு. ச. இராமையா, கானாடுகாத்தான்.

29. 276 தேவாரப் பாடல் பெற்ற தலங்கள் மற்றும் 12 ஜோதிர்லிங்கத் தலங்களில் திருமுறை வழிபாடும் திருவாசக முற்றோதலும் தொடக்கம் ஜனவரி 2016. கன்னியாகுமரியில் தொடங்கி காசியில் நிறைவு. 8 ஆண்டுத் திட்டம்.

30. தேவகோட்டை நால்வர் கோயிலில் சைவ சமயக் குரவர்கள் நால்வருக்குமான குருபூசை ஆண்டு தோறும் நடைபெறுகிறது.

31. இராமாயணம் தொடர் சொற்பொழிவு ஆண்டு தோறும் அருசோ நிகழ்த்துவது, செக்காலை சிவன் கோயில், புதுவயல், கண்டனூர் 'வெள்ளிப்பட்டறை' தர்ம ரத்னா இராமநாதன் செட்டியார் இல்லம், கண்டனூர். துவாதசி மடம், கண்டனூர் திருமண மண்டபம், கொத்தமங்கலம் சொக்கனேந்தல், சென்னை திருவொற்றியூர், திருப்பூர், சாமியார் பாளையம், பெருந்துறை, கோபிசெட்டிபாளையம், திருச்செங்கோடு, மொரட்டுப்பாளையம், காரைக்குடி ஸ்ரீ வீரகண்ட விநாயகர் கோவில் முதலியஊர்களில்.

32. இல்லங்கள் தோறும் இறைவழிபாடு தொடக்கம் ஓவியர் ஆவுடையப்பன் இல்லம் கண்டனூர் (ஸ்ரீராம்நகர்)

33. திருப்புகழ் சபை தொடக்கம் 2014. காரைக்குடி சிவன் கோயில். அமைப்பாளர் திரு. சபாரத்தினம், காரைக்குடி, ஒவ்வொரு கார்த்திகை நாளில்

34. இராமேஸ்வரம் – காசி 6–வது குழு 2018. தலைவர் திரு. தி.சுந்தரம், தேவகோட்டை.

இவ்வளவு நிகழ்ச்சிகளுக்கும் வித்தாக இருந்து தொடங்கி நடத்தி வருபவர் நம் குருநாதர் அருசோ ஆவார். அவர்களது ஓயாத உழைப்பால் இப்பொழுது செட்டிநாட்டிலும் தமிழ்நாட்டிலும் மாபெரும் ஆன்மிக எழுச்சி ஏற்பட்டிருப்பதைக் காணலாம்.

இந்த 96 ஊர் நகரத்தார் வாழும் ஊர்க்கோயில்கள் பாதயாத்திரை 2010 ஆண்டு டிசம்பர் முதல் தேதி 01.12.2010 பிள்ளையார்பட்டியில் தொடங்கி 21.12.2010 தேதியில் நிறைவடைவதாகத் திட்டமிடப்பட்டது. இந்தக் குழுவில் 11 அடியார்கள் கலந்து கொண்டார்கள், காசிஸ்ரீ T.C.T. தேனப்பன், கானாடுகாத்தான் அவர்களைத் தலைமை ஏற்று யாத்திரையை நடத்துமாறும், காரைக்குடி க.முத்துப்பட்டணம் காசிஸ்ரீ பழ. மாணிக்கம் B.E. அவர்களைச் செயலாளர் மற்றும் பொருளாளராகப் பணி ஏற்றுக்கொள்ளுமாறும் குருநாதர் அருசோ அவர்கள் கேட்டுக் கொண்டார்கள்.

**மேற்படி பாதயாத்திரைக் குழுவில் சேர்ந்து யாத்திரை மேற்கொண்டவர்கள் விபரம்.**

1. காசிஸ்ரீ T.C,T.தேனப்பன், கானாடுகாத்தான்– தலைவர்.
2. காசிஸ்ரீ திருத்தலச் செல்வர் PL. மாணிக்கம் B.E., க.முத்துப்பட்டணம் – செயலர்.
3. காசிஸ்ரீ ஜோதிர்லிங்க மணி C. இராமையா, கானாடுகாத்தான்.
4. காசிஸ்ரீ சுப.லெட்சுமணன், தேவகோட்டை.

5. காசிஸ்ரீ வ.செந்தில் குமரப்பன், பலவான்குடி.
6. காசிஸ்ரீ சுப. சாத்தப்பன், பள்ளத்தூர்.
7. காசிஸ்ரீ திருத்தலச் செல்வர் ச. சிவானந்தம்.
8. திருத்தலச் செல்வர் ந. தங்கராஜன், காரைக்குடி.
9. காசிஸ்ரீ திருத்தலச்செல்வர் இராம. நாராயணன், காரைக்குடி.
10. காசிஸ்ரீ ந. இராமநாதன் (போஸ்), பள்ளத்தூர்.
11. அமர்நாத்ஸ்ரீ அரு. பழநியப்பன், காரைக்குடி.

யாத்திரை தொடக்க முதல் நாள் 30.11.2010 செவ்வாய்க்கிழமை மாலையே பதினோரு சிவனடியார்களும் பிள்ளையார்பட்டி வந்து சேர்ந்தனர். குருநாதர் அருசோ அவர்களும் அடியார்களோடு முதல்நாளே வந்து இருந்து அறிவுரைகள், ஆசிகள் வழங்கினார்கள். விக்னமில்லாமல் வெற்றிகரமாக யாத்திரை நிறைவு பெறுவதற்கு பிள்ளையார் பட்டி நகரக்கோயில் ஓங்கார சொருபியான அருள்மிகு கற்பக விநாயகரை வணங்கி வேண்டிக் கொண்டோம். இரவு பிள்ளையார்பட்டி நகர விடுதியில் தங்கி உணவு உண்டோம். இந்த யாத்திரைக்குப் பயன்படுத்திக் கொள்ளும்படி தலைவர் T.C.T.தேனப்பன் அவர்கள் அவர்களின் சொந்தக்கார் ஓம்னி மாருதி வண்டியைத் தந்து உதவினார்கள். மேலும் பள்ளத்தூரிலிருந்து ஓட்டுநர் திரு.பாண்டி என்பவரையும் நியமித்ததுடன் மேற்படி வண்டிக்கான செலவுகளையும் அவர்களே ஏற்றுக்கொண்டார்கள். அவர்கட்கு நன்றி.

நகரத்தார் வாழும் ஊர்களில் பிள்ளையார்பட்டியும் ஒரு ஊர் ஆகையால் 30.11.2010 இரவு 9.00 மணி

அளவில் குருநாதர் அருசோ அவர்களுடன் பிள்ளை யார்பட்டி ஊருக்குள் சென்று நகரத்தார் ஒருவர் வாழ்ந்து வரும் இல்லத்தையும் அவர்களின் படைப்பு வீட்டையும் விசாரித்து பார்த்து வந்தோம். அங்கு வாழும் நகரத்தார் தொழில் மேற்கொண்டு மதுரையம்பதியில் இருப்பதாகச் சொன்னார்கள். 96 ஊர் நகரத்தார் வாழும் ஊர்களில் ஒன்றான பிள்ளையார்பட்டியையும் 9 நகரக்கோயில் களில் ஒன்றான பிள்ளையார்பட்டியையும் முதன்முதலில் பார்த்து மகிழ்ந்தோம். வாடாமலர்மங்கை சமேத மருதீசர் திருவருளையும் திருவீசர் கற்பகப்பிள்ளையார் திருவருளையும் ஒருங்கே பெற்றோம்.

பிள்ளையார்பட்டி கற்பகமலர் புத்தக உரிமையாளர் திரு. முருகப்பன் வந்து நம் அன்பர்கள் அனைவருக்கும் காலையில் காப்பி வழங்கி பொன்னாடை அணிவித்து வாழ்த்தினார்கள். 01.12.10 புதன் காலை பிள்ளையார் பட்டி நாராயணசுவாமிகள் மடம் திரு கோவிந்தானந்தா சுவாமிகள் வந்திருந்து அனைவரையும் வாழ்த்தி வழி அனுப்பி வைத்தார்கள்.

01.12.2010 புதன்கிழமை காலை 07.00 மணிக்கு பாதயாத்திரை தொடங்கியது. அருசோ அவர்களும் உடன்வந்தார்கள். மூன்று கிலோ மீட்டர் தூரம் நடந்து 08.00 மணி அளவில் குன்றக்குடி வந்து சேர்ந்து குன்றக்குடி சண்முகநாதன் மலையடிவாரப் பிள்ளையார், தண்டாயுதபாணியை கீழே இருந்தபடியே வணங்கி னோம். குன்றக்குடி அடிகளார் எங்களை மடத்தில் வரவேற்று காலை உணவு அளித்தார்கள். பிறகு மேலும் இரண்டு கிலோமீட்டர் தூரம் நடந்து துழாவூர்

பெண்கள் குருபீடம் சென்று ஞானப்பிரகாச தேசிகர் ஆதீன கர்த்தரைப்பார்த்து வணங்கி அவர்களின் அன்பான ஆசிகளைப் பெற்றுக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டு 4 கி.மீ. தூரம் நடந்து ஆண்கள் குருபீடம் பாதரக்குடிக்கு காலை 10.30 மணிக்கு வந்து சேர்ந்தோம். ஸ்ரீ இரவீந்திர சுவாமிகளைக் கண்டு ஆசிபெற்று அவர்கள் வழங்கிய காப்பியை அருந்திவிட்டு அங்கிருந்து புறப்பட்டோம். மேலும் 3 கி.மீ. நடந்து கோயிலூர் சென்று வேதாந்த மடத்தில் தங்கி சிரமபரிகாரம் செய்து கொண்டு பின்னர் அருள்மிகு கொற்றவாள் ஈசுவரர் திருநெல்லை அம்பாளை வணங்கினோம். மதிய உணவும் கோயிலூர் மடத்தில் வழங்கினார்கள். பின்னர் மாலை 4 மணிக்கு அங்கிருந்து புறப்பட்டு மாலை 5 மணி அளவில் செக்காலை சிவன் கோயில் சென்று ஆலயம் தரிசனம் செய்து நகரத்தார் வரவேற்பு நல்கி அவர்கள் வழங்கிய ரொட்டி காப்பி அருந்தி பின்னர் காரைக்குடி சிவன்கோயில் சென்று ஆலய தரிசனம் செய்தோம். திரு வெங்கடாசலம் செட்டியார் அவர்கள் அனைவருக்கும் வாழ்த்துக்கூறி வெள்ளைப் பணியாரம் சிற்றுண்டி வழங்கி சிறப்பித்தார்கள். பின்னர் இரவு 7.30 மணி அளவில் செயலாளர் முத்துப்பட்டணம் பழ. மாணிக்கம் அவர்கள் இல்லத்தில் சுவையான இரவுப் பலகாரம் அளித்தார்கள். அவரின் இல்லத்தாருக்கு நன்றி கூறினோம். இரவு குளிர்காலமாதலால் அவர்கள் இல்லத்தில் அனைவரும் தங்க வசதி இல்லாததால் செயலாளரின் கொழுந்தியார் வீட்டில் முத்துப்பட்டணம் 2-வது வீதியில் இருக்கிற அரு.மெ.மெ.மெ. இல்லத்தில் சௌகரியமாக உறங்கி ஓய்வு எடுத்துக் கொண்டோம்.

**முதல் நாள்: 01.12.2010 புதன்கிழமை**

நடந்த மொத்த தூரம் : 20 கி.மீ.

காலை உணவு : குன்றக்குடி அடிகளார் மடம்.

மதிய உணவு : கோவிலூர் சுவாமிகள் மடம்.

இரவு உணவு : காரைக்குடி செயலாளர் இல்லம் காந்திபுரம்.

இரவு தங்கல் : க.முத்துப்பட்டணம் அரு.மெ.மெ.மெ. இல்லம்.

**சென்று தரிசித்த ஆலயங்கள்:**

1. பிள்ளையார்பட்டி நகரக்கோயில்.
2. துழாவூர் பெண்கள் குருபீடம்.
3. குன்றக்குடி சண்முகநாதன் கோயில்.
4. பாதரக்குடி ஆண்கள் குருபீடம்.
5. கோயிலூர் ஆண்டவர் மடம் கோயில்.
6. செக்காலை சிவன் கோயில்.
7. காரைக்குடி சிவன் கோயில்.

**இரண்டாம் நாள்: 02.12.2010 வியாழன்**

அதிகாலை 5.00 மணிக்கு எழுந்து முத்துப்பட்டணத்திலிருந்து புறப்பட்டு 100 அடி சாலை சென்று தேநீர் அருந்தி மாத்தூர் கோயில் நோக்கி 5 கி.மீ. நடந்து சென்றோம். மாத்தூர் கோயிலில் ஆலய தரிசனம் சிறப்பாகச் செய்து அருள்மிகு பெரியநாயகி சமேத ஐநூற்றீசுவரரை வணங்கி நகர விடுதிக்கு வந்து சேர்ந்தோம். அங்கு அவர்கள் அன்புடன் வழங்கிய காலை உணவு சாப்பிட்டபின் அவர்களுக்கு நன்றி தெரிவித்து 2 கி.மீ. தூரம் நடந்து இலுப்பக்குடி வந்து

சேர்ந்தோம். அங்கு நகரத்தார்கள் எங்களை வரவேற்று உபசரித்து ரொட்டி காப்பி வழங்கினார்கள். அவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொண்டு இலுப்பக்குடி நகரக்கோயிலுக்குள் காலை 10.30 மணி அளவில் சென்று சௌந்தர நாயகி சமேத தான்தோன்றியீசர் சன்னதிகளில் வணங்கினோம். ஆலய தரிசனம் முடிந்தவுடன் அங்கிருந்து புறப்பட்டு அரியக்குடி செல்லும் சாலையில் 4 கி.மீ. நடந்து அரியக்குடி சிவன் கோயிலுக்கு மதியம் 12.00 மணி அளவில் சென்று சேர்ந்தோம். கோயிலின் வாசலில் அரியக்குடி நகரத்தார்கள் ஒன்றுகூடி அடியார் களை அன்புடன் வரவேற்று ஆலயத்திற்குள் அழைத்துச் சென்று சிறப்பான தரிசனம் செய்து வைத்தார்கள். சுந்தரபரமேஸ்வரி சமேத இரத்தினபுரீசுவரர் அருளைப் பெற்று அருகில் உள்ள ஒரு வீட்டில் அவர்கள் விரும்பி அளித்த அறுசுவை மதிய உணவு உட்கொண்டு அங்கே சிறிது ஓய்வு மேற்கொண்டோம். அந்த ஊரில் தென் திருப்பதி எனப் போற்றப்படும் பெருமாள் கோயில் திறக்க நேரம் ஆகும் என்று சொன்னதால் மானசீகமாக அலர்மேல்மங்கைத் தாயார் சமேத திருவேங்கடமுடை யானை (சீனிவாசப்பெருமாள்) வெளியே நின்றபடி வணங்கியபின் மாலை 3 மணி அளவில் யாத்திரையைத் தொடங்கி மேலும் 4 கி.மீ. நடந்து அமராவதிபுதூரை அடைந்தோம். அங்கு அருகில் இருந்த நகரத்தார் அடியார்களை வரவேற்று மாலை சிற்றுண்டி காப்பி வழங்கினார்கள். அவர்களின் இல்லத்தார்க்கும் அவருக்கும் நன்றி தெரிவித்தோம். அங்கு உள்ள சிவன் கோயில் தூரத்தில் இருந்ததாலும், வழி சரியில்லை என்று தெரிந்ததாலும் ஊருக்குள் இருந்தபடியே மானசீகமாக

4

வாழவந்த நாயகி சமேத வந்தருளீசுவரரை நினைத்து வணங்கினோம். எனினும் ஊர் தொடக்கத்தில் உள்ள தனியார் சிவன் கோயிலில் சுவாமி தரிசனம் செய்து கொண்டு பின்னர் மாலை 5.30 மணி அளவில் குறுக்கு வழியில் ஆறாவயல் (சண்முகநாதபுரம்) நோக்கி 6 கி.மீ. நடந்து சென்றோம். மழைக்காலமாதலால் மேகங்கள் திரண்டு மழை கொட்டித் தீர்த்தது. சாலையெல்லாம் ஒரே தண்ணீர். நடக்க முடியவில்லை. எனினும் மழையோடு மழையாக நனைந்து கொண்டு சாலையில் பள்ளம் மேடு தெரியாமல் தட்டுத்தடுமாறி நடந்து சென்றோம். மாலை 7.00 மணி அளவில் சென்று விடலாம் என எண்ணியிருந்தோம். ஆனால் மழையின் காரணமாக இரவு 8.30 மணிக்கு சென்று சேர்ந்தோம். அடியார்களை வரவேற்க மேள தாளத்துடன் காத்திருந்த சண்முகநாதபுரம் நகரத்தார் எங்களைப் பார்த்தவுடன் மகிழ்ச்சியடைந்து நலம் விசாரித்தார்கள். பின்னர் வரவேற்று மேள தாளத்துடன் ஊருக்குள் இருந்த சிவன் கோயிலுக்கு அழைத்துச் சென்றார்கள். மழையினால் தவில் வாசிக்க முடியவில்லை. அடியார்கள் அனைவரும் கோயிலுக்குள் சென்று ஆலய தரிசனம் செய்தோம். மீனாட்சி அம்மை சமேத சுந்தரேசுவரர் சன்னதிகளில் வணங்கி திருஅருட்பிரசாதம் பெற்றோம். இரவு உணவும் பக்கத்திலுள்ள வங்காளத்தார் வீட்டில் படைத்தார்கள். உணவு அருந்தி அந்த இல்லத்திலேயே இரவு தங்கினோம். அனைவரும் மழையில் முற்றிலும் நனைந்திருந்தாலும் நிறைவாக உறங்கினோம். சிறப்பாக வரவேற்று உபசரித்த சண்முகநாதபுரம் நகரத்தார் பெருமக்களை வாழ்த்தி நன்றி தெரிவித்து மகிழ்ந்தோம்.

**02.12.2010 வியாழக்கிழமை**

நடந்த மொத்த தூரம் : 22கி.மீ.

காலை உணவு : மாத்தூர் நகரக்கோயில் விடுதி.

மதிய உணவு : அரியக்குடி நகரத்தார் இல்லம்.

இரவு உணவு : சண்முகநாதபுரம் நகரத்தார் இல்லம்.

இரவு தங்கல் : சண்முகநாதபுரம் வங்காளத்தார் வீடு.

**சென்று தரிசித்த ஆலயங்கள்**

1. முத்துப்பட்டணம் மீனாட்சி அம்மன் கோயில்.
2. முத்துப்பட்டணம் மாரிஅம்மன் கோயில்.
3. மாத்தூர் நகரக்கோயில்.
4. இலுப்பக்குடி நகரக்கோயில்.
5. அரியக்குடி சிவன் கோயில் மற்றும் பெருமாள்கோயில்.
6. அமராவதிபுதூர் சிவன்கோயில்.
7. சண்முகநாதபுரம் சிவன்கோயில்.

**மூன்றாம் நாள்: 03.12.2010 வெள்ளிக்கிழமை.**

அதிகாலை 5.00 மணிக்கு எழுந்து காலைக்கடன் களை முடித்துக் கொண்டு காப்பி, டீ வழங்கியதை அருந்திவிட்டு காலை 6.00 மணி அளவில் தாணிச்சா வூரணி என்ற நகரத்தார் வாழும் ஊர் நோக்கிப் புறப்பட்டோம். வழியில் உள்ள கோயிலில் தரிசனம் செய்து 4 கி.மீ. நடந்து கண்ட தேவி கோயில் குளத்தில் தீர்த்தமாடி, கண்ட தேவி சிவன்கோயிலில் தரிசனம் செய்து, பின்னர் தாணிச்சாவூரணி சென்று அடைந் தோம். அங்கு காசிஸ்ரீ ந.காசிநாதன், காசிஸ்ரீ தட்சிணா மூர்த்தி அவர்களும் மற்றவர்களும் அடியார்களை

வரவேற்று அங்குள்ள நகரப் பிள்ளையார் கோயிலுக்கு அழைத்துச்சென்று தரிசனம் செய்வித்தனர். கண்டதேவி ஊர், சிவன் கோயில் தாணிச்சாவூரணி நகரத்தார்கள் வணங்கும் கோயிலானபடியால் அதனை வரும்போதே வணங்கி வந்தோம். பின்னர் 1 கி.மீ. தூரம் நடந்து ராம் நகர் என்ற ஊரை அடைந்தோம் அங்கு கடையில் வடை, காப்பி வழங்கினார்கள். பின்னர் காலை 9.30 மணி அளவில் திரு. கணேசன் அவர்கள் காலை உணவு வழங்கினார்கள். அங்கு தேவகோட்டை நகரத்தார்கள் வந்து பார்த்து வரவேற்றார்கள். சிறிது நேரத்திற்குப் பின்னர் தேவகோட்டையில் அருசோ கட்டியுள்ள நால்வர் கோயிலுக்குச் சென்று நால்வரை வணங்கி சற்று நேரம் ஓய்வு எடுத்துக் கொண்டோம். பின்னர் தேவகோட்டை டாக்டர் சபா அருணாசலம் அவர்கள் வந்து வரவேற்று நால்வர் கோயிலுக்கு அருகில் உள்ள அவர்கள் இல்லத்தில் மதிய உணவு வழங்கிச் சிறப்பித்தார்கள். அவர்களுக்கு அடியார்கள் அனைவரும் நன்றி கூறி விடைபெற்றுக் கொண்டு திருப்பணிகள் செய்து சிறப்புப் பெற்ற தெய்வத்திரு தேவகோட்டையை நோக்கிப் பயணம் செய்தோம். மாலை 5.00 மணி அளவில் தேவகோட்டை சிவன் கோயிலுக்குச் சென்று ஆலய தரிசனம் செய்து அ/மி மீனாட்சி அம்மை சமேத சுந்தரேசுவரர் சன்னதிகளில் வணங்கி அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். தேவகோட்டை நகரத்தார் பெருமக்களுக்கு நன்றி தெரிவித்து அவர்கள் வழங்கிய இரவு உணவை அருந்தினோம். பின்னர் அனைவரும் நால்வர் கோயிலுக்கு வந்து ஓய்வு எடுத்துக் கொண்டோம்.

**03.12.2010 : வெள்ளிக்கிழமை**

| | | |
|---|---|---|
| நடந்த மொத்த தூரம் | : | 15 கி.மீ. |
| காலை உணவு | : | இராம்நகர் கடை அருகில். |
| மதிய உணவு | : | தேவகோட்டை டாக்டர் சபா அருணாசலம் இல்லம். |
| இரவு உணவு | : | தேவகோட்டை சிவன் கோயில். |
| இரவு தங்கல் | : | நால்வர் கோயில், தேவகோட்டை. |

**சென்று தரிசித்த ஆலயங்கள்:**

1. செம்பொன்மாரி ஐயப்பன் கோயில்.
2. கண்ட தேவி சிவன் கோயில்.
3. தாணிச்சவூரணி விநாயகர் கோயில்.
4. நால்வர் கோயில்.
5. தேவகோட்டை சிவன் கோயில்.

**நான்காம் நாள்: 04.12.2010 சனிக்கிழமை.**

நால்வர் கோயிலில் அதிகாலை எழுந்து காலைக் கடன்களை முடித்து கோயிலுக்குப் பக்கத்தில் உள்ள கடையில் டீ, காப்பி குடித்துவிட்டு காலை 6.00 மணிக்கு கல்லுப்பட்டி ஊர் நோக்கி நடந்தோம். 7 கி.மீ. நடந்து கல்லுப்பட்டிக்கு காலை 8.30 மணிக்கு வந்து சேர்ந்தோம். கல்லுப்பட்டி நகரத்தார்கள் அடியார்களை வரவேற்று சிவன் கோயிலுக்கு அழைத்துச்சென்று சிறப்பாக சுவாமி தரிசனம் செய்து வைத்தார்கள். நித்யகல்யாணி அம்பாள் சமேத கைலாசநாதர் சன்னதிகளில் வணங்கி அருட் பிரசாதம் பெற்றுக்கொண்டு மகிழ்ச்சி அடைந்தோம். கல்லுப்பட்டி நகரத்தார் பெருமக்களும் ஆச்சிமார்களும் இன்முகத்துடன் காலை உணவு அருந்த அழைத்துச் சென்று கோயில் தென்புற பிரகாரக் கொட்டகையில்

பலகாரம் கொடுத்தார்கள். மன நிறைவோடு சற்று ஓய்வு எடுத்துக் கொண்டு பின்னர் காலை 10.00 மணி அளவில் கல்லலை நோக்கிக் குறுக்குச் சாலையில் சென்றோம். மழை பெய்து வெள்ளம் வந்து மணிமுத்தாற்றில் தண்ணீர் புரண்டு ஓடுவதால் குறுக்கு வழியில் போக முடியாது என்று தெரிவித்ததால் சுற்றுவழியில் பிளார் ஊர் வரை சென்று பின்னர் அங்கிருந்து கல்லல் சாலையில் நடந்து கல்லலை மதியம் 01.00 மணி அளவில் அடைந்தோம். மழைத்தூறல் காரணமாகவும் சுற்றி வந்ததாலும் மூன்று மணி நேரம் ஆகிவிட்டது. தூரமும் 13 கி.மீ. ஆகிவிட்டது. கல்லல் நகரத்தார்கள் கல்லல் முத்துவிநாயகர் கோயிலில் காத்திருந்து அடியார்களை அன்புடன் வரவேற்று ஆலயத்திற்குள் அழைத்துச் சென்று சுவாமி தரிசனம் செய்து வைத்தார்கள். முத்துவிநாயகரை மனதார வணங்கித் தொடர்ந்து யாத்திரை நல்ல முறையில் நடந்தேற வேண்டுமெனப் பிரார்த்தித்துக் கொண்டு அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். பின்னர் கோயிலுக்குள் தென்புற பிரகாரப்பத்தியில் மதியம் 2.00 மணி அளவில் சிறப்பான மதிய உணவு வழங்கினார்கள். சிறிது நேர ஓய்விற்குப் பிறகு மாலை 4.00 அளவில் 4 கி.மீ. தொலைவில் உள்ள அரண்மனை சிறுவயல் நோக்கி நடந்தோம். போகும் வழியில் சிவகங்கை சமஸ்தான சிவன் கோயிலில் வணக்கம் செலுத்தி நடைப்பயணத்தைத் தொடர்ந்தோம். சுவாமி பெயர் சோமசுந்தரர், அம்பாள் சௌந்தரநாயகி. மாலை 5.00 மணி அளவில் அரண்மனை சிறுவயல் சென்று சிவன் கோயிலை அடைந்தோம். அரண்மனை சிறுவயல் நகரத்தார்கள் அடியார்களை வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச் சென்று ஆலய தரிசனம் சிறப்பாகச் செய்து வைத்தார்கள்.

பின்னர் நகரத்தார் பெருமாள் கோயிலுக்குச் சென்று வணங்கி ஊருக்குள் இருக்கும் விநாயகர் கோயிலுக்கு அழைத்துச்சென்று திவ்விய தரிசனம் செய்து வைத்தார்கள். பக்கத்தில் அமைந்துள்ள கல்யாண மண்டபத்தில் இரவு தங்குவதற்கு ஏற்பாடு செய்திருந் தார்கள். இரவு 7.30 மணி அளவில் அருமையான பலகாரம் தந்தார்கள். மிகுந்த மனநிறைவுடன் அங்கு தங்கினோம். நன்கு ஓய்வு எடுத்துக் கொண்டோம்.

**4.12.2010 சனிக்கிழமை**

| | | |
|---|---|---|
| மொத்தம் நடந்த தூரம் | : | 24 கி.மீ. |
| காலை உணவு | : | கல்லுப்பட்டி நகரத்தார், கல்லுப்பட்டி. |
| மதிய உணவு | : | கல்லல் நகரத்தார் முத்துவிநாயகர் கோயில். |
| இரவு உணவு | : | அரண்மனை சிறுவயல் நகரத்தார். |
| இரவு தங்கல் | : | அரண்மனை சிறுவயல் விடுதி. |

**சென்று தரிசித்த ஆலயங்கள்:**

1. முள்ளிக்குண்டு விநாயகர் கோயில்.
2. கல்லுப்பட்டி நற்கனி அம்மன் கோயில்.
3. கல்லுப்பட்டி சிவன் கோயில்.
4. கல்லுப்பட்டி பெருமாள் கோயில்.
5. கல்லல் நகரத்தார் முத்து விநாயகர் கோயில்.
6. கல்லல் பெருமாள் கோயில்.
7. கல்லல் சிவன் கோயில்.
8. அரண்மனை சிறுவயல் சிவன் கோயில்.
9. அரண்மனை சிறுவயல் பெருமாள் கோயில்.
10. அரண்மனை சிறுவயல் நகரத்தார் விநாயகர் கோயில்.

**ஐந்தாம் நாள்: 05.12.2010. ஞாயிற்றுக்கிழமை**

அதிகாலை எழுந்து காலைக்கடன்களை முடித்துக் கொண்டு காலை 6.00 மணி அளவில் அரண்மனை சிறுவயல் நகரத்தார்கள் வழங்கிய காப்பியை அருந்தி அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு அங்கிருந்து வெற்றியூர் நோக்கி நடந்தோம். 8 கி.மீ. தூரம் நடந்து வெற்றியூரை காலை 8.00 மணி அளவில் சென்று அடைந் தோம். வெற்றியூர் நகரத்தார் பெருமக்கள் அடியார்களை வரவேற்க நகரத்தார் பொதுக்கோயிலான அம்மன் கோயிலுக்குச் சென்று அங்குள்ள அருமையான குளத்தில் நீராடினோம். கோயிலுக்குள் சென்று அம்மனை வணங்கி அருள் பிரசாதம் பெற்றுக்கொண்டு வெற்றியூர் நகரத்தார்கள் வழங்கிய காலைப் பலகாரத்தையும் சாப்பிட்டு அங்கிருந்து சென்று அந்த ஊர்ச் சிவன் கோயில், பிள்ளையார் கோயில்களில் தரிசனம் செய்து சிறிது இளைப்பாறினோம். பின்னர் அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு கொ. அழகாபுரி நோக்கி நடந்து சென்றோம். 9 கி.மீ. குறுக்கு வழியில் நடந்தோம். மழையும் தொடர்ந்து பெய்து கொண்டிருந்தது. மிகுந்த சிரமப்பட்டு மிகவும் தாமதமாக மதியம் 02.00 மணி அளவில் போய்ச்சேர்ந்தோம். கொ.அழகாபுரி நகரத்தார்கள் அடியார்களை அன்புடன் வரவேற்று சிவன் கோயிலுக்கு அழைத்துச்சென்று சிறப்பான தரிசனம் செய்து வைத்தார்கள்.

பின்னர் கோயிலுக்கு அருகில் உள்ள நகரத்தார் இல்லத்தில் சிறப்பான மதிய உணவு வழங்கினார்கள். சிறிது நேர ஓய்விற்குப் பின்னர் நாட்டரசன் கோட்டை நோக்கி நடந்தோம். 3 கி.மீ. நடந்து கவிச்சக்கரவர்த்தி

கம்பன் சமாதி சென்று கும்பிட்டு பின்னர் மேலும் 1 கி.மீ. நடந்து மாலை 6.30 மணி அளவில் நாட்டரசன் கோட்டைக்குச் சென்று சேர்ந்தோம். அங்குள்ள பெருமாள் கோயிலில் வணங்கினோம். நாட்டரசன் கோட்டையைச் சேர்ந்த ஆச்சி ஒருவர் வழங்கிய காப்பியை ஏற்றுக்கொண்டு நன்றி தெரிவித்து நாட்டர்சன் கோட்டை கண்ணாத்தாள் கோயில் சென்று மனமுருகி வேண்டிக் கொண்டோம். நாட்டரசன் கோட்டை நகரத்தார்கள் அன்புடன் வரவேற்றுச் சிவன் கோயிலுக்கு அழைத்துச் சென்று தரிசனம் செய்து வைத்தார்கள்.

இங்குள்ள நகரத்தார் பெருமக்கள் பாதயாத்திரை அடியார்கள் பால் அன்பின் மிகுதியால் இரண்டு இடங்களில் இரவுப் பலகாரம் ஏற்பாடு செய்திருந்தார் கள். ஆகவே தட்ட முடியாமல் இரண்டு இடங்களிலும் அடியார்கள் பாதிபாதியாகச் சென்று அவர்கள் அன்புடன் அளித்த பலகாரம் சாப்பிட்டுவிட்டு இரவு 8.00 மணி அளவில் காளையார் மங்கலம் நோக்கி புறப்பட்டு 6 கி.மீ. நடந்து இரவு 10.30 மணி அளவில் காளையார் மங்கலம் போய்ச் சேர்ந்தோம். காளையார் மங்கலம் நகரத்தார்கள் அடியார்களை எதிர்பார்த்து சிவன்கோயில் மூர்த்தங்களுக்கு வெள்ளி அங்கி சாத்தி இருந்தார்கள். நாங்கள் தாமதமாகச் சென்றாலும் அன்புடன் வரவேற்று கோயிலில் சிறப்பான தரிசனம் செய்து வைத்தார்கள். காளையார் மங்கலம் நகரத்தார்கள் ஏற்பாடு செய்து வைத்திருந்த பாலினை அருந்திவிட்டு சிவன்கோயில் காரியத்தனம் செய்யும் நகரத்தார் வீட்டில் இரவு தங்கி ஓய்வு எடுத்துக் கொண்டோம்.

**05.12.2010 ஞாயிற்றுக்கிழமை**

நடந்த தூரம் மொத்தம் : 27 கி.மீ.

காலை உணவு : வெற்றியூர் அம்மன் கோயில்.

மதிய உணவு : கொ. அழகாபுரி சிவன் கோயில், காரியக்காரர் இல்லம்.

இரவு உணவு : நாட்டரசன் கோட்டை சிவன் கோயில் காரியக்காரர் வீடு மற்றும் கா.நா.சத்திரப் பொதுக் குழு உறுப்பினர் இல்லம்.

**தரிசித்த ஆலயங்கள்**

1. வெற்றியூர் அம்மன் கோயில்.
2. வெற்றியூர் சிவன் கோயில்.
3. கொ. அழகாபுரி சிவன் கோயில்.
4. நா.கோட்டை பெருமாள் கோயில்.
5. நா.கோட்டை கண்ணாத்தா கோயில்.
6. நா.கோட்டை சிவன் கோயில்.
7. காளையார் மங்கலம் சிவன் கோயில்.

**ஆறாம் நாள்: 06.12.2010 திங்கள் கிழமை.**

*காளையார் மங்கலம் சிவன்கோயில் காரியக்காரர் இல்லத்தில் அதிகாலை எழுந்து காலைக்கடன்கள் முடித்து அவர்கள் இல்லத்தில் வழங்கிய காப்பியைக் குடித்துவிட்டு காலை 6.30–க்கு சோழபுரம் நோக்கிப் புறப்பட்டோம். 3 கி.மீ. நடந்து காலை 7.30 மணிக்கு சோழபுரம் சிவன் கோயில் சென்று சேர்ந்தோம். அங்கிருந்த குருக்கள் அடியார்களை வரவேற்றுச் சிறப்பான தரிசனம் செய்து வைத்தார்கள்.*

காளையார் மங்கலம் நகரத்தார்கள் கொண்டுவந்து வழங்கிய காலை உணவையும் உண்டு காலை 9.00 மணி அளவில் சக்கந்தி ஊரை நோக்கிச் சென்றோம். 7 கி.மீ. நடந்து சக்கந்தி விநாயகர் கோயிலை காலை 11 மணி அளவில் சென்று அடைந்தோம். அங்கு காத்திருந்த சக்கந்தி நகரத்தார்கள் அடியார்களை அன்புடன் வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச்சென்று திவ்விய தரிசனம் செய்து வைத்தார்கள். வெளியூரிலிருந்து வந்திருந்த நகரத்தார்கள் மதிய உணவு ஏற்பாடு செய்து மிகுந்த சிரத்தையோடு பெரியவீட்டில் அனைவருக்கும் வழங்கினார்கள். அறுசுவை உணவை உண்டு சிறிது நேரம் ஓய்வு எடுத்துக்கொண்டு மாலை 4.00 மணி அளவில் விடைபெற்றுக்கொண்டு கீழப்பூங்குடி நோக்கி 6 கி.மீ. நடந்து மாலை 6.00 மணி அளவில் கீழப்பூங்குடி சிவன்கோயிலை அடைந்தோம். அவ்வூர் நகரத்தார்கள் அடியார்களைக் கோயிலுக்கு முன்னால் நின்று வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச் சென்றார்கள். அங்கு அடியார்களுக்கு சிறப்பான தரிசனம் செய்து வைத்தார்கள். அவர்கள் வழங்கிய காப்பியை அருந்திவிட்டு விடைபெற்றுக் கொண்டு ஒக்கூர் நோக்கிப் புறப்பட்டோம். 2 கி.மீ. நடந்து இரவு 7.30 மணி அளவில் ஒக்கூர் விநாயகர் கோயிலை அடைந்தோம். அங்கு ஒக்கூர் நகரத்தார்கள் ஒன்றுகூடி அடியார்களை அன்புடன் வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச் சென்று சிறப்பாக ஆலய தரிசனம் செய்துவைத்தார்கள். சசிவர்ண விநாயகரை வணங்கி பிரசாதம் பெற்றோம். அருகில் உள்ள நகரத்தார் இல்லத்தில் இரவு உணவு ஏற்பாடு செய்திருந்ததை சாப்பிட்டுவிட்டு அந்தப் பெரிய வீட்டில் இரவு நிம்மதியாக உறங்கினோம்.

**06.12.2010 திங்கள்கிழமை**

நடந்த தூரம் மொத்தம் : 20 கி.மீ.
காலை உணவு : சோழபுரம் கோயிலில் காளையார் மங்கலம் நகரத்தார்.
மதிய உணவு : சக்கந்தி ஊர் நகரத்தார்கள் இல்லம்.
இரவு உணவு : ஒக்கூர் ஊர் நகரத்தார் இல்லம்.

**சென்று தரிசித்த ஆலயங்கள்**

1. சோழபுரம் சிவன்கோயில்.
2. சக்கந்தி விநாயகர் கோயில்.
3. கீழப்பூங்குடி சிவன் கோயில்.
4. ஒக்கூர் பிள்ளையார் கோயில்.

**ஏழாம் நாள்: 07.12.2010 செவ்வாய்க்கிழமை**

மறுநாள் அதிகாலை எழுந்து காலைக்கடன்களை முடித்துக் கொண்டோம். காலையில் காப்பி தந்தார்கள், மற்றும் அடுத்த நாள் காலை உணவையும் பொட்டலம் போட்டு அனைவருக்கும் கொடுத்தார்கள். அவர்களுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டு நடராஜபுரத்திற்கு பனங்குடி ஊருக்கு புறப்பட்டோம்.

காளையார் மங்கலம் வழியாக 12 கி.மீ. நடந்து காலை 11.30 மணி அளவில் நடராஜபுரம் சென்றோம். காளை யார் மங்கலத்தில் ஒக்கூர் நகரத்தார் கொடுத்தனுப்பிய பலகாரத்தையும் காலை 8.00 மணி அளவில் சாப்பிட்டு பின்னர் அங்கிருந்து நடராஜபுரம் சென்றோம். நடராஜபுரம் நகரத்தார்கள் அடியார்களை வரவேற்று உபசரித்து சிவன் கோயிலுக்குள் அழைத்துச்சென்று திவ்ய தரிசனம் செய்வித்தார்கள்.

அந்த ஊர் நகரத்தார்கள் மதிய உணவு ஏற்பாடு செய்திருந்தார்கள். அதனையும் கோயிலை அடுத்து உள்ள ஒரு கட்டடத்தில் வழங்கினார்கள். அமைதியாக இருந்து அனைவரும் சாப்பிட்டு சிறிது நேரம் ஓய்வு எடுத்துக் கொண்டோம். பின்னர் நடராஜபுரம் நகரத்தார் பெருமக்களிடம் விடைபெற்றுக் கொண்டு மாலை 3.30 மணி அளவில் 1 கி.மீ. தூரத்தில் உள்ள பனங்குடி ஊருக்குச் சென்று அங்குள்ள அம்மன் கோயிலில் வணங்கினோம். பிறகு அங்கிருந்து 4 கி.மீ. தூரமுள்ள பாகனேரி நோக்கி நடந்தோம். மாலை 6.00 மணி அளவில் பாகனேரி சிவன் கோயிலுக்கு அருகில் வந்து சேர்ந்தோம். பாகனேரி நகரத்தார்கள் மற்றும் காசிஸ்ரீ K.OL.M. சுப்பிரமணியன் முதலியோர் அடியார்களை வரவேற்று சிவன் கோயிலுக்குள் அழைத்துச்சென்று ஆலய தரிசனம் சிறப்பாகச் செய்து வைத்தனர். பின்னர் இரவு 8.00 மணி அளவில் காசிஸ்ரீ K.OL.M. சுப்பிர மணியன் (பாகனேரி) அவர்கள் இல்லத்தில் ஏற்பாடு செய்திருந்த இரவுப்பலகாரத்தை உண்டு இரவு அவர்கள் இல்லத்தில் தங்கி ஓய்வு எடுத்துக் கொண்டோம்.

**07.12.2010 செவ்வாய்க்கிழமை**

| | | |
|---|---|---|
| நடந்த மொத்த தூரம் | : | 17 கி.மீ. |
| காலை உணவு | : | ஒக்கூர் நகரத்தார் கொடுத்தனுப்பியதை காளையார் மங்கலத்தில். |
| மதிய உணவு | : | நடராஜபுரம் நகரத்தார்கள். |
| இரவு உணவு | : | பாகனேரி K.OL.M. சுப்பிரமணியன் இல்லம். |
| இரவு தங்கல் | : | மேற்படியார் இல்லம். |

**சென்று தரிசித்த ஆலயங்கள்**

1. நடராஜபுரம் சிவன் கோயில்.
2. பனங்குடி நகரத்தார் அம்மன் கோயில்.
3. பாகனேரி சிவன் கோயில்.

**எட்டாம் நாள் : 8.12.2010 புதன்கிழமை**

பாகனேரி காசிஸ்ரீ K.OL.M.சுப்பிரமணியன் இல்லத்திலிருந்து அதிகாலையில் எழுந்து காலைக் கடன்களை முடித்துக்கொண்டு அவர்கள் வழங்கிய காப்பியை அருந்தி பின்னர் 6 கி.மீ. தூரத்தில் உள்ள மதகுபட்டி ஊரை நோக்கி நடந்தோம். காலை 8.00 மணிக்கு மதகுபட்டி போய்ச் சேர்ந்தோம். மதகுபட்டி நகரத்தார்கள் அடியார்களை அன்புடன் வரவேற்றுச் சிவன் கோயிலுக்கு அழைத்துச் சென்றார்கள். சிறப்பான தரிசனம் செய்வித்தார்கள். அவர்கள் வழங்கிய காப்பி ரொட்டியை எடுத்துக்கொண்டு விடைபெற்று அலவாக்கோட்டை நோக்கிச் சென்றோம். அந்த ஊர் நகரத்தார்கள் அடியார்களை வரவேற்று பிள்ளையார் கோயில், முருகன் கோயிலுக்கு அழைத்துச் சென்று சிறப்பாகத் தரிசனம் செய்து வைத்தார்கள். ஆலய தரிசனம் முடிந்தவுடன் காலை உணவும் ஏற்பாடு செய்து நகர விடுதியில் வழங்கினார்கள். சாப்பாடு முடித்துக் கொண்டு விடைபெற்றுக்கொண்டு வரும்போது பெருமாள்கோயில், சிவன்கோயில் இவைகளில் வழிபாடு செய்து கொண்டு சொக்கநாதபுரம் ஊருக்கு 7 கி.மீ. நடந்து மதியம் 12.00 மணி அளவில் போய்ச்சேர்ந்தோம். சொக்கநாதபுரம் நகரத்தார்கள் சிறப்பான வரவேற்பு

செய்தும் அனைவருக்கும் பாதபூசை செய்தும் அடியார்களைக் கோயிலுக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு அனைவருக்கும் சிறப்பான தரிசனம் செய்து வைத்தார்கள்.

மதிய உணவு அறுசுவையுடன் அடியார்களுக்கு அன்புடன் வழங்கினார்கள். சிறிது நேர ஓய்விற்குப் பின்னர் மாலை *4.30* மணி அளவில் அவர்கள் வழங்கிய காப்பி ரொட்டியை ஏற்றுக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டோம். அங்கிருந்து செம்பனூர் செல்லும் சாலையில் உள்ள ஐயப்பன் பிரத்யங்காதேவி கோயில்களுக்குச் சென்று தரிசனம் செய்து அருட்பிரசாதம் பெற்றுக்கொண்டு மேலும் *5* கி.மீ. நடந்து மாலை *6.00* மணி அளவில் செம்பனூர் சேர்ந்தோம். அங்கு காத்திருந்த செம்பனூர் நகரத்தார்கள் அடியார்களை அன்புடன் வரவேற்று அங்குள்ள சிவன் கோயிலுக்கு அழைத்துச் சென்றார்கள். சிறப்பான தரிசனம் செய்வித்தார்கள். பின்னர் இரவு செம்பனூர் நகரத்தாரின் இல்லத்தில் இரவு உணவு ஏற்பாடு செய்து அன்புடன் படைத்தார்கள். அதனையும் சாப்பிட்டு அந்த இல்லத்திலேயே இரவு தங்கி ஓய்வு பெற்றோம்.

**08.12.2010 புதன்கிழமை**

| | |
|---|---|
| நடந்தமொத்த | : தூரம் 30 கி.மீ. |
| காலை உணவு | : அலவாக்கோட்டை நகரத்தார் விடுதி. |
| மதிய உணவு | : சொக்கநாதபுரம் நகரத்தார் இல்லம். |
| இரவு உணவு | : செம்பனூர் நகரத்தார் இல்லம். |

**சென்று தரிசித்த கோயில்கள்**

1. மதகுபட்டி சிவன்கோயில்.
2. மதகுபட்டி பிள்ளையார்கோயில்.
3. அலவாக்கோட்டை முருகன்கோயில்.
4. அலவாக்கோட்டை பிள்ளையார் கோயில்.
5. அலவாக்கோட்டை பெருமாள் கோயில்.
6. அலவாக்கோட்டை சிவன் கோயில்.
7. சொக்கநாதபுரம் சிவன்கோயில்.
8. சொக்கநாதபுரம் ஐயப்பன் கோயில்.
9. சொக்கநாதபுரம் பிரத்யங்காதேவி கோயில்.
10. செம்பனூர் சிவன் கோயில்.

**ஒன்பதாம் நாள்: 09.12.2010 வியாழக்கிழமை**

செம்பனூரில் நகரத்தார் இல்லத்தில் தங்கி நன்றாக ஓய்வு எடுத்தபின் அதிகாலையில் எழுந்து காலைக் கடன்களை முடித்துக்கொண்டு கல்லல் வழியாக மானகிரி நோக்கிச் சென்றோம். காலை 6.00 மணி அளவில் புறப்பட்டு 4 கி.மீ. நடந்து கல்லல் ஊரை காலை 7.15 மணிக்கு வந்து சேர்ந்து அம்மன் கோயிலை வணங்கி பக்கத்தில் உள்ள தேநீர்க் கடையில் அனைவரும் தேநீர் அருந்தித் தொடர்ந்து 11 கி.மீ. நடந்து மானகிரியை காலை 10.00 மணிக்கு அடைந்தோம். மெயின் சாலையில் உள்ள பஞ்சாயத்து போர்டு அலுவலகத்தில் காத்திருந்த மானகிரி நகரத்தார்கள் அடியார்களை அன்புடன் வரவேற்று காப்பி வழங்கி பின்னர் மானகிரி முருகன் கோயிலுக்கு அழைத்துச் சென்று சிறப்பான தரிசம் செய்து வைத்தார்கள்.

கோயிலுக்குத் தெற்குப் பக்கம் உள்ள கொட்டகையில் அனைவருக்கும் காலை உணவு அன்புடன் வழங்கினார்கள். அதனை உண்டு அவர்களிடம் விடை பெற்றோம். பின்னர் 6 கி.மீ. தூரம் உள்ள நாச்சியார்புரம் நோக்கி நடந்தோம். மதியம் 12.30 மணி அளவில் நாச்சியார்புரம் சென்று சேர்ந்தோம். அங்குள்ள அம்மன் கோயிலில் காத்திருந்த நாச்சியார்புரம் நகரத்தார்கள் அடியார்களை அன்புடன் வரவேற்று அம்மன் கோயிலுக்குள் அழைத்துச்சென்று சிறப்பாகத் தரிசனம் செய்து வைத்தார்கள். அனைத்து அடியார்களையும் அருகில் உள்ள பிள்ளையார் கோயில் வேல்பூசை மண்டபம் முதலிய ஆலயங்களுக்கு அழைத்துச் சென்று தரிசனம் செய்து வைத்தார்கள். மதியம் 2.00 மணி அளவில் சிறப்பான மதிய உணவு வழங்கி மகிழ்வித்தார்கள். நகரத்தார்கள் அனைவருக்கும் நன்றி தெரிவித்துக் கொண்டு சிறிது நேரம் ஓய்வு எடுத்துக் கொண்டோம். மாலையில் நேரம் இருந்ததால் அங்கிருந்து மாலை 4.00 மணி அளவில் புறப்பட்டு 3 கி.மீ. தூரம் உள்ள சிராவயல் ஊருக்கு மாலை 5.00 மணி அளவில் சென்றடைந்தோம். சிவன் கோயிலில் காத்திருந்த சிராவயல் நகரத்தார்கள் எங்களை வரவேற்று கோயிலுக்குள் அழைத்துச்சென்று திவ்வியதரிசனம் செய்து வைத்தார்கள். பின்னர் அவர்கள் வழங்கிய மாலை சிற்றுண்டி, காப்பியை அருந்தி அவர்களிடையே விடைபெற்றுக் கொண்டு திரும்பவும் நாச்சியாபுரம் 3 கி.மீ. நடந்து வந்து சேர்ந்தோம். இரவு தங்கல் ஆச்சி வந்தாச்சு. ஆசிரியர் நா.பழநியப்பன் அவர்கள் வீட்டில் இடம் அளித்ததோடு இரவு உணவும் வழங்கி மகிழ்வித்தார்கள்.

**09.12.2010 வியாழக்கிழமை**

| | | |
|---|---|---|
| நடந்த மொத்த தூரம் | : | 27 கி.மீ. |
| காலை உணவு | : | மானகிரி நகரத்தார்கள் முருகன் கோயில். |
| மதிய உணவு | : | நாச்சியார்புரம் நகரத்தார்கள் அம்மன்கோயில். |
| இரவு உணவு | : | நாச்சியார்புரம் 'ஆச்சி வந்தாச்சு' பழநியப்பன் இல்லம் (இரவு தங்கல்) |

**சென்று தரிசித்த ஆலயங்கள்**

1. கல்லல் சாலையில் உள்ள அம்மன் கோயில்.
2. மானகிரி முருகன் கோயில்.
3. நாச்சியார்புரம் நாச்சியார் அம்மன் கோயில்.
4. நாச்சியார்புரம் பிள்ளையார் கோயில்.
5. நாச்சியார்புரம் வேல் பூசைக்கோயில்.
6. சிராவயல் சிவன்கோயில்.
7. சிராவயல் தேனாட்சி அம்மன் கோயில்.

**பத்தாம்நாள் : 10.12.2010 வெள்ளிக்கிழமை.**

அதிகாலையில் எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு காப்பி அருந்தி குறுக்கு வழியில் கம்பனூர் பாதையில் கண்டரமாணிக்கம் ஊரை நோக்கி நடந்தோம். நாச்சியார்புரம் சிவன் கோயில் (தனியாருடையது) சென்று வணங்கினோம். 5 கி.மீ. தூரம் நடந்து இடையில் மணிமுத்தாறு மழையால் நீர் பெருகி ஓடிய தடுப்பணை கடந்து காலை 8.15 மணி அளவில் ஊரை அடைந்தோம். கண்டரமாணிக்கம் நகரத்தார்கள் அடியார்களை வரவேற்று அங்குள்ள மாணிக்கவல்லி அம்மன் கோயிலுக்கு அழைத்துச் சென்று தரிசனம் செய்து வைத்தார்கள், பின்னர் சிவன்

கோயிலுக்கு அழைத்துச் சென்று சிவதரிசனம் செய்து வைத்தார்கள். அங்கு ஏலவார்குழலி அம்மை சமேத கைலாசநாதர் சன்னதிகளில் வழிபட்டு அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். பின்னர் அனைவருக்கும் காலை உணவு வழங்கினார்கள். அதனை ஏற்றுக்கொண்டு அவர்களிடம் விடைபெற்று மேலும் 3 கி.மீ. தூரம் நடந்து காலை 10 மணிக்கு பட்டமங்கலம் ஊரை அடைந்து அங்கு புகழ்பெற்ற தட்சணா மூர்த்தி கோயிலில் மீனாட்சி அம்மை சமேத சோமசுந்தரேசுவரர் சன்னதிகளில் மனம் உருகி நின்று வழிபட்டுப் பின்னர் கோயிலின் முகப்பில் தனியாகக் கோயில் கொண்ட தட்சணாமூர்த்தியைக் கண்குளிர வணங்கி அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டு அங்கிருந்து 2 கி.மீ. மேலும் நடந்து கருங்குளம் என்ற ஊருக்குச் சென்று நகர விநாயகர் கோயில் சென்று வழிபட்டு, பின்னர் பட்டமங்கலம் திரும்பும்போது கருங்குளம் நகரத்தார் வீடு ஒன்றுக்குச் சென்றோம். அந்த இல்லத்தில் முதல் நாள் திருமண விசேஷம் நடைபெற்றது. சுற்றத்தார்களுடன் அவ்வூர் நகரத்தார் எங்களை வரவேற்று உபசரித்து நீர் மோர் அளித்து மகிழ்வித்தார்கள்.

பின்னர் அவர்களிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு காலை 11.30 மணி அளவில் பட்டமங்கலம் நகரத்தார் முருகன் கோயிலுக்குச் சென்றோம். அங்கு கூடியிருந்த நகரத்தார்கள் அடியார்களை வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச் சென்று சிறப்பான தரிசனம் செய்து வைத்தார்கள். முருகக்கடவுளை வழிபட்டு அருட் பிரசாதம் பெற்றுக்கொண்டோம். நகரத்தார் பெருமக்களிடம் ஊர் விசேஷம், திருப்பணிகள் பற்றி சிறிது நேரம் அளவளாவினோம். அதற்குள் அவர்கள்

ஏற்பாடு செய்திருந்த மதிய உணவு வந்து சேர்ந்தது. அன்புடன் அவ்வூரார் வழங்கியதை மகிழ்வுடன் உண்டு சிறிது நேரம் கோயில் மண்டபத்தில் ஓய்வு பெற்றோம். பின்னர் மாலை 4.00 மணி அளவில் புறப்பட்டு 18 கி.மீ. நடந்து மாலை 6 மணிக்குத் திருப்பத்தூரை அடைந்தோம். அங்கு C.T.S. சிதம்பரம் அவர்களின் சம்பந்தப்பட்ட ஆங்கில மருந்துக்கடையில் எங்களை வரவேற்று வடை, காப்பி வழங்கி உபசரித்தார்கள். அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு திருப்பத்தூர் – சிங்கம் புணரி சாலையில் சென்று குறுக்கு வழியில் மேலும் 5 கி.மீ. நடந்து கண்டவராயன் பட்டிக்கு இரவு 8.00 மணி அளவில் சென்று சேர்ந்தோம். அவ்வூர் நகரத்தார்கள் சிவன் கோயில் முன்பு காத்திருந்து அடியார்களை அன்புடன் வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச்சென்று சிவதரிசனம் செய்து வைத்தார்கள். மீனாட்சி அம்மை சமேத சொக்கலிங்க மூர்த்தி சன்னதி களில் நின்று வழிபட்டு அருட்பிரசாதம் பெற்றுக்கொண் டோம். பின்னர் அவர்களின் படைப்பு வீட்டிற்கு அழைத்துச் சென்று அன்புடன் இரவு உணவு அளித்தார் கள். அங்கேயே உணவிற்குப்பின் தங்கி ஓய்வு கொண்டோம்.

**10.12.2010 வெள்ளிக்கிழமை**

| | | |
|---|---|---|
| நடந்த மொத்த தூரம் | : | 25 கி.மீ. |
| காலை உணவு | : | கண்டரமாணிக்கம் நகரத்தார்கள். |
| மதிய உணவு | : | பட்டமங்கலம் நகரத்தார்கள். |
| இரவு உணவு | : | கண்டவராயன்பட்டி நகரத்தார்கள். |
| இரவு தங்கல் | : | கண்டவராயன்பட்டி படைப்பு வீடு. |

**சென்று தரிசித்த ஆலயங்கள்**

1. நாச்சியார்புரம் கம்பனூர் சிவன் கோயில்.
2. பட்டமங்கலம் சிவன் தட்சணாமூர்த்தி கோயில்.
3. கருங்குளம் விநாயகர் கோயில்.
4. பட்டமங்கலம் முருகன் கோயில்.
5. கண்டவராயன் பட்டி சிவன் கோயில்.

**பதினோராம் நாள்: 11.12.2010 சனிக்கிழமை.**

கண்டவராயன்பட்டி படைப்பு வீட்டில் அதிகாலை எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு வடக்காக 3 கி.மீ. நடந்து காலை 7.00 மணி அளவில் மகிபாலன் பட்டி ஊர் சென்றோம். அங்கு விநாயகர் கோயிலில் காத்திருந்த மகிபாலன்பட்டி நகரத்தார்கள் அடியார்களை அன்புடன் வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச் சென்று தரிசனம் செய்து வைத்தனர். அவர்கள் வழங்கிய ரொட்டி, காப்பியை அருந்திய பின்னர் கோயிலுக்கு எதிரே அமைந்துள்ள பண்டிதமணி மு.கதிரேசன் செட்டியார் அவர்களின் நினைவாக நிறுவிய சிலையை வணங்கினோம். அருகில் உள்ள "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற புகழ்பெற்ற புறநானூற்றுப் பாடலை நல்கிய பூங்குன்றனார் புலவரின் ஊரினைப் பார்த்தோம். அங்கிருந்து ஆ. தெக்கூர் நோக்கி 7 கி.மீ. நடந்து காலை 9.00 மணி அளவில் சிவன்கோயிலை அடைந்தோம். கோயிலுள் காத்திருந்த ஆ.தெக்கூர் நகரத்தார் அடியார்களை அன்புடன் வரவேற்று சிவதரிசனம் சிறப்பாகச் செய்து வைத்தார்கள். மீனாட்சி அம்மை சமேத சுந்தரேசுவரர் சன்னதிகளில் நின்று வணங்கி அருட்பிரசாதம் பெற்றோம். பின்னர் அடியார்களுக்குக் காலை உணவு அன்புடன் வழங்கினார்கள். அதனை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்

கொண்டு அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு 3 கி.மீ. வடக்காக நடந்து நெற்குப்பை ஊரை அடைந்தோம். அவ்வூரைச் சேர்ந்த நகரத்தார்கள் அடியார்களை வரவேற்று சிவன் கோயிலுக்குள் அழைத்துச் சென்று தரிசனம் செய்து வைத்தனர். அ/மி நித்யகல்யாணி அம்பாள் சமேத மனமொத்த கண்டீசர் சன்னதிகளில் வழிபாடு செய்து அருட்பிரசாதம் பெற்றுக்கொண்டோம். மேலும் அங்குள்ள சுப்பிரமணியசுவாமி கோயிலிலும் தரிசனம் செய்தோம். அவர்கள் வழங்கிய சிற்றுண்டி காப்பி முதலியன பெற்று, பின்னர் அவர்களிடம் விடைபெற்று மேலும் 4 கி.மீ. வடமேற்காக நடந்து வேந்தன்பட்டி நெய் நந்தி புகழ்பெற்ற சிவன் கோயிலை காலை 11.30 மணி அளவில் சென்றடைந்து அங்கு காத்திருந்த நகரத்தார் பெருமக்களின் அன்பான வரவேற்பை ஏற்றுக்கொண்டு கோயிலுக்குள் சென்று சிவதரிசனம் மற்றும் நெய் நந்தி தரிசனம் செய்து மீனாட்சி அம்மை சமேத சொக்கலிங்க மூர்த்தி சன்னதி களில் வணங்கி அருள்பிரசாதம் பெற்றோம். வேந்தன் பட்டி நகரத்தார்கள் ஆர்வமுடன் வழங்கிய மதிய உணவையும் பகல் 1.30 மணி அளவில் சாப்பிட்டு ஓய்வு எடுத்துக் கொண்டோம்.

வேந்தன்பட்டியிலிருந்து மாலை 4 மணி அளவில் புறப்பட்டு 1 கி.மீ. தொலைவில் உள்ள மேலைச்சிவபுரி ஊரை அடைந்தோம். அவ்வூர் நகரத்தார்கள் அடியார் களை அன்புடன் வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச் சென்று சிவதரிசனம் சிறப்பாகச் செய்து வைத்தார்கள். மீனாட்சி அம்மை சமேத சொக்கலிங்க மூர்த்தி சன்னதிகளில் வழிபாடு செய்து அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். அவர்கள் வழங்கிய சிற்றுண்டி காப்பியை அருந்தியவுடன் மேலும் வடக்கே உள்ள பொன்புதுப்

பட்டியை அடைந்து அங்குள்ள நகரத்தார் பெருமக்களின் வரவேற்பை ஏற்றுக் கொண்டு சிவன் கோயிலுக்குள் சென்று புவனேசுவரி அம்மை சமேத பூலோகநாதர் சன்னதிகளில் வழிபாடு செய்து அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். பின்னர் அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு வலையபட்டி மலையாண்டி கோயிலுக்குச் சென்றோம். அங்கு காத்திருந்த நகரத்தார்கள் அடியார்களை வரவேற்று சிவன் கோயிலில் சிவதரிசனம் சிறப்பாகச் செய்து வைத்தார்கள். வடுவகிர் விழியாள் சமேத வலம்புரிநாதர் சன்னதிகளில் வழிபட்டு அருட் பிரசாதம் பெற்றுக்கொண்டு மகிழ்ச்சி அடைந்தோம். இரவு 7 மணி அளவில் காசிஸ்ரீ சி.இராமையா அவர் களின் நண்பர் இல்லத் திருமண வீட்டில் அடியார்களை வரவேற்று அன்புடன் உபசரித்து அறுசுவையுடன் இரவு உணவு விருந்து அளித்தார்கள். மணமக்களை வாழ்த்து மாறும் கேட்டுக் கொண்டார்கள். பின்னர் அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டோம். தங்க நகை வியாபாரம் சிறப்பாகச் செய்து வரும் அ.சொ.நாச்சியப்பன் அவர்கள் இல்லத்தில் இரவு தங்க இடமளித்தார்கள். இரவு அனைவருக்கும் பால்பழம் அளித்து உபசரித்தார்கள். அன்று அவர்கள் இல்லத்தில் நன்றாக உறங்கினோம்.

**11.12.2010 சனிக்கிழமை**

| | | |
|---|---|---|
| நடந்த மொத்த தூரம் | : | 30 கி.மீ. |
| காலை உணவு | : | ஆ.தெக்கூர் நகரத்தார்கள். |
| மதிய உணவு | : | வேந்தன்பட்டி |
| இரவு உணவு | : | வலையப்பட்டியில் சி.இராமையா நண்பர் இல்லத் திருமண விருந்து. |
| இரவு தங்கல் | : | வலையபட்டி அ.செ. அவர்கள் இல்லம். |

**சென்று தரிசித்த ஆலயங்கள்**

1. மகிபாலன்பட்டி விநாயகர் கோயில்.
2. ஆ.தெக்கூர் சிவாலயம்.
3. நெற்குப்பை சிவாலயம்.
4. சுப்பிரமணிய சுவாமி ஆலயம்.
5. வேந்தன்பட்டி சிவன் கோயில்.
6. மேலைச் சிவபுரி சிவன் கோயில்.
7. பொன்புதுப்பட்டி சிவன் கோயில்
8. வலையபட்டி மலையாண்டி கோயில்

**பன்னிரண்டாம் நாள் : 12.12.2010 ஞாயிற்றுக்கிழமை**

காலை 5.00 மணி அளவில் புறப்பட்டு 5 கி.மீ. தூரம் நடந்து உலகம்பட்டி சென்றடைந்தோம். காலை 6.00 மணி அளவிலேயே கோயிலில் திரண்டிருந்த நகரத்தார்கள் மற்றும் ஆச்சிமார்கள் அனைவரும் மிக மகிழ்ச்சியோடும் அன்போடும் அடியார்களை வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச்சென்றனர். திருமுறைகள் தீப அலங்கார ஒளி வெள்ளத்தில் இசை யோடு உலக நாயகி சமேத உலகநாதர் சன்னதிகளில் மெய் மறந்து வழிபாட்டினை நிறைவு செய்தோம். அருட்பிரசாதம் பெற்றோம். இவ்வூர் நகரத்தார்களும் பெண்டிர்களும் காட்டிய அன்பும் பக்தியும் மறக்க முடியாத ஒன்று. காலை உணவு கொப்பனாபட்டியில் ஏற்பாடு செய்திருப்பதால் உலகம்பட்டி நகரத்தார்களின் விருப்பத்தை ஏற்றுக் கொள்ள முடியவில்லை. எனினும் காப்பி ரொட்டி அன்புடன் அளித்து விடைகொடுத்து அனுப்பினார்கள். அங்கிருந்து காலை 7.15 மணி அளவில் புறப்பட்டு, கிழக்காக 5 கி.மீ. நடந்து 8.30 மணி அளவில்

கொப்பனாபட்டி அடைந்தோம். அங்கு காத்திருந்த நகரத்தார்கள் ஆச்சிமார்கள் அனைவரும் அடியார்களை வரவேற்று நகரப்பிள்ளையார் கோயிலுக்கு அழைத்துச் சென்று சிறப்புத் தரிசனம் செய்து வைத்தார்கள். அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டபின் அடியார் களுக்குக் காலை அமுது படைத்தார்கள். மகிழ்ச்சியுடன் உட்கொண்ட பிறகு 5 கி.மீ. தொலைவில் உள்ள வேகுப்பட்டி ஊரை நோக்கி நடந்தோம். காலை 11.00 மணி அளவில் ஊர் அடைந்தோம். சிவன் கோயிலில் கூடியிருந்த நகரத்தார்கள் அடியார்களை வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச் சென்று சிவதரிசனம் செய்து வைத்தார்கள். சிவகாமசுந்தரி சமேத சிவலோகநாதர் சன்னதிகளில் நின்று வணங்கி அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். மதியம் 1.30 மணி அளவில் உணவுண்டு அருகில் உள்ள அலுவலர் இல்லங்கள் ஒன்றில் ஓய்வு எடுத்துக் கொண்டோம். பின்னர் மாலை 4.00 மணி அளவில் அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு 3 கி.மீ. தொலைவில் உள்ள பூலாங்குறிச்சி ஊர் நோக்கி நடந்தோம். மாலை 5 மணிக்குக் கோயிலுக்குச் சென்று சேர்ந்தோம். அங்கு வந்திருந்த பூலாங்குறிச்சி நகரத்தார்கள் அடியார்களை வரவேற்று சண்முக விநாயகர் கோயிலுக்குள் அழைத்துச்சென்று சிறப்பாகத் தரிசனம் செய்து வைத்தார்கள். மலைகளும் நீர் நிலைகளும் சூழ்ந்த இந்த ஊர் பார்ப்பதற்கு ரம்மியமாக உள்ளது. அவர்களிடம் சொல்லிக் கொண்டு 3 கி.மீ. தூரம் உள்ள செவ்வூர் நோக்கி விரைவாக நடந்தோம். திருப்பணி நடந்து கொண்டிருந்த கோயிலில் வந்திருந்த நகரத்தார்கள் அடியார்களை வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச் சென்று சிவதரிசனம் செய்து வைத்தார்கள்.

மீனாட்சி அம்மை சமேத சொக்கலிங்கமூர்த்தி சன்னதி களில் நின்று பணிவுடன் வழிபட்டு அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். செவ்வூர் நகரத்தார்கள் கட்டிய திருமண மண்டபத்தில் இரவு உணவு அளித்துத் தங்குவதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். ஆகவே அங்கு ஓய்வு கொண்டோம்.

**12.12.2010 ஞாயிற்றுக்கிழமை**

| | |
|---|---|
| நடந்த மொத்த தூரம் | : 21 கி.மீ. |
| காலை உணவு | : கொப்பனாபட்டி நகரத்தார்கள். |
| மதிய உணவு | : வேகுப்பட்டி நகரத்தார்கள். |
| இரவு உணவு | : செவ்வூர் நகரத்தார்கள். |
| இரவு தங்கல் | : செவ்வூர் நகரத்தார் கல்யாண மண்டபம். |

**சென்று தரிசித்த ஆலயங்கள்**

1. உலகம்பட்டி சிவன் கோயில்.
2. கொப்பனாபட்டி விநாயகர் கோயில்.
3. வேகுப்பட்டி சிவன் கோயில்.
4. வேகுப்பட்டி பெருமாள் கோயில்.
5. பூலாங்குறிச்சி சண்முக விநாயகர் கோயில்.
6. செவ்வூர் சிவன் கோயில்.

**பதின்மூன்றாம் நாள் : 13.12.2010 திங்கள்**

செவ்வூர் திருமண மண்டபத்தில் அதிகாலையில் எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு 4 கி.மீ. தொலைவு உள்ள மிதிலைப்பட்டி நோக்கி நடந்து காலை 7.30 மணிக்குச் சிவன் கோயிலை அடைந்தோம். அங்கு காத்திருந்த நகரத்தார்கள் அடியார்களை வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச் சென்று சிவதரிசனம் செய்து

வைத்தார்கள். சிவயோகவல்லி சமேத ஆவுடைநாதர் சன்னதிகளில் வழிபாடு செய்து அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். அங்கு முன்னர் வாழ்ந்து வந்த தமிழ்ப் புலவர்கள், கவிராயர்கள் பற்றிய செய்தியைச் சொன்னார்கள். அவர்கள் வழங்கிய காலை உணவைப் பெற்றுக் கொண்டு விடைபெற்று அடுத்த ஊரான இராங்கியம் நோக்கி 2 கி.மீ. நடந்தோம். காலை 9.00 மணி அளவில் நகரத்தார் முருகன் கோயிலில் வந்திருந்த ராங்கியம் நகரத்தார்கள் அடியார்களை வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச் சென்று தரிசனம் செய்து வைத்தார்கள். சன்னதியில் நின்று வணங்கித் திருநீற்றுப் பிரசாதம் பெற்றுக் கொண்டோம். அங்குள்ள சிதம்பர விநாயகர் கோயிலையும் தரிசித்துக் கொண்டு அவர்களிடம் விடைபெற்றுக் காலை 10.00 மணி அளவில் குருவிக்கொண்டான்பட்டி நோக்கி 2 கி.மீ. நடந்தோம். ஊரை அடைந்தவுடன் அவ்வூர் நகரத்தார் கள் அடியார்களை வரவேற்றுச் சிவன் கோயிலுக்குள் அழைத்துச் சென்று தரிசனம் செய்து வைத்தார்கள். மீனாட்சி அம்மை சமேத சொக்கலிங்க மூர்த்தி சன்னதி களில் வணங்கி அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். அவர்கள் வழங்கிய பிரசாதங்களைப் பெற்றுக் கொண்டு மேலும் 2 கி.மீ. நடந்து காலை 11.30 மணிக்கு ஆவினிப் பட்டியை அடைந்தோம். அண்மையில் கும்பாபிஷேகம் செய்யப்பெற்ற கோயிலில் இருந்த நகரத்தார்கள் அடியார் களை வரவேற்று சிவதரிசனம் செய்து வைத்தார்கள். மீனாட்சி சுந்தரேசுவரர் சன்னதிகளில் நின்று தியானித்து வழிபாடு செய்து விடைபெற்றுக் கொண்டு நகரக்கோயி

லான இரணியூர்க் கோயிலை நோக்கி 6 கி.மீ. நடந்து சென்று மதியம் 1.30 மணி அளவில் கோயிலை அடைந் தோம். அங்கு வந்திருந்த கானாடுகாத்தான் கருப்பன் செட்டியார் அவர்கள் அடியார்களை வரவேற்று கோயிலுக்குள் அழைத்துச்சென்று சிவபுரம் தேவி சமேத ஆட்கொண்டநாதர் சன்னதிகளில் தீப ஆராதனை செய்ய ஏற்பாடு செய்தார்கள். மனதார வழிபாடு செய்த அடியார்களுக்கு விபூதி பிரசாதம் வழங்கினார்கள், பெற்றுக் கொண்டபின்னர் நகரவிடுதியில் சுவையான பகல் உணவு ஏற்பாடு செய்து வழங்கினார்கள். வயிறுஆர உண்டு சிறிது ஓய்வு எடுத்துக் கொண்டோம். பின்னர் மாலை 4 மணி அளவில் எழுந்து இளையாற்றக்குடி நகரக்கோயிலுக்கு 3 கி.மீ. தூரம் நடந்து மாலை 5.00 மணிக்குக் கோயிலை அடைந்தோம். அங்கு இருந்த நகரத்தார்கள் அடியார்களை வரவேற்று நகரக் கோயிலுக்கு அழைத்துச் சென்று தரிசனம் செய்து வைத்தார்கள். நித்திய கல்யாணி சமேத கைலாசநாதர் சுவாமி தரிசனம் செய்து கொண்டு உடனே புறப்பட்டு 3 கி.மீ. நடந்து விராமதியை அடைந்து அங்கிருக்கும் நகரப்பிள்ளையாரை வணங்கித் திருநீற்றுப் பிரசாதம் பெற்றுக் கொண்டு பின்னர் கீழச்சிவல்பட்டி சிவன் கோயிலுக்குச் சென்றோம். அங்கிருந்த நகரத்தார்கள் அடியார்களை வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச் சென்று தரிசனம் செய்து வைத்தார்கள். மீனாட்சி சுந்தரேசுவரர் சன்னதிகளில் வழிபட்டோம். நகரத்தார் கள் வீட்டில் ஏற்பாடு செய்திருந்த இரவு உணவை உண்டு அங்கேயே இரவு தங்கினோம்.

**13.12.2010 திங்கள் கிழமை**

நடந்த மொத்த தூரம் : 22 கி.மீ.
காலை உணவு : மிதிலைபட்டி நகரத்தார்கள்.
மதிய உணவு : இரணியூர் கானாடுகாத்தான் கருப்பையா செட்டியார்.
இரவு உணவு, தங்கல் : கீழச்சிவல்பட்டி CT.S. சித. உறவினர் இல்லம்.

**சென்று தரிசித்த ஆலயங்கள்**

1. மிதிலைப்பட்டி சிவன்கோயில்.
2. ராங்கியம் முருகன் கோயில்.
3. ராங்கியம் சிதம்பர விநாயகர் கோயில்.
4. குருவிக்கொண்டான்பட்டி சிவன் கோயில்.
5. ஆவினிப்பட்டி சிவன் கோயில்.
6. இரணியூர் நகரக்கோயில்.
7. இளையாற்றக்குடி நகரக்கோயில்.
8. விராமதி விநாயகர்கோயில்.
9. கீழச்சிவல்பட்டி சிவன் கோயில்.

**பதினாலாம் நாள் :**
**14.12.2010 செவ்வாய்க்கிழமை**

கீழச்சிவல்பட்டி CT.S.சிதம்பரம் உறவினர் வீட்டில் ஓய்வுக்குப் பிறகு காலை எழுந்து காலைக்கடன்களை முடித்துக் கொண்டு பி.அழகாபுரி ஊருக்குள் சென்று அங்குள்ள விநாயகர் கோயிலில் தரிசனம் செய்தோம். பின்னர் அங்கிருந்த முருகன் கோயிலுக்கும் சென்று வழிபட்டோம். காலை 6.00 மணி அளவில் புறப்பட்டு 5 கி.மீ. தொலைவில் உள்ள சிறுகூடல்பட்டி நோக்கி நடந்து காலை 7.30 மணி அளவில் கவியரசர்

கண்ணதாசன் பிறந்து வணங்கிய மலையரசி கோயிலை அடைந்தோம். அங்கு காத்திருந்த நகரத்தார்கள் அடியார்களை வரவேற்று மலையரசி கோயிலுக்குள் அழைத்துச் சென்று தெய்வ தரிசனம் செய்து வைத்தார்கள். பின்னர் அவர்கள் ஊரில் உள்ள சிவன் கோயிலுக்கு அழைத்துச் சென்று சிவதரிசனம் செய்து வைத்தார்கள். மீனாட்சி அம்மை சமேத சுந்தரேசுவரர் சன்னதிகளில் வழிபட்டு அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். பிறகு சிறுகூடல்பட்டி நகரத்தார்கள் விரும்பியபடி கோயிலுக்குப் பின்னால் உள்ள பள்ளியில் அருமையான காலை உணவு உண்டோம். பிறகு காலை 9.00 மணிக்குப் புறப்பட்டு 2 கி.மீ. நடந்து நகரக் கோயிலான வயிரவன்பட்டியை காலை 9.30 மணி அளவில் அடைந்தோம். அங்கிருந்த நகரத்தார்கள் அடியார்களை வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச் சென்று சிறப்பான தரிசனம் செய்து வைத்தார்கள். வடிவுடைநாயகி சமேத வளரொளிநாதர் சன்னதிகளில் நின்று மனம் உருகி வணங்கி அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். கோயில் அருகில் உள்ள நகர விடுதியில் அடியார்களுக்கு நல்ல இளநீர் வெட்டிக் கொடுத்தார்கள். அதனை அருந்தி அங்கிருந்து காலை 10.30 மணிக்கு புறப்பட்டு 8 கி.மீ. தூரத்தில் உள்ள நேமம் கோயிலுக்கு குறுக்கு வழியாகச் சென்றோம். பாதை சரியாகத் தெரியவில்லை. ஆதலால் பல இடங்களில் சுற்றி வந்து நகரக் கோயிலான நேமம்கோயிலை மதியம் 12.30 மணி அளவில் அடைந்தோம். தலைவர் TCT தேனப்பன் அந்தக் கோயிலைச் சேர்ந்தவராதலால் சிறப்புத் தரிசனம் மற்றும் சுவையான மதிய உணவு இவைகளுக்கு ஏற்பாடு

செய்திருந்தார்கள். சௌந்தர நாயகி சமேத ஜெயங்கொண்ட சோழீசர் சன்னதிகளில் நின்று வழிபாடு செய்து திருநீற்றுப் பிரசாதம் பெற்றுக் கொண்டோம். நேமம் கோயில் விடுதியில் அவர்கள் அன்புடன் வழங்கிய மதிய உணவை மகிழ்ச்சியுடன் உண்டு சிறிது ஓய்வு எடுத்துக் கொண்டோம். மதியம் 3.00 மணிக்கு அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு 4 கி.மீ. தொலைவில் உள்ள பலவான்குடி ஊருக்கு மாலை 4.00 மணிக்குச் சென்று அடைந்தோம். அங்குள்ள சிவன் கோயிலில் பலவான்குடி நகரத்தார்கள் வந்திருந்து அடியார்களை வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச் சென்று சிறப்பான சிவதரிசனம் செய்து வைத்தார்கள். மீனாட்சி அம்மை சமேத சொக்கலிங்க மூர்த்தி சன்னதிகளில் வழிபாடு செய்து அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். பின்னர் பாதயாத்திரைக் குழுவில் நடந்து வந்த செந்தில் குமரப்பன் இல்லத்தில் பஞ்சமூர்த்திகள் எழுந்தருளச் செய்து அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். அவர்கள் இல்லத்தில் வழங்கிய காப்பியை அருந்திய பின்னர் பலவான்குடி கோயிலில் காரைக்குடியிலிருந்து மு.அ.சுப. அண்ணாமலை கொண்டு வந்து வழங்கிய மாலைப்பலகாரத்தையும் பலவான்குடி நகரத்தார்கள் வழங்கிய பலகாரத்தையும் உண்டு மகிழ்ந்து மாலை 5.30 மணி அளவில் புறப்பட்டு ஆ. முத்துப்பட்டணத்திற்கு 1 கி.மீ. நடந்து மாலை 6.00 மணிக்கு உலகநாயகி அம்மன் கோயிலைச் சென்றடைந்தோம். ஆ.முத்துப்பட்டணம் நகரத்தார்கள் அடியார்களை வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச் சென்று தரிசனம் செய்து வைத்தார்கள். உலகநாயகி அம்மை

சன்னதியில் வழிபாடு செய்து நகரத்தார்களிடம் விடை பெற்றுக் கொண்டு அடுத்துள்ள ஆத்தங்குடி சிவன் கோயிலுக்குச் சென்றோம். ஆத்தங்குடி நகரத்தார்கள் அடியார்களை அன்புடன் வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச்சென்று சிவதரிசனம் செய்து வைத்தார்கள். மீனாட்சி அம்மை சமேத சுந்தரேசுவரர் சன்னதிகளில் வழிபாடு செய்து அருட்பிரசாதம் பெற்று அவ்வூர் நகரத்தார்களிடம் விடைபெற்றுக்கொண்டு மேலும் 1 கி.மீ. நடந்து இரவு 7.30 மணிக்கு கோனாபட்டு சிவன் கோயிலுக்குச் சென்றோம். அந்த ஊர் நகரத்தார்கள் அடியார்களை வரவேற்று முதலில் பிள்ளையார் கோயிலுக்கு அழைத்துச் சென்று தரிசனம் செய்து வைத்தார்கள். பின்னர் அடுத்துள்ள சிவன் கோயிலுக்கு அழைத்துச் சென்று சிவதரிசனம் செய்து வைத்தார்கள். மீனாட்சி அம்மை சுந்தரேசுவரர் சன்னதிகளில் நின்று வழிபட்டு அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். பின்னர் அவர்கள் வழங்கிய இரவு உணவு சாப்பிட்டு விடைபெற்றுக் கொண்டோம்.

நேமத்தான்பட்டி சாலையில் அமைந்துள்ள சின்னியம்மத்தாள் படைப்பு வீட்டில் இரவு தங்கினோம்.

**14.12.2010 செவ்வாய்க்கிழமை**

நடந்த மொத்த தூரம் : 23 கி.மீ.

காலை உணவு : சிறுகூடல்பட்டி நகரத்தார்கள்.

மதிய உணவு : T.C.T. தேனப்பன் ஏற்பாடு நேமம்.

இரவு உணவு : கோனாபட்டு நகரத்தார்கள்.

இரவு தங்கல் : கோனாபட்டு சின்னியம்மத்தாள் படைப்பு வீடு.

**சென்று தரிசித்த ஆலயங்கள்**

1. பி.அழகாபுரி விநாயகர் கோயில்.
2. சிறுகூடல்பட்டி சிவன்கோயில்.
3. வயிரவன்பட்டி நகரக்கோயில்.
4. நேமம் நகரக்கோயில்.
5. பலவான்குடி சிவன் கோயில்.
6. ஆ.முத்துப்பட்டணம் அம்மன் கோயில்.
7. ஆத்தங்குடி சிவன் கோயில்.
8. கோனாபட்டு பிள்ளையார் கோயில்.
9. கோனாபட்டு சிவன் கோயில்.

**பதினைந்தாம் நாள் : 15.12.2010 புதன்கிழமை**

அதிகாலையில் எழுந்து படைப்பு வீட்டில் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு படைப்பு வீட்டில் சின்னியம்மத்தாளை வணங்கி 7.00 மணிக்குப் புறப்பட்டு திருமயம் ஊர் நோக்கி நடந்தோம். 8 கி.மீ. நடந்து காலை 9.00 மணி அளவில் திருப்பத்தூரை அடைந்தோம். இடையில் சாலை ஓரத்தில் ஒரு இடத்தில் அடியார்களை வரவேற்று கானாடுகாத்தான் கருப்பன் செட்டியார் காலை உணவு வழங்கினார்கள். அவர்களுக்கு நன்றி தெரிவித்து உடன்புறப்பட்டு 4 கி.மீ. நடந்தோம். காலை 10.30 மணி அளவில் நெய்க்கோணம் என்ற வி.லெட்சுமிபுரம் சென்றடைந்தோம். சாலை ஓரத்தில் இருக்கும் சிவன்கோயிலுக்குச் சென்றோம். கோயிலுக்கு வந்திருந்த நகரத்தார்கள் மற்றும் ஆச்சிமார்கள் அடியார்களை வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச்சென்று தரிசனம் செய்து வைத்தார்கள். மீனாட்சி அம்மை சுந்தரேசுவரர் சன்னதிகளில் நின்று வழிபட்டு அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். அவர்கள் அன்புடன் அளித்த ரொட்டி காப்பியை

6

அருந்திவிட்டு அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு மேலும் 1 கி.மீ. நடந்து விராச்சிலை ஊரை காலை 11.30 மணி அளவில் அடைந்தோம். சாலை ஓரம் உள்ள அம்மன் கோயிலில் வணங்கி சிவன் கோயில் நோக்கி நடந்தோம். அங்கு காத்திருந்த காசிஸ்ரீ முத்துப் பழநியப்பன் மற்றும் நகரத்தார்கள் அடியார்களை வரவேற்று சிவன்கோயிலுக்குள் அழைத்துச்சென்று தரிசனம் செய்து வைத்தார்கள். ரட்சாவதாரிம்மை வில்வவனநாதர் சன்னதிகளில் வழிபட்டு விபூதி பிரசாதம் பெற்றோம். பின்னர் கோயிலில் அனைவருக்கும் ரொட்டி காப்பி வழங்கினார்கள். சிறிது ஓய்விற்குப் பின் விராச்சிலை நகரத்தார்களிடம் விடைபெற்றுக்கொண்டு 4 கி.மீ. நடந்து மதியம் 1.30 மணிக்கு பனையப்பட்டி ஊரை அடைந்தோம். அங்குள்ள சிவன் கோயிலில் ஆவலுடன் காத்திருந்த அவ்வூர் ஆச்சிமார்கள் மற்றும் நகரத்தார்கள் அடியார்களை வரவேற்றுச் சிவன் கோயிலுக்கு அழைத்துச்சென்று திவ்வியதரிசனம் செய்து வைத்தார்கள். மீனாட்சியம்மை சுந்தரேசுவரர் சன்னதி களில் வழிபட்டு அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். அருகில் உள்ள விடுதியில் மதியம் 2.30 மணிக்கு அடியார்கள் அனைவருக்கும் மதிய உணவு வழங்கினார் கள். சிறிது ஓய்விற்குப்பின்னர் பனையப்பட்டி நகரத்தார்களிடம் விடைபெற்றுக் கொண்டு மாலை 4.00 மணி அளவில் 2 கி.மீ. நடந்து குழிபிறை ஊரை அடைந் தோம். குழிபிறை நகரத்தார்கள் அடியார்களை வரவேற்று சிவன் கோயிலுக்கு அழைத்துச் சென்று சிறப்பான தரிசனம் செய்து வைத்தார்கள். மீனாட்சியம்மை சொக்கலிங்க மூர்த்தி சன்னதிகளில் வழிபட்டு அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். இன்முகத்துடன் அவர்கள் வழங்கிய மாலை சிற்றுண்டி, காப்பியை ஏற்றுக் கொண்டோம். பின்னர் அவர்களிடம் விடைபெற்றுக்

கொண்டோம். மாலை 5.30 மணி அளவில் புறப்பட்டு பனையப்பட்டி வழியாக 7 கி.மீ. நடந்து நற்சாந்துபட்டி சிவன்கோயிலை இரவு 7.30 மணி அளவில் சென்றடைந் தோம். அங்கிருந்த நற்சாந்துபட்டி நகரத்தார்கள் சிவன்கோயிலுக்குள் அழைத்துச்சென்று நல்ல தரிசனம் செய்து வைத்தார்கள். சிவகாமிஅம்மை சிதம்பரேசுவரர் சன்னதிகளில் மனம் உருகி வணங்கி அருட்பிரசாதம் பெற்றுக்கொண்டோம். பின்னர் அவர்கள் வழங்கிய இரவு உணவையும் ஏற்றுக்கொண்டு நற்சாந்துபட்டி நகரத்தார் இல்லத்தில் இரவு தங்கினோம்.

**15.12.2010 புதன்கிழமை**

| | | |
|---|---|---|
| நடந்த மொத்த தூரம் | : | 30 கி.மீ. |
| காலை உணவு | : | திருமயம் சாலை ஓரம் கானாடுகாத்தான் கருப்பன் செட்டியார். |
| மதிய உணவு | : | பனையப்பட்டி நகரத்தார்கள். |
| இரவு உணவு | : | நற்சாந்துபட்டி நகரத்தார்கள். |
| இரவு தங்கல் | : | நற்சாந்துபட்டி நகரத்தார் இல்லம். |

**சென்று தரிசித்த ஆலயங்கள்**

1. வி.லெட்சுமிபுரம் சிவன்கோயில்.
2. விராச்சிலை அம்மன் கோயில்.
3. விராச்சிலை சிவன் கோயில்.
4. பனையப்பட்டி சிவன் கோயில்.
5. குழிபிறை சிவன் கோயில்.
6. நற்சாந்துபட்டி சிவன்கோயில்.

**பதினாறாம் நாள் : 16.12.2010 வியாழக்கிழமை**

நற்சாந்துபட்டி நகரத்தார் இல்லத்தில் ஓய்விற்குப் பின் அதிகாலையில் எழுந்து காலைக் கடன்களை முடித்துக்

கொண்டு அவர்கள் வழங்கிய காலை காப்பியை அருந்திவிட்டு காலை 6.30 மணி அளவில் புறப்பட்டு 8 கி.மீ. நடந்து லெ.விலக்கு இடத்தை அடைந்தோம். செந்தூரான் கல்லூரியில் காத்திருந்த புதுக்கோட்டை நகரத்தார்கள் அனைத்து அடியார்களையும் வரவேற்றுக் கல்லூரிக்குள் அழைத்துச் சென்று காலை 9.00 மணி அளவில் காலைப் பலகாரம் காப்பி வழங்கினார்கள். அதனை ஏற்று உண்டு அவர்களுக்கு நன்றி சொல்லி விடைபெற்றுக் கொண்டு காலை 10.00 மணிக்கு மேலும் 6 கி.மீ. நடந்து செங்கரை என்னும் ஊரை மதியம் 12.00 மணிக்கு அடைந்தோம். அங்குள்ள கறுப்பர் கோயிலில் தங்கி ஓய்வு எடுத்துக்கொண்டோம். மதியம் 2.00 மணிக்கு மதிய உணவு உண்டோம். பின்னர் ஓய்வு. மாலை 4.00 மணி அளவில் அங்கிருந்து புறப்பட்டு அரிமளம் மாலை 6.00 மணி அளவில் போய்ச் சேர்ந் தோம். அரிமளம் சிவன் கோயிலில் இருந்த நகரத்தார்கள் அடியார்களை வரவேற்றுச் சிவன் கோயிலுக்குள் அழைத்துச் சென்று தரிசனம் செய்து வைத்தார்கள். மீனாட்சியம்மை சுந்தரேசுவரார் சன்னதிகளில் வழிபாடு செய்து அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். இரவு முத்துச் செல்லப்ப செட்டியார் அவர்கள் இல்லத்தில் அன்புடன் இரவு உணவு வழங்கினார்கள். அன்று இரவு அவர்கள் இல்லத்திலேயே தங்கினோம்.

**16.12.2010 வியாழக்கிழமை**

| | | |
|---|---|---|
| நடந்த மொத்த தூரம் | : | 22 கி.மீ. |
| காலை உணவு | : | லெ. விலக்கு செந்தூரான்கல்லூரி புதுக்கோட்டை நகரத்தார்கள். |

மதிய உணவு : அடியார்களின் ஏற்பாடு செங்கரை.

இரவு உணவு : அரிமளம் நகரத்தார்கள்.

இரவு தங்கல் : அரிமளம் செல்லப்ப செட்டியார் இல்லம்.

**சென்று தரிசித்த ஆலயங்கள்**

1. செங்கரை கறுப்பர் கோயில்.
2. அரிமளம் சிவன் கோயில்.

**பதினேழாம் நாள்: 17.12.2010 வெள்ளிக்கிழமை**

அதிகாலை எழுந்து காலைக் கடன்களை முடித்துக் கொண்டு காலை 6.30 மணிக்குப் புறப்பட்டு 8 கி.மீ. நடந்து காலை 9.00 மணி அளவில் ராயவரம் ஊரை அடைந்தோம். அங்குள்ள சிவன்கோயிலில் தரிசனம் செய்தோம். நகரப் பொதுவான முத்துமாரியம்மன் கோயிலில் நகரத்தார்கள் அடியார்களை வரவேற்றுத் தரிசனம் செய்து வைத்தனர். அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். காலை உணவும் அன்புடன் அளித்தார் கள். காலை 10.00 மணி அளவில் புறப்பட்டு 4 கி.மீ. நடந்து 11.00 மணிக்கு கடியாபட்டி ஊரை அடைந்தோம். கடியாபட்டி நகரத்தார்கள் அடியார்களை வரவேற்று சிவன் கோயிலுக்கு அழைத்துச் சென்று தரிசனம் செய்து வைத்தார்கள். பிரமவித்யாநாயகி பூமிசுவரர் சன்னதியில் நின்று வழிபட்டு விபூதி பிரசாதம் பெற்றுக் கொண் டோம். பின்னர் அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு மதியம் 2.30 மணியளவில் கொத்தமங்கலம் சென்று சாலை ஓரம் உள்ள சிவன் கோயிலில் வழிபட்டோம். இங்குள்ள ஆவுடைநாயகி திருவீசர் சன்னதிகளில் வழிபட்டு அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். பின்னர் கொத்தமங்கலம் ஊருக்குள் ராவ்பகதூர் செட்டியார் இல்லத்தில் மதிய உணவு ஏற்பாடு செய்து

அடியார்களுக்கு வழங்கினார்கள். சாப்பிட்டு சிறிது ஓய்வு எடுத்துக் கொண்டு அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு மதியம் 3.30 மணிக்குப் புறப்பட்டு கொ.லெட்சுமிபுரம் நெடுங்குடி வழியாக 8 கி.மீ. நடந்து மாலை 6.00 மணி அளவில் தேனிபட்டி ஊர் போய்ச் சேர்ந்தோம். அங்குள்ள சிவன் கோயிலில் தேனிபட்டி நகரத்தார்களும் ஆச்சிமார்களும் அடியார்களை வரவேற்றுச் சிவன்கோயிலுக்குள் அழைத்துச் சென்றார்கள், சிறப்பான தரிசனம் செய்து வைத்தார்கள். அகிலாண்டேசுவரி அகத்தீசுவரர் சன்னதிகளில் வழிபாடு செய்து விபூதி பிரசாரம் பெற்றுக் கொண்டோம். பின்னர் ஊருக்குள் உள்ள தேனிபட்டி நகரத்தார் ஒருவரின் இல்லத்தில் இரவு உணவிற்கும் தங்குவதற்கும் ஏற்பாடு செய்திருந்தார்கள். ஆகவே, அடியார்கள் அனைவரும் அங்கு சென்று உணவு உட்கொண்டு இரவு தங்கினோம்.

**17.12.2010 வெள்ளிக்கிழமை**

| | |
|---|---|
| நடந்த மொத்த தூரம் | : 25 கி.மீ. |
| காலை உணவு | : ராயவரம் நகரத்தார்கள். |
| மதிய உணவு | : கொத்தமங்கலம் நகரத்தார்கள். |
| இரவு உணவு | : தேனிபட்டி நகரத்தார்கள். |
| இரவு தங்கல் | : தேனிபட்டி நகரத்தார் இல்லம். |

**சென்று தரிசித்த ஆலயங்கள்**

1. ராயவரம் சிவன்கோயில்.
2. ராயவரம் மாரியம்மன் கோயில்.
3. கடியாபட்டி சிவன் கோயில்.
4. கொத்தமங்கலம் சிவன்கோயில்.
5. தேனிபட்டி சிவன்கோயில்.

**பதினெட்டாம் நாள் : 18.12.2010 சனிக்கிழமை**

தேனிபட்டி நகரத்தார் வீட்டில் அதிகாலை எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு காலை 7.00 மணிக்குப் புறப்பட்டு 8 கி.மீ. நடந்து காலை 9.30 மணிக்கு கொ.லெட்சுமிபுரம் சிவன்கோயில் வந்து சேர்ந்தோம். அன்று வைகுண்ட ஏகாதசியை அடுத்த துவாதசி திதி ஆகையால் கொ.லெட்சுமிபுரம் நடராஜன் செட்டியார் அடியார்கள் அனைவருக்கும் சாப்பாடு ஏற்பாடு செய்து கொண்டு கோயிலுக்கு வந்தார்கள். முன்னதாக சிவன்கோயில் சென்று சன்னதிகளில் வணங்கி மீனாட்சி அம்மை சொக்கலிங்கம் மூர்த்தி சன்னதியில் வழிபாடு செய்து அருட்பிரசாதம் பெற்றோம். சாப்பாட்டுடன் வந்த நடராஜன் செட்டியார் அடியார்கள் அனைவரையும் அன்புடன் வரவேற்றுக் காலை துவாதசி சாப்பாடு வழங்கினார்கள். பின்னர் அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு 3 கி.மீ. நடந்து காலை 11.30 மணி அளவில் கானாடுகாத்தான் தலைவர் அவர்கள் T.CT. தேனப்ப செட்டியார் இல்லம் வந்தோம். அங்கு இருந்த கானாடுகாத்தான் நகரத்தார்கள் மற்றும் ஆச்சிமார்கள் சிறப்பான வரவேற்புடன் மாட்டாஊரணி பிள்ளையார் கோயிலுக்கு அழைத்துச்சென்று பிள்ளையாருக்குத் தங்க அங்கி சாத்தி திவ்விய தரிசனம் செய்து வைத்தார்கள். பிள்ளையாரை மனம் உருகி வணங்கி அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். பின்னர் தலைவர் இல்லத்தில் மதியம் 1 மணி அளவில் அடியார்கள் அனைவருக்கும் பலகாரம் வழங்கி உபசரித்தார்கள். அங்கு மதியம் சிறிது ஓய்வு எடுத்துக் கொண்டு பிறகு 2 கி.மீ. நடந்து நேமத்தான்பட்டி சென்று அங்குள்ள நகரத்தார் ஆச்சிமார்கள் அங்குள்ள முருகன்

பிள்ளையார் கோயில்களுக்கு அழைத்துச்சென்று சுவாமி தரிசனம் செய்து வைத்தார்கள். அவர்கள் வழங்கிய காப்பியை அருந்திய பின் அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு மாலை 4.00 மணி அளவில் புறப்பட்டு 3 கி.மீ. நடந்து பள்ளத்தூர் சிவன் கோயிலுக்கு வந்து நகரத்தார்கள் வரவேற்புடன் பள்ளத்தூர் சிவன் கோயிலுக்குச் சென்று மீனாட்சிஅம்மை சுந்தரேசுவரர் சன்னதிகளில் வழிபாடு செய்தோம். மாலை 5.00 மணி அளவில் புறப்பட்டு குறுக்கு சாலை வழியாக 7 கி.மீ. கடந்து பாலையப்பட்டி வழியாக மாலை 6.00 மணிக்கு கண்டனூரரை அடைந்தோம். கண்டனூர் நகரத்தார்கள் அடியார்களை அன்புடன் வரவேற்று சிவன் கோயிலுக்குள் அழைத்துச்சென்று தரிசனம் செய்து வைத்தனர் மீனாட்சியம்மை சுந்தரேசுவரர் சன்னதிகளில் வழிபாடு செய்து அருட்பிரசாதம் பெற்றுக் கொண்டோம். பக்கத்தில் உள்ள நகரத்தார் இல்லத்தில் தங்குவதற்கும் இரவு உணவிற்கும் ஏற்பாடு செய்திருந்தார்கள். அங்கு சென்று உணவு உண்டு தங்கி ஓய்வு பெற்றோம்.

**18.12.2010 சனிக்கிழமை**

| | | |
|---|---|---|
| நடந்த மொத்த தூரம் | : | 27 கி.மீ. |
| காலை உணவு | : | சாப்பாடு கொ.லெட்சுமிபுரம் சிவன்கோயில் |
| மதிய உணவு | : | பலகாரம் கானாடுகாத்தான் தலைவர் வீடு |
| இரவு உணவு | : | கண்டனூர் நகரத்தார் இல்லம் |
| இரவு தங்கல் | : | நகரத்தார் இல்லம் கண்டனூர் |

**சென்று தரிசித்த ஆலயங்கள்**

1. கொ.லெட்சுமிபுரம் சிவன் கோயில்.
2. கானாடுகாத்தான் பிள்ளையார் கோயில்.
3. நேமத்தான்பட்டி பிள்ளையார் கோயில்.

4. நேமத்தான்பட்டி முருகன்கோயில்.
5. பள்ளத்தூர் சிவன் கோயில்.
6. கண்டனூர் சிவன் கோயில்.

**பத்தொன்பதாம் நாள்: 16.12.2010 ஞாயிற்றுக்கிழமை**

கண்டனூர் திருமண மண்டபத்தில் ஓய்விற்குப்பின் அதிகாலை எழுந்து காலைக்கடன்களை முடித்துக் கொண்டு காலை 6.00 மணிக்குப் புறப்பட்டு 3 கி.மீ நடந்து காலை 6.45 மணி அளவில் புதுவயல் சென்று நகரத்தார்கள் வரவேற்புடன் கைலாய விநாயகர் கோயில் சென்று வணங்கிப் பிரசாதம் பெற்றுக் கொண்டோம். பின்னர் அவர்களிடம் விடைபெற்றுக் காலை 7.15 மணி அளவில் புறப்பட்டுக் கண்டனூர் வழியாக 5 கி.மீ. நடந்து கோ.அழகாபுரி சென்று அங்குள்ள அழகி நாச்சியம்மனை வணங்கி நகரத்தார் பிள்ளையார் கோயில் சென்றோம். அங்கிருந்த நகரத்தார் மற்றும் ஆச்சிமார்கள் அடியார்களை வரவேற்று சுவாமி தரிசனம் செய்து வைத்தார்கள். பின்னர் 9 மணி அளவில் புறப்பட்டு 2 கி.மீ. நடந்து கோட்டையூர் எழில் நகரில் அமைந்துள்ள எச்சில் பொறுக்கி ஆறுமுகம் சுவாமிகள் அதிஷ்டானம் சென்று வணங்கி அங்கு L.P.L அவர்கள் ஏற்பாட்டில் வழங்கிய காலை உணவை உண்டு, அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு பேராசிரியர் ஏ.எல். சிதம்பரம் அவர்களின் ஆசிபெற்று, அரை கி.மீ. நடந்து காலை 10.00 மணிக்கு கோட்டையூர் சிவன் கோயிலை அடைந்தோம். அங்கிருந்து கோட்டையூர் நகரத்தார் அடியார்களை வரவேற்றுச் சிறப்பான தரிசனம் செய்து வைத்தார்கள். மீனாட்சியம்மை சொக்கலிங்க மூர்த்தி சன்னதிகளில் வழிபாடு செய்து விபூதி பிரசாதம் பெற்றுக்கொண்டோம். அவர்கள்

வழங்கிய சிற்றுண்டியை உண்டு அவர்களுக்கு நன்றி தெரிவித்து விடைபெற்றுக் கொண்டு காலை 11.00 மணி அளவில் அங்கிருந்து புறப்பட்டு 1 கி.மீ. நடந்து வேலங்குடி நகரக்கோயில் சென்றடைந்தோம். அங்கிருந்த நகரத்தார்கள் அடியார்களை வரவேற்று சுவாமி தரிசனம் செய்து வைத்தார்கள். காமாட்சியம்மை சண்டீஸ்வரர் சன்னதிகளில் வழிபாடு செய்து அருட்பிரசாதம் பெற்றோம். அங்கிருந்து காலை 11.30 மணி அளவில் புறப்பட்டு 7 கி.மீ. நடந்து மதியம் 1.45 மணி அளவில் சூரக்குடிக் கோயில் சென்றோம். அங்கு சூரக்குடி நகரத்தார்கள், பட்டுக்கட்டி சோமு முதலியோர்கள் அடியார்களை வரவேற்றுக் கோயிலுக்குள் அழைத்துச் சென்று சுவாமி தரிசனம் சிறப்பாக செய்து வைத்தார்கள். ஆவுடைநாயகி தேசிக நாதர் சன்னதிகளில் நின்று வழிபாடு செய்து அருட்பிரசாதம் பெற்றோம். பின்னர் நகர விடுதியில் அனைவருக்கும் மதிய உணவு அளித்தார்கள். மகிழ்ச்சியோடு உண்டு சற்று ஓய்வு எடுத்துக் கொண்டோம். மாலை 4.00 மணி அளவில் சூரக்குடி நகரத்தார்களுக்கு நன்றி தெரிவித்து விடைபெற்றுக் கொண்டு 3 கி.மீ. மேலும் நடந்து 5.00 மணி அளவில் சொக்கலிங்கம்புதூர் சென்றடைந்தோம். அவ்வூர் சிவன்கோவிலில் காத்திருந்த நகரத்தார்கள் அடியார்களைச் சிறப்பாக வரவேற்று தரிசனம் செய்து வைத்தார்கள். மீனாட்சி அம்மை சுந்தரேசுவரர் சன்னதிகளில் வழிபட்டு விபூதி பிரசாதம் பெற்றுக் கொண்டு மகிழ்ந்தோம். அவர்கள் அளித்த மாலை சிற்றுண்டி, காப்பியை அருந்தி அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டோம். அடுத்து அங்கிருந்து மாலை 6.00 மணி அளவில் புறப்பட்டு 4 கி.மீ. நடந்து மாலை 7.00 மணி அளவில் உ.சிறுவயல் சென்று

சேர்ந்தோம். அங்கிருந்த சிவன் கோயிலையும் மற்றும் பொன்அழகி அம்மன் கோயிலையும் வெளியில் இருந்தவாறே வணங்கினோம். நகரத்தார்கள் வரவேற்று அன்று இரவு உ.சிறுவர் நகரத்தார் வீட்டில் பலகாரம் வழங்கினார்கள். அங்கேயே இரவு தங்கினோம்.

**19.12.2010 ஞாயிற்றுக்கிழமை**

| | |
|---|---|
| நடந்த மொத்த தூரம் | : 20 கி.மீ. |
| காலை உணவு | : கோட்டையூர் நகரத்தார்கள். |
| மதிய உணவு | : சூரக்குடி நகரக்கோயில் நகரத்தார்கள். |
| இரவு உணவு | : உ.சிறுவயல் நகரத்தார் இல்லம். |
| இரவு தங்கல் | : உ.சிறுவயல் நகரத்தார் இல்லம். |

**சென்று தரிசித்த ஆலயங்கள்**

1. புதுவயல் விநாயகர் கோயில்.
2. கோ.அழகாபுரி சிவன்கோயில்.
3. கோ.அழகாபுரி அழகிய நாச்சியம்மன் கோயில்.
4. கோ.அழகாபுரி நகரத்தார் விநாயகர் கோயில்.
5. கோட்டையூர் எச்சில்பொறுக்கி ஆறுமுகசுவாமி அதிஷ்டானக்கோயில்.
6. கோட்டையூர் சிவன் கோயில்.
7. வேலங்குடி நகரச் சிவன் கோயில்.
8. சொ.புதூர் சிவன் கோயில்.
9. உ.சிறுவயல் சிவன்கோயில்.
10. உ.சிறுவயல் பொன்அழகி அம்மன் கோயில்.

**இருபதாம்நாள்: 20.12.2010 திங்கள்கிழமை**

உ.சிறுவயல் நகரத்தார் இல்லத்திலிருந்து அதிகாலை 6 மணி அளவில் புறப்பட்டு 3 கி.மீ. நடந்து குன்றக்

குடியை அடைந்து கிரிவலம் வந்து முருகப்பெருமானை வணங்கி காலை உணவை அங்கேயே முடித்துக் கொண்டு மேலும் 3 கி.மீ. நடந்து பிள்ளையார்பட்டியைச் சென்று அடைந்தோம். காலை 10 மணி அளவில் பிள்ளையார்பட்டி கிரிவலம் வந்து கோயிலுக்குச் சென்று கற்பக விநாயகரை வணங்கி நடைப்பயணத்தை நிறைவு செய்தோம். குருநாதர் அருசோ பிள்ளையார்பட்டி வந்து பாதயாத்திரை அன்பர்களை வரவேற்றுத் திருமண மண்டபத்தில் நிறைவு விழாவில் கலந்து கொண்டு அனைவருக்கும் ஆசி வழங்கினார்கள். 11 அடியார்களுக்கும் 96 ஊர் என்ற அடைமொழிப்பட்டம் வழங்கப் பட்டது. அடியார்கள் அனைவரும் சேர்ந்து நிழல்படம் எடுத்துக் கொண்டோம். பிள்ளையார்பட்டி விடுதியில் அனைவரையும் வரவேற்று மதிய உணவு வழங்கினார்கள். அதன்பின்னர் அவரவர் இல்லங்களுக்குச் சென்றோம்.

ஆக 01.12.2010 அன்று பிள்ளையார்பட்டியில் தொடங்கிய 9 நகரக்கோயில்கள் மற்றும் 96 ஊர் நகரத் தார் வாழும் ஊர்களுக்கான பாதயாத்திரை 20.12.2010 அன்று பிள்ளையார்பட்டியில் நிறைவடைந்தது.

முற்றும்

## 5. திருவாசகம் முற்றோதல் நான்கு ஆண்டு பயணத்திட்டம்

**நகரத்தாரின் 9 நகரக்கோயில்கள், 96 ஊர் நகரத்தார் வசிக்கும் 76 ஊர்க் கோயில்கள், நகரத்தார் குருபீடங்கள் 3, 96 ஊர் நகரத்தார் வணங்கும் பொதுக்கோயில் 1 மற்றும் திருவாசகம் பாடப்பெற்ற 7 தலங்கள் ஆகிய 96 ஊர்களில் திருவாசக முற்றோதல்.**

## நான்குஆண்டுப் பயணத்திட்டம்

காலம்:4 ஆண்டுகள் முற்றோதல் செய்யும் ஊர்கள்:96

**2011 ஜனவரி முதல் 2014 டிசம்பர் வரை**

நேரம்: காலை 9.00 மணி முதல் மாலை 4.00 மணி வரை

*96 ஊர்களில் வாழ்ந்த நகரத்தார் மக்கள் 200 ஆண்டுகளுக்கு முன்னர் தற்போது வாழும் 76 ஊர்களுக்கு மாறிவந்து சிவன் கோயில், விநாயகர் கோயில், முருகன் கோயில், அம்மன் கோயில் ஆகியவற்றை அமைத்துக் கொண்டு சிவ வழிபாடு, ஆலய வழிபாடு மற்றும் சிறு தெய்வ வழிபாடு செய்து கொண்டு வந்துள்ளார்கள். அவரவர் ஊர்க் கோயில்களுக்கும் 9 நகரக் கோயில்களுக்கும் அனைத்து வகையான திருப்பணிகள் செய்தும் குடமுழுக்கு செய்தும் சிறப்புற வாழ்ந்து வந்திருக்கிறார்கள்.*

*இவ்வாறு ஆன்மிகப் பணிகள் செய்து வந்த நகரத்தார் பெருமக்கள் தமிழ் மொழியின் மேல் மாறாத காதல் கொண்டு பக்தி இலக்கியங்களான 12 திருமுறைகளையும் பயின்றும் ஓதுவித்தும் போற்றி வந்துள்ளார்கள். அவற்றில் 51 பதிகங்கள் – தலைப்புகளில் 658 பாடல்கள்*

கொண்ட எட்டாம் திருமுறையான திருவாசகம் மிக மேன்மையான கருத்துக்களையும் உள்ளத்தை உருக்கும் சிவானுபவங்களையும் கொண்டு ஒளிர்வதாகக் கருதப்பெறுகிறது. ஆகவே மக்கள் ஒன்று கூடி ஒரே நாளில் ஏழு மணி நேரத்தில் இசையோடு ஓதிக் கூட்டு வழிபாடு செய்து வருகிறார்கள். விழாக்கள் சிறக்கவும் தொழுவார்கள். தொல்லைகள் நீங்கவும் வழுத்துவார் களின் வல்வினைகள் போக்கவும் அண்மைக் காலமாக இவ்வழக்கம் மேலோங்கி வருகிறது. கல்லைப் பிசைந்து கனியாக்கும் இப்பக்குவம் அனைத்து ஊர்களிலும் பரவ வேண்டும்.

கல்வி மிகு காரை நகரில் **'திருநாவுக்கரசர் இறைபணி மன்றம்'** என்ற அமைப்பை ஏற்படுத்தி அதன் வாயிலாக திருவாசக முற்றோதல் ஒவ்வொரு மாதமும் விரும்புவோர் இல்லங்களிலும் கோயில்களிலும் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இதுவரை 200 முற்றோதல் வேள்வி செய்யப்பெற்றுள்ளது.

01.10.2010 முதல் 20.12.2010 வரையிலான காலத்தில் பதினோரு சிவனடியார்கள் நகர்க்கோயில்கள் 9 மற்றும் நகரத்தார் ஊர்க் கோயில்கள் 76-க்கும் பாதயாத்திரை சென்று வெற்றிகரமாக நிறைவு செய்துள்ளார்கள். அனைத்து ஊர்களிலும் நகரத்தார் பெருமக்களும் ஆச்சிமார்களும் ஒன்று கூடிக் காத்திருந்து அவர்களை வரவேற்று, ஆலய தரிசனம் செய்வித்து சிறப்பாக உபசரித்து தங்களின் பேரன்பையும் மாறாத பண்பையும் வெளிப்படுத்தியமை நினைந்து போற்றுதற்குரியது. இதனைத் தொடர்ந்து இம்மைக்கும் மறுமைக்கும்

நன்மையே பயக்கும் திருவாசகத் தொடர் முற்றோதல் 96 ஊர்களுக்கும் சென்று செய்துவர இறைவன் அருள் கூட்டுவித்துள்ளது. இதில் தோராயமாக 50 அடியார்கள் கலந்து கொள்வார்கள்.

| | | |
|---|---|---|
| 1. | நகரக்கோயில்கள் | 9 |
| 2. | நகரத்தார் ஊர்க்கோயில்கள் | 76 |
| 3. | நகரத்தார் குரு பீடங்கள் | 3 |
| 4. | 96 ஊர் நகரத்தார்கள் வணங்கும் பொதுக்கோயில், குன்றக்குடி | 1 |
| 5. | திருவாசகப் பதிகங்கள்/பாடல் பெற்ற தலங்கள் | 7 |
| | **ஆக மொத்தம்** | **96** |

இத்தொடர் முற்றோதல் 2011 ஜனவரியில் தொடங்கி 2014 டிசம்பர் மாதம் நிறைவு பெறும். மூலக்கடவுளான கற்பக விநாயகர் அருளாட்சி செய்யும் பிள்ளையார் பட்டியிலிருந்து முற்றோதல் தொடங்குகிறது. கோயில் என்றும் தில்லை என்றும் போற்றப்பெறும் சிதம்பரத்தில் நிறைவு பெறுகிறது.

**இத்தொடர் முற்றோதலின் நோக்கம்:**

1. நகரத்தார் பெருமக்களும் பெண்டிரும் பக்திவலையில் பட்டு சிவானுபவம் பெற வேண்டும். அன்பெனும் ஊற்று பெருக வேண்டும். கடமை மறவாது ஆற்றி கண்ணியமாகவும் அமைதியாகவும் வாழவேண்டும்.

2. முற்றோதல் வேள்வியினால் ஏற்படும் நல்லலைகள் ஊரையும் ஊரில் வாழும் மக்கள் அனைவரையும் செழிப்புற, நலம் பெற, வளம் பெறச் செய்ய வேண்டும். தன்னிறைவு அடைய வேண்டும்.

3. அனைத்து சமூகத்தினரும் அன்புடனும் ஒற்றுமை யுடனும் சேர்ந்து வாழ்ந்து சிறப்படைய வேண்டும். தன்னை உணர வேண்டும். சொந்த ஊரை மறக்காது தொடர்பிலேயே இருக்க வேண்டும்.

4. பெண்டிரும் பெண் பிள்ளைகளும் கல்வி, கேள்வி பெற்று பண்பிலே சிறந்து நலம்பெற வாழ வேண்டும். நன்மக்களைப் பெற வேண்டும். பண்புநலம் கெடாது வளர்த்து பாரினில் புகழ்பெறச் செய்யவேண்டும்.

5. மணமக்கள், தம்பதியர் அன்னியோன்னியமாகவும் ஒற்றுமையாகவும் வாழ்நாள் முழுதும் அமைதியாக வாழ வேண்டும். தன்னை அர்ப்பணிக்க வேண்டும். ஒருவருக்கொருவர் அனுசரித்தும் விட்டுக் கொடுத்தும் அன்பு செய்ய வேண்டும்.

ஆகவே நகரத்தார் பெருமக்கள், நடப்புக் காரியக்காரர்கள் வேண்டிய உதவிகள், முன்னேற்பாடுகள், வசதிகள் செய்து, இக்குழு வந்து போவதற்கான வசதிகள் மற்றும் காலை, மதிய உணவு முதலியவைகளையும் வழங்கிக் கௌரவிக்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறேன். உலக நன்மை அளிக்கும் இம் மகா வேள்வியில் ஊர்மக்கள் அனைவரும் கலந்துகொள்ள வேண்டும். சிவனருள் பெற்றுப் பேரின்ப வாழ்வு அடைய வேண்டும்.

இத்தொடர் தொடர்ந்து நடைபெறவும் மீண்டும் மீண்டும் தொடரவும் நகரத்தார் பெருமக்கள் நற்பயன் அடைந்து சிறக்கவும் என் மனமார்ந்த ஆசிகள். தகவல்களுக்கு முன்னதாகவே தொடர்புகொள்க.

'முத்தமிழ்ப்பேரறிஞர்' 'கவிஞர்கோ' 'பொற்கிழிக்கவிஞர்' 'காசிஸ்ரீ' 'கயிலைமணி'
**அரு.சோமசுந்தரன்** M.A., B.T.–குருநாதர்,
Cell: 94431 38196, *காரைக்குடி 24.01.2001*

**தொடர்புக்கு முகவரி:**

1. 'சிவநெறிச் செல்வர்', 'சித்தாந்த ரத்தினம்', திரு. ஈப்போ நாராயணன் 36, ப.அ.லெ.தெரு, காரைக்குடி - 630 001. Cell : 94433 30543
2. 'சித்தாந்த ரத்தினம்' திரு. தே. சொக்கலிங்கம், 24, தேரோடும் வீதி, காரைக்குடி - 630 001. Cell: 94865 61473
3. 'சித்தாந்த ரத்தினம்'
   'சைவசித்தாந்த பயிற்சிமைய அமைப்பாளர்'
   Er. திரு. மு.அருணாசலம், 11, தெற்கு 3–சந்து செக்காலை, காரைக்குடி - 630 002. Cell: 94436 10769
4. செயலர் & பொருளாளர்: 'காசிஸ்ரீ'
   'திருத்தலச்செல்வர்' "சித்தாந்த ரத்தினம்" '96 ஊர்'
   Er. பழ. மாணிக்கம் பி.இ.,
   பழநியப்ப விலாஸ், 104/60, மூன்றாம் வீதி, முத்துப்பட்டணம், காரைக்குடி - 630 001. Cell: 94445 56931



7

| நாள் | தேதி | முற்றோதல் செய்யும் இடம் |
|---|---|---|
| 1 | விக்ருதி<br>தை ய எ உ<br>31.01.2011 | பிள்ளையார்பட்டி நகரக்கோயில் |
| 2 | விக்ருதி<br>மாசி கஉ<br>13.02.2011 | குன்றக்குடி சண்முகநாதன்கோயில் |
| 3. | விக்ருதி<br>மாசி யருஉ<br>27.02.2011 | துழாவூர் குருபீடம் |
| 4. | விக்ருதி<br>மாசி உயசஉ<br>13.03.2011 | பாதரக்குடி குருபீடம் |
| 5. | விக்ருதி<br>பங்குனி யஙஉ<br>27.03.2011 | கோவிலூர் குருபீடம் |
| 6. | விக்ருதி<br>பங்குனி உயஎஉ<br>10.04.2011 | செக்காலை நகரச் சிவன் கோயில் |
| 7. | கர சித்திரை<br>உயருஉ<br>24.04.2011 | முத்துப்பட்டணம் மீனாட்சி அம்மன் கோயில் |
| 8. | கர<br>சித்திரை உயருஉ<br>08.05.2011 | காரைக்குடி நகரச்சிவன் கோயில் |
| 9. | கர<br>வைகாசி யகஉ<br>22.05.2011 | நாகநாதபுரம் நகரச்சிவன் கோயில் |
| 10. | கர வைகாசி<br>உயசஉ<br>12.06.2011 | மாத்தூர் நகரக்கோயில் |
| 11. | கர<br>ஆனி யகஉ<br>26.06.2011 | இலுப்பக்குடி நகரக்கோயில் |
| 12. | கர<br>ஆனி உயருஉ<br>10.7.2011 | அரியக்குடி நகரச் சிவன் கோயில் |

| நாள் | தேதி | முற்றோதல் செய்யும் இடம் |
|---|---|---|
| 13. | கர ஆடி அஉ 24.07.2011 | அமராவதி புதூர் சிவன் கோயில் |
| 14. | கர ஆடி உயசஉ 14.08.2011 | ஆறாவயல் நகரச் சிவன் கோயில் |
| 15. | கர ஆவணி யகஉ 25.08.2011 | தாணிச்சாவூரணி நகரப் பிள்ளையார் கோயில் |
| 16. | கர ஆவணி உயருஉ 10.07.2011 | தேவகோட்டை நகரச்சிவன் கோயில் |
| 17. | கர புரட்டாசி அஉ 25.09.2011 | கல்லுப்பட்டி நகரச்சிவன் கோயில் |
| 18. | கர புரட்டாசி அஉ 09.10.2011 | கல்லல் பிள்ளையார் கோயில் சிவன் கோயில் |
| 19. | கர ஐப்பசி எஉ 23.10.2011 | அரண்மனை சிறுவயல் சிவன் கோயில் |
| 20. | கர ஐப்பசி உயஎஉ 13.11.2011 | வெற்றியூர் சிவன் கோயில் |
| 21. | கர கார்த்திகை யகஉ 27.11.2011 | கொ. அழகாபுரி விநாயகர் கோயில் |
| 22. | கர கார்த்திகை உயருஉ 11.12.2011 | நாட்டரசன்கோட்டை சிவன் கோயில் |
| 23. | கர மார்கழி சஉெ 25.12.2011 | சக்கந்தி விநாயகர் கோயில் |
| 24. | கர மார்கழி 08.01.2012 | சோழபுரம் சிவன் கோயில் |

| நாள் | தேதி | முற்றோதல் செய்யும் இடம் |
|---|---|---|
| 25. | கர<br>தை<br>22.01.2012 | கீழப்பூங்குடி சிவன் கோயில் |
| 26. | கர<br>தை<br>12.02.2012 | ஒக்கூர் விநாயகர் கோயில் |
| 27. | கர<br>மாசி<br>26.02.2012 | காளையார்மங்கலம் சிவன் கோயில் |
| 28. | கர<br>மாசி<br>11.03.2012 | நடராஜபுரம் பனங்குடி சிவன் கோயில் |
| 29. | கர<br>பங்குனி<br>25.03.2012 | பாகனேரி சிவன் கோயில் |
| 30. | கர<br>பங்குனி<br>08.04.2012 | மதகுபட்டி சிவன் கோயில் |
| 31. | நந்தன<br>சித்திரை<br>22.04.2012 | அலவாக்கோட்டை சிவன் கோயில் |
| 32. | நந்தன<br>சித்திரை<br>13.05.2012 | சொக்கநாதபுரம் சிவன் கோயில் |
| 33. | நந்தன<br>வைகாசி<br>27.05.2012 | செம்பனூர் பிள்ளையார் கோயில் |
| 34. | நந்தன<br>வைகாசி<br>10.06.2012 | மானகிரி முருகன் கோயில் |
| 35. | நந்தன<br>ஆனி<br>24.06.2012 | நாச்சியார்புரம் அம்மன் கோயில் |
| 36. | நந்தன<br>ஆனி<br>08.07.2012 | சிறாவயல் சிவன் கோயில் |

| நாள் | தேதி | முற்றோதல் செய்யும் இடம் |
|---|---|---|
| 37. | நந்தன ஆடி 22.07.2012 | கண்டரமாணிக்கம் சிவன் கோயில் |
| 38. | நந்தன ஆடி 12.08.2012 | பட்டமங்கலம், கருங்குளம் முருகன் கோயில் |
| 39. | நந்தன ஆவணி 26.08.2012 | கண்டவராயன்பட்டி சிவன் கோயில் |
| 40. | நந்தன ஆவணி 09.09.2012 | மகிபாலன்பட்டி விநாயகர் கோயில் |
| 41. | நந்தன புரட்டாசி 23.09.2012 | ஆ.தெக்கூர் சிவன் கோயில் |
| 42. | நந்தன புரட்டாசி 14.10.2012 | நெற்குப்பை சுப்பிரமணியர் கோயில் |
| 43. | நந்தன ஐப்பசி 28.10.2012 | வேந்தன்பட்டி சிவன் கோயில் |
| 44. | நந்தன ஐப்பசி 11.11.2012 | மேலைச்சிவபுரி சிவன் கோயில் |
| 45. | நந்தன கார்த்திகை 25.11.2012 | பொன்புதுப்பட்டி சிவன் கோயில் |
| 46. | நந்தன கார்த்திகை 09.12.2012 | வலையபட்டி சிவன் கோயில் |
| 47. | நந்தன மார்கழி 23.12.2012 | பொன்புதுப்பட்டி சிவன் கோயில் |
| 48. | நந்தன மார்கழி 13.01.2013 | கொப்பனாபட்டி விநாயகர் கோயில் |

| நாள் | தேதி | முற்றோதல் செய்யும் இடம் |
|---|---|---|
| 49. | நந்தன<br>மார்கழி<br>27.01.2013 | வேகுப்பட்டி சிவன் கோயில் |
| 50. | நந்தன<br>தை<br>10.02.2013 | பூலாங்குறிச்சி சிங்காரவேலர் கோயில் |
| 51. | நந்தன<br>மாசி<br>24.02.2013 | செவ்வூர் நகரச்சிவன் கோயில் |
| 52. | நந்தன<br>மாசி<br>10.03.2013 | மிதிலைப்பட்டி நகரச்சிவன் கோயில் |
| 53. | நந்தன<br>பங்குனி<br>24.03.2013 | இராங்கியம் முருகன் கோயில் |
| 54. | நந்தன<br>பங்குனி<br>14.04.2013 | குருவிக்கொண்டான்பட்டி சிவன் கோயில் |
| 55. | விஜய<br>சித்திரை<br>28.04.2013 | இளையாற்றக்குடி நகரக்கோயில் |
| 56. | விஜய<br>சித்திரை<br>12.05.2013 | இரணிக்கோயில் நகரக்கோயில் |
| 57. | விஜய<br>வைகாசி<br>26.05.2013 | ஆவினிப்பட்டி சிவன் கோயில் |
| 58. | விஜய<br>வைகாசி<br>09.06.2013 | விராமதி விநாயகர் கோயில் |
| 59. | விஜய<br>ஆனி<br>23.06.2013 | கீழச்சிவல்பட்டி - பி.அழகாபுரி சிவன் கோயில் |
| 60. | விஜய<br>ஆனி<br>14.07.2013 | சிறுகூடல்பட்டி சிவன் கோயில் |

| நாள் | தேதி | முற்றோதல் செய்யும் இடம் |
|---|---|---|
| 61. | விஜய ஆடி 28.07.2013 | வைரவன்பட்டி நகரக் கோயில் |
| 62. | விஜய ஆடி 11.08.2013 | நேமம் நகரக் கோயில் |
| 63. | விஜய ஆவணி 25.08.2013 | பலவான்குடி சிவன் கோயில் |
| 64. | விஜய ஆவணி 08.09.2013 | ஆ.முத்துப்பட்டணம் அம்மன் கோயில் |
| 65. | விஜய புரட்டாசி 22.09.2013 | ஆத்தங்குடி சிவன் கோயில் |
| 66. | விஜய புரட்டாசி 13.10.2013 | கோனாபட்டு சிவன் கோயில் |
| 67. | விஜய ஐப்பசி 27.10.2013 | வி. இலட்சுமிபுரம் சிவன் கோயில் |
| 68. | விஜய ஐப்பசி 10.11.2013 | விராச்சிலை முருகன் கோயில் |
| 69. | விஜய கார்த்திகை 24.11.2013 | பனையப்பட்டி சிவன் கோயில் |
| 70. | விஜய கார்த்திகை 08.12.2013 | குழிபிறை சிவன் கோயில் |
| 71. | விஜய மார்கழி 22.12.2013 | நற்சாந்துபட்டி சிவன் கோயில் |
| 72. | விஜய மார்கழி 12.01.2013 | அரிமழம் சிவன் கோயில் |

| நாள் | தேதி | முற்றோதல் செய்யும் இடம் |
|---|---|---|
| 73. | விஜய<br>தை<br>26.01.2014 | இராயவரம் சிவன் கோயில் |
| 74. | விஜய<br>தை<br>09.02.2014 | கடியாபட்டி சிவன் கோயில் |
| 75. | விஜய<br>மாசி<br>23.02.2014 | கொத்தமங்கலம் சிவன் கோயில் |
| 76. | விஜய<br>மாசி<br>09.03.2014 | கொ.இலட்சுமிபுரம் சிவன் கோயில் |
| 77. | விஜய<br>பங்குனி<br>23.03.2014 | தேவிபட்டி சிவன் கோயில் |
| 78. | விஜய<br>பங்குனி<br>13.04.2014 | கானாடுகாத்தான் விநாயகர் கோயில் |
| 79. | ஜய<br>சித்திரை<br>27.04.2014 | நேமத்தான்பட்டி விநாயகர் கோயில் |
| 80. | ஜய<br>சித்திரை<br>04.05.2014 | பள்ளத்தூர் சிவன் கோயில் |
| 81. | ஜய<br>வைகாசி<br>26.05.2014 | கண்டனூர் சிவன் கோயில் |
| 82. | ஜய<br>வைகாசி<br>08.06.2014 | புதுவயல் விநாயகர் கோயில் |
| 83. | ஜய<br>ஆனி<br>22.06.2014 | கோ. அழகாபுரி விநாயகர் கோயில் |
| 84. | ஜய<br>ஆனி<br>13.07.2014 | கோட்டையூர் சிவன் கோயில் |

| நாள் | தேதி | முற்றோதல் செய்யும் இடம் |
|---|---|---|
| 85. | ஜய<br>ஆடி<br>27.07.2014 | வேலங்குடி நகரக்கோயில் |
| 86. | ஜய<br>ஆடி<br>10.08.2014 | சூரக்குடி நகரக் கோயில் |
| 87. | ஜய<br>ஆவணி<br>24.08.2014 | சொக்கலிங்கம் புதூர் சிவன் கோயில் |
| 88. | ஜய<br>ஆவணி<br>14.09.2014 | உ. சிறுவயல் சிவன் கோயில் |
| 89. | ஜய<br>புரட்டாசி<br>28.09.2014 | திருப்பெருந்துறை சிவன் கோயில் |
| 90. | ஜய<br>புரட்டாசி<br>12.10.2014 | உத்தரகோசமங்கை சிவன் கோயில் |
| 91. | ஜய<br>ஐப்பசி<br>26.10.2014 | திருக்கழுக்குன்றம் சிவன் கோயில் |
| 92. | ஜய<br>ஐப்பசி<br>09.11.2014 | திருவண்ணாமலை சிவன் கோயில் |
| 93. | ஜய<br>கார்த்திகை<br>23.11.2014 | திருவாரூர் சிவன் கோயில் |
| 94. | ஜய<br>கார்த்திகை<br>14.12.2014 | சீர்காழி சிவன் கோயில் |
| 95. | ஜய<br>மார்கழி<br>28.12.2014 | சிதம்பரம் கோயில் தில்லை |

## 6. 96 ஊர்களில் திருவாசக வேள்வி

(இக்கட்டுரைகள் முழுதும் எழுதியவர்:
திருவாசக மணி தெ.சொக்கலிங்கம்)

'பொற்கிழிக் கவிஞர்' 'காசிஸ்ரீ' 'கயிலைமணி' 'முத்தமிழ்ப் பேரறிஞர்' அருசோமசுந்தரன் அவர்களது ஏற்பாட்டில், அவர்களது சீரிய தலைமையின் கீழ், செயலளர் காசிஸ்ரீ பழ. மாணிக்கம் அவர்களின் செயற்பாட்டில் முதல்நாள். மாலை முடிவெடுத்து, மறுநாள் (31.1.2011) காலை பிள்ளையார்பட்டியில் 96 ஊர் திருவாசக முற்றோதலைத் தொடங்கினோம். 30 பேர் வந்து பாடினர். பிள்ளையார்பட்டி கோவில் தர்மகர்த்தா இந்நிகழ்ச்சியைத் தொடங்கி வைத்தார். குருநாதர் அருசோ ஆசி கூறினார். ஈப்போ நாராயணன் செட்டியார் வாழ்த்துரை வழங்கினார். அடியேன் சிறப்புரை ஆற்றினேன். திருவாசகம் முற்றோதல் முடிந்ததும் செயலர் காசிஸ்ரீ பழ.மாணிக்கம் நன்றி கூறினார். கற்பக விநாயகரை வழிபட்டுத் திருவாசக முற்றோதல் எனும் ஞானவேள்வியைத் தொடங்கினோம். மதிய உணவு பிள்ளையார்பட்டி நகர விடுதியில் வழங்கப்பெற்றது.

இனி பிள்ளையார்பட்டி முதல் 96 ஊர் பற்றிய விரிவான விவரங்களை இப்பகுதியில் காண்போம்.



# 7. பிள்ளையார்பட்டி - 31.01.2011

## பிள்ளையார்பட்டி ஸ்ரீ கற்பக விநாயகர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

கண்கண்ட தெய்வமாய்ப் பிள்ளையார் பட்டியில்
காலமெலாம் வீற்றி ருந்து
காக்கின்ற கற்பக விநாயகத் தெய்வமே!
கல்லெலாம் ஆனை முகவா!

விண்ணுளோர் அனைவரும் உன்அருள் பெற்றிட
விரைந்தோடி வருவ தாலே
விக்னங்கள் வாராமல் வெற்றிகள் பெற்றிட
விரைகிறார் மக்க ளெல்லாம்

பண்களால் பாடியும் வாசகம் ஓதியும்
பக்தியால் சுற்றி வந்தும்
பரவுவார் உன்முனே! உக்கிகள் போடுவார்
பஜனைகள் செய்வர் கோடி!

மண்களி கூரவும் மழைவளம் பொலியவும்
மாநிலம் செழிக்க வேண்டும்
மாண்புடைக் கற்பக விநாயக! தொழுகிறோம்
மகிழ்ச்சியாய்க் காக்க வாவா!

## பிள்ளையார்பட்டி - 31.01.2011

(தெ. சொக்கலிங்கம்)

நகரக் கோவில்களில் ஒன்று. காரைக்குடியிலிருந்து 14 கி.மீ. தொலைவு. பிள்ளையார்பட்டிக் கோவிலைச் சேர்ந்த நகரத்தார் 41 ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர். மொத்தப்புள்ளிகள் 3800. குன்றில் குடையப்பட்ட

குடவரைக் கோயிலில் அமர்ந்து அருள்செய்யும் கற்பகப்பிள்ளையார் வழிபாடு இங்கு சிறப்புற்றதால் இது பிள்ளையார்பட்டி என வழங்கப்படுகிறது. இத்திருக் கோயிலில் மூன்று மூலவர்கள் அமர்ந்தருள் செய்யும் சிறப்பு உண்டு.

**இங்கு வழிபடப்பெறும் பெருமான்கள்**

1. தேசிக விநாயகப்பிள்ளையார் என்ற கற்பகப் பிள்ளையார், 2. திருவீசர், 3. மருதீசர்

**இறைவியர்**

1. சிவகாமி, 2. வாடாமலர் மங்கை

கற்பகப்பிள்ளையாரைக் குடவரைக் கோவிலில் புடைச்சிற்பமாக உருவாக்கிய கல்தச்சர் பற்றிய குறிப்பு குடவரைக் கோவிலினுள் மேற்புறச் சுவரில் காணப்படுகிறது.

இக்கல்வெட்டில் காணப்படும் எழுத்துக்களை வைத்து இது கி.பி.5ஆம் நூற்றாண்டில் செதுக்கப்பட்டி ருக்கலாம் எனக் கல்வெட்டு அறிஞர்கள் கருதுகின்றனர்.

இங்குள்ள பிள்ளையார் சிற்பம் மிக அரிய சிற்பமாகும். இரண்டே கைகளை உடைய பிள்ளையார் சிற்பம் இங்கும் ஆப்கானிஸ்தானத்திலும் தவிர உலகில் வேறெங்கும் இல்லை என்பர். வடக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலத்தில் உள்ள பிள்ளையார் தம் வலக்கையில் சிவலிங்கத்தை ஏந்திப் பூசை செய்யும் அமைப்பும் அவரது தும்பிக்கை வலப்புறமாக வளைந்திருப்பதும் இச்சிற்பத் தின் தனித்தன்மைகளாகும். இங்குள்ள நடராஜர் சிற்பம் ஐம்பொன்னால் ஆகியது. இந்நடராஜரின் உடுக்கையில் தட்டினால் உடுக்கை ஒலியே உண்டாவது வியப்புக் குரியது. இக்கோயிலின் தலவிருட்சம் மருதமரமாகும்.

இங்கு நடைபெறும் விழாக்களில் மிகப்பெரியது சதுர்த்தி விழா ஆகும். பத்துநாள் விழாவாக நடைபெறும் இது ஆவணி மாதம் வளர்பிறை சதுர்த்தியன்று நிறைவெய்தும். சதுர்த்தி விரதம் பிடித்த நகரத்தார்கள் விரதம் நிறுத்துவதற்கு இவ்விழாவின்போது இங்கு வருவர். நகரக்கோவில்களுள் நாள்தோறும் அதிக எண்ணிக்கையில் மக்கள் வழிபடும் கோவில் இதுவேயாகும்.

பிள்ளையார்பட்டியில் சைவ ஆகமங்களையும் வேதங் களையும் அந்தணச் சிறுவர்களுக்குக் கற்பிக்கும் பள்ளி ஒன்று சிறப்பாக இயங்கி வருகிறது. திருச்சி நகரத்தார் சங்கம் இங்குதான் கூட்டுத் திருமணங்களைக் கோவில் நிர்வாகத்தின் உதவியோடு தொடர்ந்து நடத்தி வருகிறது. தமிழக அரசு இக்கோவிலைச் சுற்றுலாத்தலமாக அறிவித் துள்ளது. கற்பகப்பிள்ளையாரை வழிபட்டு வந்தால் அற்புதக்கீர்த்தியும் ஆனந்த வாழ்க்கையும் நிச்சயம் கிட்டும். கவியரசு கண்ணதாசனின் கீழ்க்கண்ட பாடலே அதற்குச் சாட்சி ஆகும்.

அற்புதக் கீர்த்தி வேண்டின்
ஆனந்த வாழ்க்கை வேண்டின்
நற்பொருள் குவிதல் வேண்டின்
நலமெலாம் பெருக வேண்டின்
கற்பக மூர்த்தி, தெய்வக்
களஞ்சியத் திருக்கை சென்று
பொற்பதம் பணிந்து பாரீர்
பொய்யில்லை கண்ட உண்மை!



## 8. குன்றக்குடி முருகன் துதி - 13.02.2011

(பொற்கிழிக் கவிஞர் அருசோ)

குன்றேறி நின்று மயிலேறி வந்து
குணமாகக் காக்கும் வேலா!
குன்றாத குன்றக் குடிவந்து காக்கும்
குறமாது வள்ளி கணவா!

நின்றாலும் நீயே! சென்றாலும் நீயே!
நினைவெல்லாம் நீயே முருகா!
நிகழ்கால மோடு வருங்காலம் எல்லாம்
நியாயங்கள் காக்கும் தேவா!

பொன்றாத அசுரப் படையாவும் போக்கிப்
புகையாக்கி வென்ற வீரா!
புனல்தந்து நல்ல மழைதந்து செல்வப்
பொருள்யாவும் காக்க வேண்டும்
கன்றாக நின்று கை கூப்பி இன்று
கனிவாகப் பாடு கின்றோம்
கலையாவும் நீயே! நிலையாகக் காப்பாய்
கண்கண்ட முருகா! வாவா!

## குன்றக்குடி - 13.02.2011

(தெ. சொக்கலிங்கம்)

அருள்தரும் ஆறுமுகப்பெருமான் வீற்றிருக்கும் குன்றக்குடி செட்டிநாட்டின் மையப்பகுதியாகும். செட்டி நாட்டின் வட்டகை பகுப்புமுறை குன்றக்குடியை மைய மாகக் கொண்டே அமைந்துள்ளது. செட்டி முருகன் என்றழைக்கப்படும் சண்முகநாதன் நகரத்தார்களால் போற்றப்படும் தெய்வம். குன்றக்குடி காரைக்குடியிலிருந்து 10 கி.மீ. தொலைவு. ஊருக்கு நடுவே வடபால் முகமும் தென்பால் தோகையும் கொண்டு நிற்பதொரு மயிலின் வடிவாகக் குன்றக்குடி மலை அமைந்துள்ளது. இம்மலைமேல் தென்முகம் நோக்கிய இராஜ கோபுரத் துடன் கம்பீரமாகத் திருக்கோவில் அமைந்துள்ளது.

இத்திருக்கோவில் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது. ஒன்று மலைக்கோவில் என்றும் மற்றொன்று கீழ்க்கோவிலென்றும் அழைக்கப்பெறுகிறது. மலைக்கோவிலின் மூலவர் அருள்தரு சண்முகநாதப் பெருமான்! ஆறு திருமுகங்களும் பன்னிரு திருக்கரங் களும் கொண்டு வடபால் முகமும் தென்பால் தோகை யும் கொண்ட மயில் வாகனத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியிருக்கிறார். இப்பெருமானின் வலப்பக்கத்தில் தனி மயில்வாகனத்தில் வள்ளியம்மையும் இடப்பக்கத்தில் தனி மயில் வாகனத்தில் தெய்வயானை அம்மையும் எழுந்தருளியிருக்கின்றனர். கருவறையில் இவ்வாறு தனித்தனி வாகனத்தில் தேவிமார் வீற்றிருக்கும் காட்சி காணற்கரியது. மலை அடிவாரத்தில் தோகையடி விநாயகர் கோவிலும் நகரத்தார் அன்னதான மடமும் அமைந்துள்ளன. அன்னதான மடத்தில் அழகிய தண்ட பாணி அருட்காட்சி அளிக்கிறார். தண்டாயுதபாணி கோவிலுக்கு மேற்கே சரவணப் பொய்கை உள்ளது.

மலை அடிவாரத்தில் தென்மேற்குத் திசையில் கீழ்க்கோவில் அமைந்துள்ளது. இங்கு தேனாற்று நாதரும் அழகம்மையும் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளனர். கிழக்கு மேற்காக நான்கு குடவரைக் கோவில்கள் உள்ளன. மேற்கேயிருந்து கிழக்கே வரிசையாக சுந்தரே சுவரர் கோவிலும், அண்ணாமலையார் (மாசிலீச்சுரம்) கோவிலும், மலைக்கொழுந்தீசர் கோவிலும் அடுத்துச் சண்டேசர் கோவிலும் அமைந்துள்ளன. மேற்கே மலையின்மேல் ஞானியார் மலை என்று வழங்கப்பெறும் இடம் உள்ளது. சரவணப்பொய்கை, தேனாறு, மயில் தீர்த்தம், சக்தி தீர்த்தம், பாண்டவர் தீர்த்தம், சண்முக நதி ஆகிய தீர்த்தங்கள் குன்றக்குடியில் உள்ளன.

குன்றக்குடி நகரத்தார்களுக்கு முக்கியமான தலமாகும். இத்தலத்திற்கு கிழக்கே, மேற்கே, தெற்கே உள்ள நகரத்தார்

களின் ஊர்கள் முறையே கீழவட்டகை, மேலவட்டகை, தெற்கு வட்டகை என்று வழங்கப்படுகின்றன. நான்கு ரதவீதிகளிலும் பல்வேறு ஊர் நகரத்தார்கள் கட்டியுள்ள மடங்கள், சத்திரங்கள், விடுதிகள் அமைந்துள்ளன. தைப்பூசத்திற்கு குன்றக்குடிக்கு நகரத்தார் காவடி எடுத்து வருவர். பழனிக்குச் செல்லும் பல்வேறு ஊர்க்காவடிகள் குன்றக்குடி அன்னதான மடத்தில் தங்கி இங்கிருந்து ஒன்று சேர்ந்து செல்லும். குன்றக்குடி அன்னதான மடம், கண்டனூர் அருளாடியார் குடும்பத்தின் நிர்வாகத்தில் இருக்கிறது. இரத்தினவேல் இங்குதான் வைத்துப் பாதுகாத்து வழிபடப் பெற்று வருகிறது.

குன்றக்குடி சண்முகநாதர் ஆலயத்திற்கு நகரத்தார்கள் நிறையத்திருப்பணிகள் செய்துள்ளனர். குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தின் அருளாட்சிக்கு உட்பட்டது; ஐந்து கோவில் தேவஸ்தானம் என்று கூறுவர். ஐந்து கோவில்களில் ஒன்று குன்றக்குடி சண்முகநாதர் ஆலயம். குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனகர்த்தர் குன்றக்குடி சண்முகநாதர் திருக்கோவிலின் பரம்பரைத் தர்மகர்த்தா ஆவார். தற்போது 46–ஆவது ஆதீன கர்த்தராக தவத் திரு பொன்னம்பல தேசிக சுவாமிகள் அருளாட்சி செய்து வருகின்றார். வருடப்பிறப்பு, திருக்கார்த்திகை, தைப்பூசம், பங்குனி உத்திரம் ஆகிய திருவிழாக்கள் இங்கு சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

13.02.11–ல் அருசோ தலைமையில் குன்றக்குடியில் காலை திருவாசகம் முற்றோதல் சிறப்பாக நிகழ்ந்தது. குன்றக்குடி மடத்தில் மதிய உணவு வழங்கி ஆசி கூறினார்கள். செயலர் காசிஸ்ரீ மாணிக்கம் நன்றி கூறினார். அருசோவுக்குக் குன்றக்குடி மடத்தில் பழைய அடிகளார் அருசோவின் முப்பதாவது நிறைவு விழா நிகழ்ந்தபொழுது பொன்னாடை போர்த்திப் “பல்துறைச் செந்நாப் பாவலர்” என்ற பட்டம் வழங்கினார்.

## 9. துழாவூர் குருபீடம் துதி - 27.02.11

(பொற்கிழிக் கவிஞர் அருசோ)

நீர்வளமும் நிலவளமும் நிறைந்த நல்ல
நெடுங்காலக் குருபீடம் பெண்க ளுக்கு!
சீர்வரிசை போல்வந்த குருபீ டம்காண்!
செட்டிமார் நாட்டினிலே ஆச்சி கட்குக்
கார்முகிலாய்ப் பஞ்சாட்சர உபதே சத்தைக்
கற்பிக்கும் துழாவூரின் குருவே போற்றி
பேர்பெற்ற நிரம்பஅழ கியர்கள் போற்றும்
மங்களாம் பிகைவாஞ்சி நாத போற்றி!

## துழாவூர் குருபீடம்

(தெ. சொக்கலிங்கம்)

நகரத்தார் பெண்கள் குருபீடம் துழாவூர் நிரம்ப அழகிய தேசிகர் ஆதீனத் திருமடமாகும். இப்போது 29–வது மடாதிபதியாக ஞானப்பிரகாச தேசிக நிரம்ப அழகியர் அருளாட்சி செய்து வருகிறார். துழாவூர் காரைக்குடி யிலிருந்து குன்றக்குடி செல்லும் சாலையில் குன்றக்குடி ஊருக்குள் நுழையும் முன் மேற்கே செல்லும் கிளைச்சாலையில் 2 கி.மீ. தொலைவில் உள்ள அழகிய சிற்றூராகும். துழாவூர் கிராமம் நிரம்ப அழகிய தேசிகருக்கு சவுந்திரபாண்டிய மன்னரால் கி.பி. 770–ல் அளிக்கப்பெற்றது. காவிரிப்பூம்பட்டினத்தில் நகரத்தார் கள் வேளாளர் குலப் பெண்களை மணந்ததால் வேளாளர் குல குருவாகிய ஆதி நிரம்ப அழகிய தேசிகரே நகரத்தார் குலப் பெண்களான ஆச்சிகளுக்கு உபதேசம் செய்யும் உரிமை பெற்றார். துழாவூர் மடத்தை ஞானப்பிரகாச தேசிகர் கி.பி.913–ல் நிறுவினார். அவர் ஆதி குருவின் பெயரால் நிரம்ப அழகிய தேசிகர் ஆதீனம்

என்றே மடத்துக்குப் பெயரிட்டார். குருவாக இருந்த அனைத்து 29 மடாதிபதிகளுக்கும் நிரம்ப அழகிய தேசிகர் என்ற ஆதி குருவின் பெயர் பட்டப்பெயராக வழங்கி வரலாயிற்று. 18-வது குருவான சத்திய ஞானதேசிகர், நிரம்ப அழகிய தேசிகர் என்ற ஆதி குருவின் பெயராலேயே பிரபலம் அடைந்த மாபெரும் புலவர் ஆவார். அவர் இயற்றிய 'சேதுபுராணம்' இலக்கியச் செறிவுடையது. திருப்பரங்குன்றப் புராணம், திருவையாற்றுப் புராணம், திருஞானசம்பந்தர் மாலை என்னும் நூல்களும் அவர் இயற்றியனவே ஆகும். சைவசித்தாந்த நூல்களான திருவருட்பயன், சிவஞான சித்தியார் ஆகியவற்றிற்கு உரை எழுதியுள்ளார். டாக்டர் உ.வே.சாமிநாத அய்யரின் தமிழாராய்ச்சிக்கு இம்மடம் ஏராளமான தமிழ்ச்சுவடிகளை அளித்து உதவியது.

இம்மடத்தில் 20-வது குருவாகிய தாண்டவேசுவர தேசிகர் காலத்தில் தமிழ்நாட்டில் முஸ்லிம் படையெடுப்புக்கள் நிகழ்ந்து கோவில்களும் மடங்களும் பெரிதும் பாதிக்கப்பட்டன. அக்காலத்தில் நவாப்பின் நோய் நீக்கி அஞ்ஞான இருளகற்றி இழந்த சொத்துக் களை நவாப்பிடமிருந்து மீண்டும் சாசனமாகப் பெற்ற பெருமை இந்த இருபதாவது குருவையே சேரும். துழாவூர் மடத்தின் சொத்துக்களை நவாப் உருதுமொழியில் எழுதிச்சாசனம் செய்து கொடுத்துள்ளார். இச்சாசனத்தை இன்றும் துழாவூர் மடத்தில் காணலாம்.

துழாவூர் மடம் சைவ மடங்கள் பதினெட்டில் ஒன்று. துழாவூர் ஆதீனம் பெண்கள் குருபீடம். ஆகையால் இங்குள்ள மடாதிபதிகள் இல்லற நெறியினர். இம்மடத்தில் ஒரு சிறு கோயில் உள்ளது. அதில் ஸ்ரீ மங்களாம்பிகை சமேத ஸ்ரீ வாஞ்சீஸ்வர சுவாமி எழுந்தருளியுள்ளார். இத்தெய்வங்கட்டு மடாதிபதியே

பூசை செய்வது மரபு. தினந்தோறும் இரண்டு காலபூசை நடந்து வருகிறது. ஜமீன் ஒழிப்பில் துழாவூர் மடம் வாடிய நேரத்தில் நகரத்தார் ஆச்சிமார்கள் முயற்சியால் ஒருவருக்கு ரூ.100/– வீதம் வாங்கி வைப்புநிதியாக்கி வட்டியில் நாட் பூசை தவறாது நிகழ்கிறது. இம்முயற்சி யில் காசிஸ்ரீ அருசோ அவர்களும் அவர் மனைவி நீலா ஆச்சியும் தம்மை அர்ப்பணித்துக் கொண்டனர்.

தேவகோட்டை ஜமீன்தார் அழ.அரு.சோம. நாராயணன் செட்டியார் தலைவராகவும் பொற்கிழிக் கவிஞர் அரு.சோ.அவர்கள் செயலராகவும் தொண்டாற் றும் துழாவூர் நகரத்தார் அறக்கட்டளை, நிதி, திரட்டி வைப்பு நிதியாக்கி துழாவூர் மடத்தை பேணி வருகிறது. ஆதி நிரம்பிய அழகிய தேசிகராகிய குருமூர்த்திக்கு ஆண்டுதோறும் புரட்டாசி மாதம் குருபூசை தொடர்ந்து நடைபெற்று வருகிறது. குருபூசை தினத்தன்று ஆதீனகர்த்தர் கொலுமண்டபத்தில் எழுந்தருளி ஆசி கூறுவது வழக்கம். நகரத்தார் ஒருவருக்கு 'அறமனச் செம்மல்' என்ற பட்டம் ஆண்டுதோறும் வழங்கப்பெற்று வருகிறது.

துழாவூர் மடத்தில் 27.02.11–ல் அருசோ தலைமையில் திருவாசகம் முற்றோதல் நிகழ்ந்தது. துழாவூர் மடாதிபதி ஞானப்பிரகாச தேசிகர் ஆசி கூறினார்கள். மங்களாம்பிகா சமேத ஸ்ரீவாஞ்சீஸ்வரர், ஆதிகுரு நிரம்ப அழகியர் மூர்த்திகளுக்கு அபிஷேக ஆராதனை நடைபெற்றது. துழாவூர் மடத்தின் எல்லா நிகழ்ச்சிகளிலும் அருசோவின் பங்கு எல்லையற்றது.



## 10. பாதரக்குடி குருபீடம் - 13.03.2011

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

குன்றக்குடி முருகனுக்குப் பால்தினமும் தருகின்ற
குடியாக அமைந்த தாலே
குன்றக்குடி அருகினிலே பாதரக்குடி அமைந்ததுவும்
குமரனது பெருமை தானே!
கன்றுகளைக் காக்கின்ற தாய்ப்பசுபோல் நகரத்தார்
அனைவர்க்கும் உபதே சித்து
என்றைக்கும் குருவான பாதரக்குடி குருபீட
மீனாட்சி சொக்கர் காப்பு!

## பாதரக்குடி குருபீடம் - 13.03.2011

(தெ. சொக்கலிங்கம்)

நகரத்தார் ஆண்கள் குருவில் ஒருவராகத் திருப்புன வாயில் இராமநாதசுவாமி ஏற்றுக்கொள்ளப்பட்ட பொழுது 1566–ல் பாதரக்குடி மடம் தோற்றுவிக்கப் பட்டது. அது முதல் கலாமடம் சுவாமிகளும் பாதரக்குடி சுவாமிகளும் நகரத்தார் ஆண்களுக்கு உபதேசம் செய்து வந்தனர்.

1975–ல் இந்த இரு குரு பீடங்களும் ஒன்றிணைக்கப் பட்டு இப்போது பாதரக்குடி சுவாமிகள் மட்டுமே நகரத்தார் உபதேசகுருவாக விளங்குகிறார். பாதரக்குடி மடத்தில் திருப்புனவாசல் பழம்பதிநாதரே வழிபடு தெய்வமாக விளங்குகிறார்.

அந்தணர் மரபைச் சேர்ந்த பிரம்மச்சாரி ஒருவரே பட்டம் கட்டப்பெற்று இம்மடத்தில் தலைவராக வருவது மரபு. அவர் துறவு நெறியையே மேற்கொள்ளுவார். இம்மடாதிபதியாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டின்

தொடக்கத்தில் இருந்த சேனாபதி சுவாமிகள் குன்றக்குடி முருகப்பெருமானுக்கு வெள்ளிமயில் வாகனம் செய்து வைத்துள்ளார். இன்றும் அங்கு பங்குனி உத்தரத் திருவிழாவில் முதல் மரியாதை பாதரக்குடி ஆதீனத்திற்கே அளிக்கப்படுகின்றது.

சேனாபதி சுவாமிகள்மீது கோவிலூர் ஆண்டவரும் பாடுவார் முத்தப்பரும் பாடல்கள் பாடியுள்ளனர். இம்மடத்தில் பன்னிரண்டாவது பட்டமாக காமாட்சி சுந்தர தேசிகர் என்ற ரவீந்திர சுவாமிகள் 1975-ல் பொறுப்பேற்றுக் கொண்டார். இவர் பழம்பதிநாதர் மழலையர் பள்ளியைப் பாதரக்குடியில் 1994-ல் நிறுவி நடத்தி வருகிறார். பாதரக்குடியில் சந்தோஷிமாதா கோவில் ஒன்றைக் கட்டிக் குடமுழுக்கு விழா நடத்தியுள்ளார். ஆண்டுதோறும் சுவாமிகள் பிறந்த நாள் மாபெரும் விழாவாகக் கொண்டாடப்படுகிறது. சிறந்த அறப்பணி செய்து வருபவர்களுக்கு அவ்விழாவில் 'அருட்பணி அண்ணல்' பட்டம் வழங்கப்படுகிறது. இம்மடத்தின் நிர்வாகத்தை 'பாதரக்குடி நகரத்தார் அறக்கட்டளை நடத்தி வருகிறது. இதன் வளர்ச்சியில் தேவகோட்டை ஜமீன்தார் சோம. நாராயணன் செட்டியார் அவர்களும் காசிஸ்ரீ அருசோ அவர்களும் கண்ணும் கருத்துமாய் இருந்து வருகின்றனர்.

பாதரக்குடி மடத்தில் 13.3.11-ல் அருசோ தலைமையில் திருவாசகம் முற்றோதல் நிகழ்ந்தது. பாதரக்குடி மடாதிபதி ரவீந்திர சுவாமிகள் ஆசி கூறினார்கள். ஸ்ரீபெரிய நாயகி சமேத ஸ்ரீ பழம்பதிநாதர், ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசர் மூர்த்திகளுக்கு அபிஷேக ஆராதனை நிகழ்ந்தது.



## 11. கோவிலூர் குருபீடம் துதி - 27.03.2011

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

நகரத்தார் தலைமையிலே நல்லதொரு குருபீடம்
நாட்டுக் காக
சிகரமெனக் கழனிவாசல் கோவிலூர் ஆகிடவே
செய்த ஞானி
பகரொணாத தவஞானி முத்துராம லிங்கரால்
பதிந்த பீடம்
ஜகம்போற்றும் திருநெல்லை கொற்றவாள் ஈசரது
திருத்தாள் காப்பு!

## கோவிலூர் குருபீடம் - 27.03.2011

(தெ. சொக்கலிங்கம்)

கோவிலூர் குருபீடம் காரைக்குடியிலிருந்து 2 கி.மீ. தொலைவில் உள்ளது. கோவிலூரின் வரலாற்றைப் புராண அடிப்படையில் காட்டுவன இருநூல்கள். ஒன்று திருவிடைமருதூர் பிச்சு சாஸ்திரிகள் பாடிய சமிவன மான்மியம். மற்றொர்ன்று மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை பாடிய கோவிலூர்ப்புராணம். கோவிலூரில் அருள்மிகு திருநெல்லை நாயகி உடனாய கொற்றவாளீசர் கோவில் உள்ளது. இக்கோயில் சிவகங்கை மன்னர் குடும்ப அறநிலைய ஆட்சிக்கு உட்பட்டது. கோவிலூர் மடாலயமே இக்கோயிலை நிருவகித்து வருகிறது.

சுயம்பு லிங்கமாகிய கொற்றவாளீசுவரருக்கு செம்புறாங்கல்லினால் கருவறை மட்டும் கட்டி முன்னே கூரைக்கொட்டகை அமைத்து இதனை ஒரு கோவிலாக முதன் முதலில் வீரபாண்டியன் என்னும் மன்னன் அமைத்தான் என்று தலபுராணம் கூறுகிறது. கோவிலூர் மடாலயத்தைத் தோற்றுவித்தவர் கோவிலூர் ஆண்டவர் என்று அழைக்கப்படும் முத்து ராமலிங்க ஞானதேசிகர் ஆவார். சிறு கோவிலாக இருந்த கொற்றவாளீசர்

கோவிலை, கருங்கற்கோவிலாக கட்டி முடிக்க முடிவு செய்த கோவிலூர் ஆண்டவர் 1808–ல் திருப்பணியைத் துவங்கினார். கோவிலூர் மடத்திற்கும் அவ்வாண்டே கட்டட வேலை துவங்கப்பெற்றது. கொற்றவாளீசர் கோவில் திருப்பணி 5–வது பட்டமாகிய வீரசேகர ஞானதேசிகர் காலத்தில் நிறைவுபெற்று முதல் குடமுழுக்கு விழா 1908–ல் சிறப்பாக நடைபெற்றது.

கோவிலூர் மடாலயத்தின் நோக்கம் வேதாந்தத்தைப் பரப்புவது மற்றும் சாதுக்களைப் போற்றிப் பாதுகாப்பது ஆகும். கோவிலூர் மடாலயத்தில் அருளாட்சி செய்த ஆதீனத்தார்கள் வருமாறு:

1. கோவிலூர் ஆண்டவர் என்ற ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிகர்.
2. துறவு ஆண்டவர் என்ற சீர்வளர் சீர் அருணாசல ஞானதேசிகர்.
3. கருணாநிதி சுவாமிகள் என்ற சிதம்பரஞான தேசிகர்.
4. சீர்வளர்சீர் இராமசாமி ஞான தேசிகர்
5. திருக்களர் ஆண்டவர் என்ற சீர்வளர் சீர் வீரசேகர ஞானதேசிகர்.
6. சீர்வளர்சீர் அண்ணாமலை ஞானதேசிகர்
7. சீர்வளர்சீர் மகாதேவ ஞானதேசிகர்
8. சீர்வளர்சீர் சோமசுந்தர ஞானதேசிகர்
9. சீர்வளர்சீர் இராமநாத ஞானதேசிகர்
10. சீர்வளர்சீர் இராமநாத ஞானதேசிகர்
11. சீர்வளர்ச்சீர் காசிவிஸ்வநாத ஞானதேசிகர்
12. சீர்வளர்ச்சீர் நாச்சியப்ப ஞானதேசிகர்.

தற்போது சீர்வளர் சீர் மெய்யப்ப ஞானதேசிகர்

13–வது பட்டமாக அருளாட்சி செய்து வருகிறார்கள். கோவிலூர் மடாலயத்தில் நகரத்தார் குலத்தில் பிறந்து துறவியானவர்களே மடாதிபதியாக வருவது மரபு. கோவிலூர் மடாலயத்தில் வேதாந்தம் பயில வரும்

மாணவர்கட்கு 'நாநாஜீவவாதக் கட்டளை'யில் தொடங்கி 'ஞானவாசிட்டம்' ஈறாக பதினாறு வேதாந்த நூல்கள் பயில்விப்பது என்று ஒரு பாடத்திட்டம் உள்ளது. கோவிலூர் ஆதீனத்திற்கு 11 ஊர்களில் கிளை மடங்கள் உள்ளன. சீர்வளர்சீர் நாச்சியப்ப ஞான தேசிகர் மடாதி பதியாக இருந்தபோது, பள்ளிகள், கல்லூரிகள், நாதஸ் வரக்கல்லூரி, திருமுறைக்கல்லூரி, சிற்பக்கல்லூரி ஆகியவற்றைத் தொடங்கி எல்லோருடைய பார்வையும் கோவிலூர் பக்கம் திரும்பும்படி செய்தார். கோவிலூர் திருமடத்தில் ஒரு நூல் நிலையம் உள்ளது. பழங்கால நூல்கள், ஏட்டுச் சுவடிகள் பாதுகாத்து வைக்கப்பட் டுள்ளன. வேதாந்த நூல்கள் பலவற்றுக்குத் தமிழாக்கமும் தமிழ் விளக்கவுரையும் நூல்வடிவில் வெளிவரக் கோவிலூர் மடலாயம் துணை புரிந்துள்ளது.

இம்மடத்தின் 11-ஆவது பட்டம் ஸ்ரீலஸ்ரீ காசிவிஸ்வநாதசுவாமிகள் காலத்தில் காசிஸ்ரீ அருசோ இங்கு மாதம் ஒருமுறை 'சிந்தனைப்பூங்கா' என்ற ஆன்மீக நிகழ்ச்சியைத் தொடர்ந்து நடத்தி வந்தார். பிறகு அவர்கள் முக்தி பெற்றதும் 12-வது பட்டம் ஸ்ரீலஸ்ரீ நாச்சியப்பசுவாமிகள் பட்டம் ஏற்ற நாளில் அவர்களது ஆணைப்படி காசிஸ்ரீ அருசோ கோவிலூர் ஆண்டவர் மழலையர்பள்ளியை அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர் இராமசாமியைக் கொண்டு தொடக்க விழா நடத்தினார். இப்பள்ளியில் முதல் பிள்ளையாக திருநெல்லை என்ற சிறுமி சேர்ந்தது அந்தத் திருநெல்லை அருளே!

கோவிலூரில் 27.3.2011-ல் அருசோ தலைமையில் திருவாசகம் முற்றோதல் நிகழ்ந்தது. மடத்தில் உணவு உண்டோம். திருநெல்லை சமேத கொற்றவாளீசரையும் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவரையும் ஞானபூமியை யும் வணங்கினோம்.



## 12. காரைக்குடி
### (பொற்கிழிக் கவிஞர் அருசோ இயற்றிய பாடல்கள்)

### காரைக்குடி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசர் துதி

கல்லெல்லாம் கவிசொல்லக் காரைநகர்ப்
பூமியெலாம் கல்வி சொல்ல
வள்ளல்கள் அவதரித்த வற்றாத
காரைநகர் வளத்தைக் காக்கும்
செல்வமிகு மீனாட்சி சுந்தரேசர்
திருப்பாதம் தினமும் போற்றி
நல்லார்கள் வாழ்காரைக் குடிகாக்கும்
நாயகியே! மீனாள் காப்பு!

### செக்காலை ஸ்ரீ வைத்தியநாதர் துதி

செக்காலை நகரத்தார் சிறப்பாகப்
போற்றுகிற வைத்திய நாதர்
முக்காலும் வணங்குகிற தையல்நா
யகிபாதம் மூன்று வேளை
எக்காலும் போற்றுகிறார்; எல்லோரும்
தவறாமல் தொழுகின் றார்கள்
முக்கண்ணா! வைத்திநாதா! நோய்நொடிகள்
நீக்கிஎமை முழுதும் காப்பாய்!

### நாகநாதபுரம் சிவன்கோவில் துதி

காரைநகர்க் கோவில்களில் முதல் கோவில்
நாகநாத புரத்துக் கோவில்
சீருடனே நாகப்பர் எனும் செல்வர்
சிவன் கோவில் பெருமாள் கோவில்
ஊருக்கு முதல்கோவில் பிள்ளையார்
கோவிலுடன் மூன்றும் கட்டி

வேருக்கு நீருற்றி விருட்சத்தை
வளர்த்திட்டார்; சிவனே போற்றி!

## முத்துப்பட்டணம் ஸ்ரீ மீனாட்சி துதி

செல்வமெலாம் பொலிகாரை நகர்முத்துப்
பட்டணத்து நகரத் தார்கள்
கல்வியுடன் தொழிலோடு புகழ்செல்வம்
வாரிசுகள் கனிந்து வெல்ல
நல்லமுறை காக்கின்ற நாயகியே!
மீனாட்சி! நயனத்தாலே
அல்லல்எலாம் தீர்த்தென்றும் ஆதரித்துக்
காத்துநலம் அருள்வாய் அம்மா!

*(10.4.11, 24.4.11, 8.5.11, 22.5.11 தேதிகளில் இக்கோவில்களில் திருவாசகம் முற்றோதல் அருசோ தலைமையில் சிறப்பாக நடைபெற்றது.)*

## காரைக்குடி

(தெ. சொக்கலிங்கம்)

**(10.4.11, 24.4.11, 8.5.11, 22.5.11)**

*காரைக்குடி பதினாறூர் வட்டகையைச் சேர்ந்தது. செட்டிநாட்டின் நடுநாயகமாகத் திகழ்கிறது. 96 ஊர் நகரத்தார்களில் பலர் இவ்வூரில் வாழ்ந்து வருகிறார்கள். காரைக்குடியைக் கல்விக்குடி ஆக்கியவர் வள்ளல் அழகப்பர்; அதையே கம்பன்குடி ஆக்கியவர் கம்பன் அடிப்பொடி என்ற சா.கணேசனார். 96 ஊர் நகரத்தார்கள் தற்போது 76 ஊர்களில் வாழ்ந்து வருகிறார்கள். அந்த 76 ஊர்களிலும் நகராட்சியாகத் திகழ்வன காரைக்குடியும் தேவகோட்டையுமே. ஏனையவை பேரூராட்சி அல்லது ஊராட்சி*

மன்றங்களாக இருக்கின்றன. காரைச்செடிகள் நிறைந்த பகுதியாக இருந்ததால் இதனைக் காரைக்குடி என்பர். 1930–ல் காரைக்குடியில் ரயில் நிலையம் அமைக்கப் பெற்றது. 1947–இல் வள்ளல் அழகப்பரால் கல்வி நிலையங்கள் ஏற்படுத்தப்பெற்றபின், காரைக்குடி பெருவளர்ச்சி எய்தியது. நகரத்தார்களுக்குரிய ஒன்பது கோவில்களைச் சேர்ந்த நகரத்தார்களும் வாழ்ந்து வரும் ஊர் காரைக்குடி மட்டுமே.

ஒன்பது கோவில்களைச் சேர்ந்த 3800 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகிறார்கள். இங்கு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் என்ற பெயருடன் கூடிய நகரச்சிவன் கோவில் உள்ளது. செக்காலை என்பது காரைக்குடி நகரின் வடகிழக்குப் பகுதியில் அமைந்துள்ள குடியிருப்புப் பகுதி. நகரத்தார் வாழும் ஊர்ப்பட்டியலில் ஜெயங்கொண்டபுரம் என்ற பெயரில் முன்பு இருந்தது. இப்போது காரைக்குடியின் ஒருபகுதியாக ஆகிவிட்டது. செக்காலை நகரத்தார்களுக்குச் சொந்தமாக அருள்மிகு தையல்நாயகி உடனாய வைத்தியநாதர் திருக்கோவில் உள்ளது. காரைக்குடியின் தென்பகுதியில் நாகப்பசெட்டி யாரால் கட்டப்பட்ட பெருமாள் கோவில் ஒன்று உள்ளது. இப்பகுதியை நாகநாதபுரம்புதூர் என்பர். பெருமாள் கோவில் வளாகத்தில் வடக்கே சிவன் கோவிலும் தெற்கே பெருமாள் கோவிலும் நடுவே ஒரு பிள்ளையார் கோவிலும் ஆக மூன்று கோவில்களை நாகப்பசெட்டியார் கட்டினார்.

காரைக்குடியின் வடமேற்கே அமைந்துள்ள குடியிருப்புப் பகுதி முத்துப்பட்டணம். இங்கு வாழும் நகரத்தார்கள் தங்களுக்குப் பொதுவாக மீனாட்சி அம்மன் கோவிலைக்கட்டி நிருவகித்து வருகிறார்கள். 96 ஊர் பாதயாத்திரைக் குழுவினரும் திருநாவுக்கரசர்

இறைபணி மன்றமும் இணைந்து நடத்தும் திருவாசக முற்றோதல் நிகழ்ச்சிகள் மேலே கண்ட கோவில்களில் முறையே 08.5.2011, 10.4.2011, 22.05.2011, 24.04.2011 ஆகிய தேதிகளில் சிறப்பாக நடைபெற்றன.

**காரைக்குடியில் உள்ள முக்கியமான கோவில்கள்:**

1. நகரச்சிவன் கோவில்.
2. செக்காலை நகரச் சிவன் கோவில்.
3. நாகநாதபுரம் பெருமாள் கோவில்.
4. முத்துப்பட்டணம் மீனாட்சி அம்மன் கோவில்.
5. கொப்புடையம்மன் கோவில்.
6. கிருஷ்ணன் கோவில்.
7. மேலை ஊருணி முனியையா கோவில்.
8. பெரிய முத்து மாரியம்மன் கோவில் (செக்காலை).
9. சின்ன முத்துமாரியம்மன் கோவில் (முத்துப்பட்டணம்).
10. முத்தாளம்மன் கோவில்.
11. கீழஊருணி ஸ்ரீ வீரகண்ட விநாயகர் கோவில் (இங்கு பல்லாண்டுகளாக புரட்டாசியில் காசிஸ்ரீ அருசோ இராமாயணம் தொடர் சொற்பொழிவு ஆற்றி வருகிறார்.)
12. மார்க்கண்டேயர் கோவில்.
13. பொய் சொல்லா மெய்ய ஐயனார் கோவில்.
14. சாய்பாபா கோவில்.
15. கழனிவாசல் பெருமாள் கோவில்.

**முக்கிய கல்வி நிலையங்கள்:**

1. ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் வித்யாசாலை மேல்நிலைப்பள்ளி.

2. மீனாட்சி பெண்கள் மேல்நிலைப்பள்ளி.
3. மாதிரி மேல்நிலைப்பள்ளி.
4. மு.வி. மேல்நிலைப்பள்ளி.
5. அழகப்பா மெட்ரிகுலேசன் மேல்நிலைப்பள்ளி.
6. கம்பன் கற்பகம் மெட்ரிகுலேசன் மேல்நிலைப்பள்ளி.
7. இராமசாமி தமிழ்க்கல்லூரி.
8. அழகப்பா கலைக்கல்லூரி.
9. அழகப்பா பாலிடெக்னிக்.
10. அழகப்பா பொறியியற் கல்லூரி.
11. அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி.
12. அழகப்பா உடற்பயிற்சிக் கல்லூரி.
13. அழகப்பா பல்கலைக்கழகம்.
14. மின் வேதியியல் ஆய்வுக்கூடம்.
15. உமையாள் ராமநாதன் பெண்கள் கல்லூரி.

முக்கிய திருவிழாக்கள்

1. கொப்புடையம்மன் செவ்வாய்ப் பெருவிழா.
2. நகரச்சிவன் கோவில் ஆடிப்பூர உற்சவம்.
3. சின்ன முத்துமாரியம்மன் பால்குடத் திருவிழா.
4. நா.புதூர் பெருமாள் கோவில், சிவன் கோவில் திருவிழாக்கள்.
5. கிருஷ்ணன்கோயிலில் ராமநவமி, கோகுலாஷ்டமி உற்சவங்கள்.
6. முத்தாளம்மன் கோவில் பொங்கல்.
7. ஐயனார் கோவில் மகாசிவராத்திரித் திருவிழா.
8. நகரச் சிவன் கோயில் பஞ்சமூர்த்திகளின் அஷ்டமி பிரதட்சணம்.

9. மகர்நோன்புத் திடலில் நான்கு சுவாமிகள் அம்புபோடுதல்.

மற்றும் மகாகவி பாரதியாரால் போற்றப்பெற்ற இந்து மத அபிமான சங்கம், கம்பன் புகழ்பாடும் கம்பன் கழகம், கம்பன் மணிமண்டபம், தமிழ்த்தாய் கோவில், கண்ணதாசன் மண்டபம் ஆகியவை காரைக்குடியில் உள்ளன. அபிசீனியா பழ.நாச்சியப்ப செட்டியார், சொ.தேவராஜன் செட்டியார், இராம.தேனப்ப செட்டியார், நாக.லெ.ராம.நாச்சியப்ப செட்டியார் ஆகியோர் நேதாஜி தலைமையிலான I.N.A.-ல் பணிபுரிந்தவர்கள். காரைக்குடியில் பலகோவில் பிரிவினர் பொதுப்படைப்புக்கள் படைத்து வருகின்றனர். நகரத்தார் வீடுகள் பலவற்றில் புரட்டாசி மாதம் இராமாயணம் படிக்கும் நிகழ்ச்சி நடைபெற்று வருகிறது. மேலக்கொறட்டியார் வீட்டில் 75 ஆண்டுகளாக புரட்டாசியில் இராமாயணம் படிக்கப்படுகிறது. அருசோ ராமர்பட்டாபிஷேக நிறைவு ஆற்றுகிறார். காரைக் குடியைச் சேர்ந்த வைரவன் கோவில் வேலப்பசெட்டி வைரவன் செட்டியார் மரபினர் அரண்மனைப் பொங்கல் என்று சிறப்புடன் அழைக்கப்பெற்று பழனி நடைப்பயணத்தில் அன்னதானம் செய்து வருகிறார்கள். பழநி தைப்பூசத்திற்கு இவர்கள் தலைமையில் காரைக்குடிக் காவடிகள் புறப்பட்டுச் செல்கின்றன. காரைக்குடி நகரத்தார்கள் வெளியூர்களில் நிறையத் திருப்பணிகளும் அறப்பணிகளும் செய்துள்ளனர்.



## 13. மாத்தூர் - 12.06.2011

### மாத்தூர் ஸ்ரீ ஐந்நூற்றீஸ்வரர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

உயர்பெரிய நாயகியின் உடனாக வீற்றிருந்தே
உலகம் காக்கும்
உத்தமமாம் மாத்தூரின் ஐந்நூற்றீஸ் வரன் கோவில்
உள்ளே சென்றால்

மயன்செய்த மண்டபங்கள், மகத்தான சிற்பங்கள்,
மகிழ விருட்சம்
மாண்புடைய சித்தர்கள், முனிவர்கள் தியானிக்கும்
மரபுக் கோலம்
அயன்வந்து வணங்கிடவும், அருகிருந்து போற்றிடவும்
ஆண்டாண் டாக
ஆலயத்தில் வீற்றிருந்தே அனைவரையும் காக்கின்ற
ஐந்நூற் றீசா!
புயல்வந்து தாக்காது, பூகம்பம் தாக்காது
புற்றீ சல்போல்
புதுநோய்கள் தாக்காது, பொலிவோடு வலிவீந்து
புரப்பாய் அப்பா!

## மாத்தூர் - 12.06.2011

(தெ. சொக்கலிங்கம்)

காரைக்குடியிலிருந்து 6 கி.மீ. தொலைவில் உள்ளது. ஒன்பது நகரக் கோவில்களில் ஒன்று. கி.பி. 712ஆம் ஆண்டில் இக்கோவில் பாண்டிய மன்னனால் நகரத் தாருக்கு அளிக்கப்பட்டது. இலுப்பைக்குடிப் புராணத்தில் ஒரு கதை. கொங்கணச்சித்தர் இரசவாதத் தால் உருவாக்கிய தங்கத்தின் மாற்று உரைத்துப் பார்த்த ஊர். ஆகையால் இவ்வூர் மாற்றூர் எனப் பெயர்

பெற்றது. பின்னர் இது மருவி மாத்தூர் என ஆயிற்று. இக்கோவிலில் ஏழு உட்பிரிவுகள் உள்ளன. நகரத்தார்கள் வாழும் 76 ஊர்களில் இக்கோவில் நகரத்தார்கள் 55 ஊர்களில் வாழ்ந்து வருகிறார்கள். இக்கோவில் நகரத்தார்களின் மொத்தப்புள்ளிகள் 9622.

**இக்கோவிலில் அமர்ந்தருள் செய்யும்**

இறைவன் : ஐநூற்றீசர்

இறைவி : பெரிய நாயகி

இக்கோவிலுக்கு 1949, 1974, 1988, 2015 ஆகிய ஆண்டுகளில் திருக்குட நன்னீராட்டு விழாக்கள் நடைபெற்றன. இங்குள்ள நகரவிடுதி மிகப்பெரியது. இங்கு ஒரு ஊருணி உள்ளது. ஊருணியின் வடகரையில் கலங்காத கண்ட விநாயகர் கோவில் உள்ளது. மாத்தூர்க் கோவிலின் பிரகாரத்தில் வரதராசப்பெருமான் நிலமகள் திருமகளோடு நின்ற கோலத்தில் காட்சி தரும் சன்னதி அமைந்துள்ளது. இங்கு தல விருட்சம் மகிழ மரமாகும். இராசகோபுர வாயிலில் உள்ள இரு நிலைக்கால்களிலும் பல்வேறு முனிவர்களின் சிலைகளோடு இராமகிருஷ்ணர், விவேகானந்தர், இரமணமகரிஷி ஆகியோர் சிலைகளும் வடிக்கப்பெற்றுள்ளன. இங்குள்ள நந்தவனத்தில் 27 நட்சத்திரங்களுக்கு உரிய மரங்கள் உள்ளன. இதுபற்றி காசிஸ்ரீ அருசோ இங்கு பாடல்பாடி உள்ளார். இக்கோவில் மகா உற்சவத்தில் 10 நாளும் காலையில் காசிஸ்ரீ அருசோ திருவிளையாடல் புராணம் தொடர் சொற்பொழிவு ஆற்றி உள்ளார். இக்கோவில் பற்றி அருசோ ஒரு பதிகம் பாடி இருப்பது குறிப்பிடத்தக்கது.

இக்கோவிலில் 12.06.11-ல் திருவாசகம் முற்றோதல் அருசோ தலைமையில் இனிதே நிகழ்ந்தது.

## 14. இலுப்பக்குடி - 26.06.2011

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

தான்தோன்றி நாதர்அருள் பாலிக்கும்
சௌந்தரநா யகியி னாலே
கான்கொண்ட நல்இலுப்பைக் குடிமக்கள்
கல்வியிலே உயர்ந்து நின்றார்.
மான்கொண்ட காட்டுக்குள் மதிகொண்ட
சுயம்பீசர் மகிழ்ந்து நின்றார்
வான்கொண்ட தான்தோன்றி நாதரது
வளத்தாள்கள் போற்றி! போற்றி!

## இலுப்பக்குடி - 26.06.2011

(தெ. சொக்கலிங்கம்)

நகரக் கோவில்கள் ஒன்பதில் ஒன்றாகும். காரைக் குடியிலிருந்து 4 கி.மீ. தொலைவு. இலுப்பை மரங்கள் இப்பகுதியில் நிறைந்திருந்தமையால் இப்பெயர் பெற்றது. கி.பி.714–ல் பாண்டிய மன்னன் நகரத்தாருக்கு இக்கோவிலை அளித்தான். இலுப்பைக்குடிப் புராணத்தில் நகரத்தார் மரபில் முன்னோராகிய தளபதி என்பவரின் கனவில் சிவபெருமான் தோன்றி சூடாமணி ஒன்றை வழங்கி இத்தலத்தில் சிவபுண்ணியங்களைச் செய்யக் கட்டளை இட்டதாகக் குறிப்பிடப்படுகிறது. இதற்கேற்ப இக்கோவில் நகரத்தார் இசைகுடி மானத்தில் 'கேரள சிங்க வள நாடாகிய பிரம்பூர் நாட்டில் இலுப்பைக்குடியான புகலிடங்கொடுத்த பட்டணத்தில் சூடாமணிபுரம் உடையார்' என்று தம்மைக் குறிப்பிடுவர். இக்கோவிலைச் சார்ந்த நகரத்தார்கள், நகரத்தார் வாழும் 76 ஊர்களில், 31 ஊர்களில் வாழ்ந்து வருகிறார்கள். மொத்தப்புள்ளிகள் 3880.

**இக்கோவிலில் அமர்ந்தருள் செய்யும்**

**இறைவன் : தான்தோன்றியீசர்**

**இறைவி : சௌந்தர நாயகி**

இக்கோவிலுக்கு 1842, 1882, 1901, 1959, 1985 ஆகிய ஆண்டுகளில் குடமுழுக்கு விழாக்கள் நடைபெற்றுள்ளன. அம்மன் சன்னதிக்கு எதிரே பிரம்ம தீர்த்தம், கோவிலுக்கு மேற்கே சிவகங்கை தீர்த்தம், கோவிலுக்கு வடக்கே கௌரி தீர்த்தம் என மூன்று ஊருணிகளும் நகர விடுதியும் உள்ளன.

1833ஆம் ஆண்டு முதல் தேவகோட்டை அரு.லெ.குடும்பத்தார் தொடர்ந்து அறங்காவலர்களாக இருந்து வந்தனர். 1954ஆம் ஆண்டு சென்னை உயர்நீதி மன்றத் திட்டப்படி அரு.லெ.குடும்பத்தார் ஒருவர் பரம்பரை அறங்காவலராகவும், பிற ஊர் இலுப்பக்குடி நகரத்தார் இருவர் அரசாங்க நியமன அறங்காவலர் களாகவும் இருந்து கோயிலை நிர்வாகம் செய்து வருகின்றனர். சதாவதானம் சுப்பிரமணிய அய்யர் எழுதியுள்ள இலுப்பக்குடித் தலபுராணமும், 1985–ல் வெளியிடப்பட்ட இக்கோவில் திருக்குட நன்னீராட்டு விழா மலரும் இக்கோவில் பற்றிய செய்திகளை விரிவாகத் தருகின்றன. பிரமன், திருமால், இந்திரன் ஆகியோரின் விண்ணப்பத்தை ஏற்று சிவபெருமான் வைரவக் கோலம் பூண்டு கும்பாண்டகன் என்னும் அசுரனை அழித்து இங்கே எழுந்தருளியிருப்பதாக இத்தல புராணம் குறிப்பிடுகிறது. அதற்கேற்ப இக்கோவிலில் வைரவ வழிபாடு தனிச்சிறப்புடையதாக அமைந்துள்ளது. இக்கோவிலில் சித்திரை மாதம் திருவிழா 10 நாட்கள் சிறப்பாக நடைபெறுகிறது. இக்கோவிலில் உள்ள லிங்கம் சுயம்பு லிங்கம். இக்கோவிலில் நுட்பமான

வேலைப்பாடுகள் அமைந்த சிற்பங்கள் உள்ளன. அவை: நடராஜப்பெருமான் சன்னதிக்கு எதிரே உள்ள தூணின் தெற்குப்பகுதியில் இரண்டு கட்டை விரல் உயரமே உள்ள விநாயகர், வைரவர் சன்னதியின் கபோதப் பகுதியின் கூடுகளில் மட்டும் பதினைந்து வகையான வைரவரின் திருக்கோலங்கள், தட்சணாமூர்த்தி மண்டபத்தில் கல்லிலேயே முறுக்குக் கம்பிபோல செதுக்கியிருப்பது, பிள்ளைத் தூண்களைத் தாங்கி நிற்கும் சிங்கங்களின் திறந்த வாயினுள் உருளக்கூடிய ஆனால் எடுக்க வராத கல்உருண்டைகள் ஆகியன சிறப்பானவை. இக்கோயிலின் தலவிருட்சம் இலுப்பை மரம்.

வள்ளல் அழகப்பரின் வேண்டுகோளுக்கு இணங்க காரைக்குடியில் கல்லூரி நிறுவுவதற்கு இக்கோவில் நகரத்தார் தங்கள் கோவிலுக்குரிய 450 ஏக்கர் நிலத்தைக் கொடுத்து உதவியதோடு 1955–ல் ஏறத்தாழ 2 இலட்சம் ரூபாய் மதிப்புடைய ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிக் கட்டடத்தைக் கட்டிக்கொடுத்தனர்.

இக்கோவிலில் 30 செப்புத் திருமேனிகள் உள்ளன: திருவிளையாடல் புராணக் காட்சிகள் அழகிய ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. சிற்பக்கலையும் ஓவியக்கலையும் சிறந்து விளங்கும் கலைக்கூடமாகவும் கல்விப்பணிக்கு உறுதுணை செய்த அறநிலையாகவும் இலுப்பக்குடிக்கோவில் விளங்குவது சிறப்புடையதாகும்.

இக்கோயிலில் 26.06.11–ல் அருசோ தலைமையில் திருவாசகம் முற்றோதல் சிறப்பாக நிகழ்ந்தது.



## 15. அரியக்குடி - 09.07.2011

### சுந்தரபரமேஸ்வரி உடனாய ஸ்ரீரெத்தினபுரீஸ்வரர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

தேரழகும் திருக்கோவில் கலைஅழகும்
தெய்வீக இசையின் வீச்சும்
ஊரழகும் நெய்மணமும் உயர்ந்தோங்கு
மனைஅழகும் உரிய தான
ஏரழகும் விவசாய இயல்பழகும்
சுந்தரபர மேஸ்வ ரிக்குச்
சீரழகர் ரெத்தினபுரீஸ் வரரின்
திருவடிகள் போற்றி! போற்றி!

## அரியக்குடி - 09.07.2011

(தெ. சொக்கலிங்கம்)

அரியக்குடி பதினாறூர் வட்டகையைச் சேர்ந்தது. அரியக்குடியில் நகரத்தார் புள்ளிகள் 184. காரைக் குடியிலிருந்து 6 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் வைரவன் கோவில் மற்றும் இளையாத்தங்குடி பெரு மருதூர் உடையார் கோவில்களைச் சேர்ந்த நகரத்தார்கள் இருக்கிறார்கள். அரியக்குடி என்றவுடன் உடனே நினைவிற்கு வருவது தென்திருப்பதி என்று அழைக்கப் படும் திருவேங்கட முடையான் திருக்கோவில்தான். நானூறு ஆண்டுகளுக்கு முன்பு இக்கோவில் திருப்பணி செய்தவர் சேவுகன் செட்டியார் ஆவார். விளக்குகள் ஏற்றிப் பெருமாளை வழிபடும் சாமி வீடுகள் மூன்று உள்ளன. அருள்மிகு சுந்தர பரமேஸ்வரி உடனாய ரெத்தினபுரீஸ்வரர் திருக்கோயில் இவ்வூர் நகரத்தார் பெருமக்களுக்கு உரிய நகரச் சிவன் கோவில் ஆகும்.

இக்கோவிலில் தான் திருவாசக முற்றோதல் நடைபெற்றது. 96 மெய்யன்பர்கள் கலந்து கொண்டு திருவாசகம் பாடினார்கள். காலை 10.15 மணிக்கு முற்றோதல் ஆரம்பித்து 6.15 மணி அளவில் நிறைவு பெற்றது.

காரைக்குடி, தேவகோட்டை மற்றும் அருகாமையில் உள்ள ஊர்களில் உள்ள நகரத்தார்களில் பலர் புரட்டாசி மாதம் விரதமிருந்து அரியக்குடிப் பெருமாளை வழிபடும் வழக்கமுடையவர்கள். அரியக்குடி நகரத்தார்கள் சார்பில் 47–வது பதிகமாகிய 'திருவெண்பா'வினை வீரப்ப செட்டியார் பாடியதோடு அதில் உள்ள சைவ சித்தாந்தக் கருத்துக்களையும் கூறினார். திருவாசக முற்றோதலுக் காகவே அவர் சென்னையிலிருந்து வந்திருந்தார். கர்நாடக சங்கீத உலகில் 'அரியக்குடி' என்று அழைக்கப்படும் சங்கீத மேதை இராமானுஜ அய்யங்கார் இவ்வூரைச் சேர்ந்தவர். அரியக்குடி வைரவன் கோயில் நகரத்தார்கள் பொதுப்படைப்போ அல்லது வீட்டில் முன்னோர்களுக்குப் படைப்பதோ கிடையாது. இவர்களுக்கு எல்லாமே பெருமாள்தான் வழிபடும் தெய்வம். அரியக்குடி நகரத்தார்களின் பூர்வீகம் உஞ்சனை கிராமம். அரியக்குடி தேர் சிறப்புடையது.



## 16. தாணிச்சாஊருணி
## ஸ்ரீ கற்பகமுத்து விநாயகர் துதி

(அருசோ)

*(96 ஊர் திருவாசகம் முற்றோதலின் போது 28.7.11-ல் பொற்கிழிக் க்விஞர் அருசோ பாடியது).*

கல்லாலே திருப்பணியும் வெள்ளியிலே அங்கியுமாய்க்
காட்சி நல்கும்
கற்பகமுத் தெனும்பெயரோய்! கண்கண்ட விநாயகரே
முத்தப் பர்கள்
கல்லாலே கோயிலினைத் தாணிச்சா ஊரணியில்
கட்டி னார்கள்
கனகத்தால் அங்கிவரும், வீடெல்லாம் மீண்டுவரும்
காலம் வெல்லும்
இல்லாத நலமில்லை எனுமாறு நகரத்தார்
இங்கே ஓங்க
இனிமை மிகு நாட்டாரும் இணைந்தோங்கி வாழ்ந்திடவே
எழுச்சி தந்தே
தொல்புகழைத் தந்திடுவாய் வாசகங்கள் பாடிஇவண்
துதிக்கின் றோம்யாம்
தும்பிக்கை விநாயகனே! நம்பிக்கை தந்திடுவாய்
துணைசெய் வாயே!

## தாணிச்சா ஊருணி - 28.07.2011

(தெ. சொக்கலிங்கம்)

தாணிச்சா ஊருணி கீழவட்டகையைச் சேர்ந்தது. காரைக்குடியிலிருந்து 16 கி.மீ. தொலைவில் உள்ளது. காரைக்குடி – தேவகோட்டைச் சாலையில் இராம் நகரில் இருந்து கண்டதேவிக்குச் செல்லும் கிளைச்சாலையில் இவ்வூர் உள்ளது. இவ்வூர் சொர்ணநாதபுரம் என்றும் வழங்கப்பெறுகிறது. பிள்ளையார்பட்டிக் கோவிலைச்

சேர்ந்த 6 புள்ளிகள் இவ்வூரில் உள்ளனர். இவர்களது உடன் பங்காளிகளான 95 புள்ளிகள் ஆறாவயல், தேவகோட்டை, காரைக்குடி ஆகிய ஊர்களில் வசித்து வருகிறார்கள். ஏற்கனவே மாத்தூர் கோவிலைச் சேர்ந்தவர்கள் இவ்வூரில் இருந்திருக்கிறார்கள். பின்பு அவர்கள் ஆறாவயல், காரைக்குடி ஆகிய ஊர்களுக்குச் சென்று வீடுகள் கட்டிக் கொண்டு அங்கேயே வசித்து வருகிறார்கள். இவ்வூரில் பிள்ளையார்பட்டிக் கோவிலைச் சேர்ந்த பெரிய முத்தப்ப செட்டியார், சின்ன முத்தப்ப செட்டியார் ஆகிய இருவரும் 1824ஆம் ஆண்டு கற்பக முத்துவிநாயகர் கோவிலைக் கட்டியிருக்கிறார்கள். அவர்களது உருவச் சிலை சன்னதி முன்பு உள்ளது.

பிள்ளையார்பட்டிக் கோயிலைச் சேர்ந்த 101 புள்ளிகளில் பெரிய முத்தப்ப செட்டியார் வழி வந்த பங்காளிகள் காரைக்குடி பொய் சொல்லா மெய்ய ஐயனாரையும், சின்ன முத்தப்ப செட்டியார் வழி வந்தவர்கள் அரியக்குடிப் பெருமாளையும் வழிபட்டு வருகிறார்கள். சின்ன முத்தப்ப செட்டியார் வழி வந்தவர்கள் சின்னமுத்தப்ப செட்டியாருக்கும் அவரது மனைவியார் இருவருக்கும் படைக்கிறார்கள். கற்பக முத்துவிநாயகர் கோவிலுக்கு 1962 மற்றும் 1998 ஆண்டுகளில் குடமுழுக்கு விழா நடைபெற்று இருக்கிறது. இக்கோயிலில் நித்தியப்படி பூசை நடைபெற்று வருகிறது. விநாயக சதுர்த்தி சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. அன்றைய தினம் கணபதி ஓமம் நடத்தி சுவாமி புறப்பாடு செய்கிறார்கள். கற்பகமுத்து விநாயகர் கோவிலில் திருவாசக முற்றோதல் 28.07.11ல் அருசோ தலைமையில் நடைபெற்றது. 115 மெய்யன்பர்கள் கலந்து கொண்டனர். காலை 8.45 மணிக்குத் துவங்கி மாலை 4.30 மணிக்கு நிறைவு பெற்றது.



## 17. அமராவதிபுதூர் - 31.07.2011

### வாழவந்த நாயகி துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

வந்தருள் ஈஸ்வரர் வாழவந்த நாயகி
வற்றா அருள் சுரக்கும்
அந்தமில் ஆனந்தம் அமரா வதிபுதூர்
ஆலயம் சிறக்க வேண்டும்
செந்தமிழ் அடியார்கள் வேள்விசெய் வாசகம்
திருமுறை வாழ்த்தி னாலே
இந்த ஊர் செழித்திட இறையருள் கொழித்திட
ஈஸ்வரா! வந்தருள் வாயே!

## அமராவதிபுதூர் - 31.07.2011

(தெ.சொக்கலிங்கம்)

அமராவதிபுதூர் பதினாறூர் வட்டகையைச் சேர்ந்தது. காரைக்குடியிலிருந்து 7 கி.மீ. தொலைவில் உள்ளது. நகரச் சிவன் கோவில் பேருந்து நிறுத்தத்தி லிருந்து 2 கி.மீ. தொலைவில் உள்ளது. பிள்ளையார் பட்டிக் கோவிலைச் சேர்ந்த 57 புள்ளிகள் இவ்வூரில் வசித்து வருகின்றனர். அருள்மிகு வாழவந்த நாயகி உடனாய வந்தருளீசுவரர் திருக்கோயில் இவ்வூர் நகரத்தார் பெருமக்கள் வழிபடும் நகரச் சிவன் கோவில் ஆகும். இது சிவகங்கை தேவஸ்தானக் கோயில். வயிநாகரம் குடும்பத்தார் இக்கோவிலுக்கு 1908-ல் குடமுழுக்கு விழா செய்திருக்கிறார்கள். தற்போது கோவில் சிதிலமடைந்து உள்ளது. இக்கோவிலுக்கு குடமுழுக்கு விரைவில் செய்யும்படியும் அதற்குத்தான்

ரூ.10,001 தருவதாகவும் முத்தமிழ்ப் பேரறிஞர் அரு.சோ.அவர்கள் அமராவதிபுதூர் நகரத்தார்களிடம் கூறினார்கள். (இக்கோவில் திருப்பணி இப்பொழுது நிகழ்கிறது. அருசோ கூறியபடி ரூபாய் பத்தாயிரம் வழங்கியுள்ளார்கள்) ஊர்ப்பொதுக் கோயில்களாக உலகநாயகி அம்மன் கோவில், திருவநாயகி அம்மன் கோவில் ஆகியவை உள்ளன.

இவ்வூரில் உள்ள பிற கோவில்கள் வருமாறு. பால கணபதிகோவில், மீனாட்சி சுந்தரேசர் கோவில், தண்டாயுதபாணி கோவில் ஆகியவை ஆகும். நகரமடம் ஒன்று உள்ளது. இங்குள்ள தொடக்கப்பள்ளி விடுதலைப்போராட்ட வீரர் பிச்சப்பா சுப்பிரமணியத் தால் தொடங்கப் பெற்றது. சொ.முருகப்பா தொடங்கிய மகளிர் இல்லம், பிறகு பள்ளத்தூர் பழநியப்ப செட்டியாரால் சாரதா சேவாசிரமமாக நடத்தப்பட்டுப் பிறகு 'ஸ்ரீ சாரதாசமிதி'யிடம் ஒப்படைக்கப்பட்டு 'ஸ்ரீ சாரதா நிகேதன் மகளிர் கல்லூரி'யாக நடத்தப்பட்டு வருகிறது. காரைக்குடி சா.சு.சுப்பிரமணியம் செட்டியாரால் தொடங்கப்பெற்று அவரது வாரிசுகளால் நிறுவகிக்கப்பட்டு வரும் 'குருகுலம்' உயர்நிலைப்பள்ளி உள்ளது. அமராவதிபுதூர் வயிநாகரம் குடும்பத்தார் காளையார் கோவில், விருத்தாசலம் விருத்தகிரீஸ்வரர் கோவில், காவிரிப்பூம்பட்டினம், சீர்காழி, திருப்பரங் குன்றம், திருப்புத்தூர், திருவாதவூர், திருவாப்பனூர், மதுரை ஆகிய தலங்களில் சிவன்கோவில் திருப்பணி களைச் சிறப்பாகச் செய்துள்ளனர், தமிழ்க்கடல் இராய சொ. அமராவதிபுதூரில் தங்கியிருந்த காலத்தில் அவர் வீட்டுக்கு மகாத்மா காந்தியடிகள் வந்திருக்கிறார்.

அமராவதிபுதூர் வாழ வந்த நாயகி உடனாய வந்தருளீசுவரர் திருக்கோவிலில் திருவாசக முற்றோதல் நடைபெற்றது. மெய்யன்பர்கள் 91 பேர் கலந்து கொண்டனர். காலை 9.30 மணிக்குத் துவங்கி மாலை 4.30 மணிக்கு நிறைவு பெற்றது. அமராவதிபுதூர் நகரத்தார்கள் சிறப்பாக ஏற்பாடு செய்திருந்தார்கள். காசிஸ்ரீ அருசோ.தெ. சொக்கலிங்கம், பழ.மாணிக்கம் செட்டியார், பிள்ளையார்பட்டி கோவில் அறங்காவலர் சிதம்பரம் செட்டியார் ஆகியோர் வாழ்த்திப் பேசினர். லெட்சுமணன் செட்டியார் நன்றிகூற முற்றோதல் இனிதே நிறைவு பெற்றது.



# 18. சண்முகநாதபுரம் (ஆறாவயல்) ஸ்ரீமீனாட்சி சுந்தரேஸ்வரர் துதி 14.08.2011 (பொற்கிழிக் கவிஞர் அருசோ)

ஒப்பற்ற மாமுருகன் குன்றின் மேலே
உள்ளவனாம் சண்முகநா தன்பே ராலே
செப்பமுடன் நகரத்தார் அமைத்த ஊரில்
சிறந்தோங்கும் மீனாட்சி சுந்த ரேசர்
எப்பொழுதும் நகரத்தார் நாட்டார் போற்ற
எழுந்தருளிக் காக்கின்ற நலத்தி னாலே
முப்போதும் வணங்குகிறார்; வளத்தி னாலே
முன்னேறித் திகழ்கின்றார்; வளர்க மாதோ!

## சண்முகநாதபுரம் - 14.08.2011

(தெ. சொக்கலிங்கம்)

*சண்முகநாதபுரம் கீழவட்டகையைச் சேர்ந்தது. காரைக்குடியிலிருந்து, 13 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் மொத்தபுள்ளிகள் 517. இளையாத்தங்குடி ஒக்கூர், பட்டினசாமி கழனிவாசல்குடியார், பெருமரு தூருடையார், மாத்தூரில் உறையூர் மற்றும் அரும்பாக் கூருடையார், நேமங்கோவில், சூரக்குடிக்கோவில், பிள்ளையார்பட்டிக் கோவில் நகரத்தார்கள் இவ்வூரைச் சேர்ந்தவர்கள். மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோவில் 1879-ல் கட்டி குடமுழுக்கு செய்யப்பெற்றது. பலகுட முழுக்குகளுக்குப் பிறகு 1989-லும் 2005-ஆம் ஆண்டிலும் குடமுழுக்கு செய்யப்பெற்றது. பட்டினசாமி பங்காளி களுக்குப் பிள்ளையார் கோவில் ஒன்றும் பெருமரு*

தூருடையார் பங்காளிகளுக்கு பிள்ளையார் கோவில் ஒன்றும், மாத்தூர் உறையூராருக்குப் பிள்ளையார் கோவில் ஒன்றும், அரும்பாக்கூருடையாருக்கு பனந்த முடையார் கோவில் ஒன்றும் உள்ளது. பெ.சித.லெ. குடும்பத்தார்களால் ஒரு பெருமாள் கோவில் கட்டப் பட்டுள்ளது. பி.எஸ்.சாத்தப்ப செட்டியார் உயர்நிலைப் பள்ளி, பி.எஸ்.சாத்தப்பசெட்டியார் தொடக்கப்பள்ளி ஆகியவை உள்ளன. இவ்வூரிலிருந்து மேற்கே காரைக்குடி – தேவகோட்டை சாலை வரையிலும் கிழக்கே கண்டதேவி சாலைவரையிலும் அமைந்துள்ள 8 கி.மீ. சாலை 1922–ல் இவ்வூர் நகரத்தார்கள் அமைத்தனர். பெ.சி.த.குடும்பத்தார் மாணிக்க வாசகர் குருபூசை நடத்தி வருகின்றனர். அ.ராம.அண்ணாமலை, செ.பழநியப்பன், உ.சொ.பெ.மெய்யப்பன் ஆகியோர் இ.தே.ரா.(I.N.A) ல் பணிபுரிந்தவர்கள். இவ்வூர் செ.ராம ராமசாமி செட்டியார், காரைக்குடி நா.லெ.நாராயணன் செட்டி யாருடன் இணைந்து திருக்கழுக்குன்றம் வேதகிரீஸ்வரர் ஆலயத்திருப்பணியைச் செய்துள்ளார். மயிலாடு துறையில் அ.எ.அரு. வகையினரின் பசுமடம் உள்ளது. குருணி வீடு, உ.பழ.வீடு, மெ.நா.வீடு, வங்காளத்தார் வீடு, உ.வீர.அரு. வீடு ஆகியவை கலைநயம் சார்ந்த பெரிய வீடுகள் ஆகும். இவ்வூரில் உள்ள காளியம்மன் கோவிலில் ஏகதினப்பொங்கல் விழா (திருவிழா) சித்திரை மாதம் முதல் செவ்வாய் அன்று மிகச் சிறப்பாகப் பல ஆண்டுகளாக நடந்து வருகிறது. சண்முகநாதபுரம் நகரத்தார் தர்மபரிபாலன சபை பல அறச்செயல்களை ஆற்றி வருகிறது. இவ்வூரில் செல்வர்கள் பலர்

இருக்கிறார்கள். பங்கு வர்த்தகத்தில் ஈடுபடுபவர்களும் தொழில் அதிபர்களும் நிறைந்த ஊர். இவ்வூர் நகரத்தார் ஆடம்பரமின்றி அறச்செயல்கள் பல செய்துள்ளனர். இங்கு அருசோ தலைமையில் திருவாசகம் முற்றோதல் *14.8.2011*ல் சிறப்பாக நிகழ்ந்தது. இராமசாமி வரவேற்று, நன்றி கூறினார். அருசோ இவ்வூர் பி.எஸ்.எஸ். உயர்நிலைப்பள்ளியில் *1963–67*ல் *4* ஆண்டுகள் தலைமை ஆசிரியராக பணியாற்றிய பொழுது பெரிய தபால் நிலையம், ஐ.ஓ.பி., கிளை நூலகம், காவல் நிலையம் கொண்டு வந்தார். நீதி அரசர் மெ. சொக்கலிங்கம் அருசோவிடம் சிறுபிராயத்தில் கவிதை கற்றவர்.



## 19. தேவகோட்டை - 11.09.2011

### ஸ்ரீமீனாட்சி சுந்தரேசர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அருசோ)

பொருள் வளமும் அருள்வளமும் பொலிந்த கோட்டை!
பொன்னான கோட்டையிது தேவ கோட்டை!
இருள் இரிய ஞானியரும் கொடைவள் ளல்கள்
எழுந்தருளித் திருப்பணிகள் செய்த பூமி!
அருளாளர் சேக்கிழார் சந்நி திக்கே
அரும்புலவர் வித்திட்ட அரிய கோயில்!
பெருநகரில் மீனாட்சி சுந்த ரேசா!
பேறெல்லாம் தந்தருளிக் காப்பாய் அப்பா!

## தேவகோட்டை - 11.09.2011

(தெ. சொக்கலிங்கம்)

தேவகோட்டை கீழவட்டகையைச் சேர்ந்தது. காரைக்குடியிலிருந்து 16 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரின் மொத்தப் புள்ளிகள் 5000. சூரக்குடி தவிர எட்டுக்கோயில் நகரத்தார்கள் இங்குள்ளனர். நகரத்தார் மக்கள் தொகை அளவால் முதலிடம் பெறும் ஊர். தேவகோட்டையில் நகரச்சிவன் கோயில், நித்யகல்யாணி கைலாசநாதர் கோவில், இரவு சேரி மும்முடிநாதர் கோவில், சிலம்பணி விநாயகர் கோவில், வெள்ளையன் ஊரணிப் பிள்ளையார் கோவில், கருதாஊரணிப் பிள்ளையார் கோவில், மாத்தூர் மணலூர் பிரிவைச் சேர்ந்த வள்ளியப்ப செட்டியார் வகையினரால் கட்டப்பெற்ற பிள்ளையார் கோவில், திண்ணஞ்செட்டிப் பிள்ளையார் கோவில், மந்திரமூர்த்தி விநாயகர் கோவில், பத்ரகாளியம்மன் கோவில் ஆகியவை தேவகோட்டை

நகரத்தார் திருப்பணி செய்த கோவில்கள். கோதண்ட ராமசாமி கோவில், சீனிவாசப் பெருமாள் கோவில், இரவுசேரி காளியம்மன் கோவில் ஊர்க்காவல் தெய்வமான கோட்டையம்மன் கோவில், ஆகியவை தேவகோட்டை நகரத்தார்கள் நிர்வாகத்தில் இருந்துவரும் கோவில்கள். வன்தொண்டச் செட்டியார் சேக்கிழார் கோவில் கட்டுவதற்காகத் தேவ கோட்டையில் இடம் வாங்கியிருந்தார். தேவகோட்டை நகரத்தார்கள் கேட்டுக் கொண்டதற்கு இணங்க அந்த இடத்தை விலையேதும் பெறாமல் நகரச்சிவன் கோவில் கட்டுவதற்கு நகரத்தார்களிடம் கொடுத்தார். அக்கோயிலில் சேக்கிழாருக்குத் தனிச் சன்னதி அமைக்க வேண்டும் என்று வன்தொண்டச் செட்டியார் கேட்டுக் கொண்டார். அதன்படி நகரச்சிவன் கோவிலில் சேக்கிழாருக்குத் தனிச்சன்னதி உள்ளது. சேக்கிழார் கோவிலுக்காக செய்கோனில் இருந்து வரவழைக்கப்பட்ட மணி தேவகோட்டை நகரச் சிவன் கோவில் மணியாக இன்றும் உள்ளது. அம்மணியில் 'சேக்கிழார் திருக்கோயில்' என்று பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. சேவுகன் அண்ணாமலை கல்லூரி மற்றும் சில கல்வி நிறுவனங்கள் நகரத்தார்களால் துவக்கப்பட்டு நன்றாக நடைபெற்று வருகின்றன. கந்தர் சஷ்டி விழா, சேக்கிழார் விழா ஆகியவை இவ்வூரில் நகரத்தார்கள் நடத்தும் புகழ்மிக்க விழாக்கள். விடுதலைப் போராட்ட வரலாற்றிலும் தேவகோட்டைக்கு தனிச்சிறப்பு உண்டு. 1942இல் நீதிமன்றம் எரிக்கப்பட்ட நிகழ்ச்சியில் தேவகோட்டையின் புகழ் உலகெங்கும் பரவியது. ஐ.என்.ஏ.சொக்கலிங்கம் செட்டியாரும் வேறு சில நகரத்தார்களும் இந்திய தேசிய ராணுவத்தில்

பணியாற்றியுள்ளனர். கட்ட முருகப்ப செட்டியாரால் கி.பி.1848ல் கட்டப்பெற்ற காட்டுத்தண்ணீர்ப் பந்தல் நால்வர் குருபூசை மடம் அக்குடும்பத்தைச் சேர்ந்த முத்தமிழ்ப் பேரறிஞர் அரு.சோ. அவர்களால் 8.2.1998ல் நால்வர் கோவிலாக மாற்றம் செய்யப்பட்டு நன்கு இயங்கி வருகிறது. அதில் நால்வர் குருபூசை, முற்றோதல்கள், ஆன்மீகச்சொற்பொழிவுகள் என்று பல நிகழ்ச்சிகள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன; அதில் அருசோ நீலா நூலகமும் உள்ளது. நால்வர் கோவிலில் இரண்டாவது கும்பாபிஷேகம் 14.7.2016ல் நிகழ்ந்தது. மேலும் மூன்று குருபூசை மடங்கள் தேவகோட்டையில் உள்ளன. தமிழ்நாட்டில் தேவகோட்டை நகரத்தார்கள் திருப்பணி செய்த கோவில்கள் ஏராளம். அள.அரு. பொது வீடு, உ.மு.சுப.பொது வீடு, சத்திரத்தார் வீடு ஆகியவை கலைநயம்மிக்க வீடுகளாகும். தேவகோட்டை நகரச் சிவன் கோவிலில் திருவாசக முற்றோதல் 11.9.11ல் நடைபெற்றது. மெய்யன்பர்கள் 57 பேர் கலந்து கொண்டனர். தேவகோட்டை நகரத்தார்கள் சிறப்பாக ஏற்பாடுகள் செய்திருந்தனர். அரு.சோ. அவர்கள், தெ.சொக்கலிங்கம், பழ.மாணிக்கம் செட்டியார் ஆகியோர் வாழ்த்திப் பேசினர். நகரச் சிவன் கோவில் அறங்காவலர் நன்றி கூற முற்றோதல் இனிதே நிறைவு பெற்றது.

(இந்த நூல் தேவகோட்டையில் அருசோ கட்டி உள்ள நால்வர் கோவிலில் அவரது 80 நிறைவு சதாபிஷேக முத்து விழாவில் 1-8-2016ல் வெளிவருவது இறையருளே)



# 20. கல்லுப்பட்டி - 25.09.11
# நித்ய கல்யாணி அம்பாள்.
# உடனாய கைலாசநாதர் துதி

(பொற்கிழிக்கவிஞர் அருசோ.)

நித்யகல் யாணிஉறை கயிலை நாதர்
நித்தியமும் காக்கின்ற கல்லுப் பட்டி
சத்தியமாய்த் தொண்ணூற்றா றூர்கள் தம்மில்
சான்றோர்கள் செல்வர்கள் சார்ந்த பேரூர்
புத்தியினால் சிவனோடு பெருமாள் போற்றிப்
புகழோடு வாழ்கின்ற புனித மிக்கார்
மத்தியிலே இருக்கின்ற கல்லுப் பட்டி
மலைபோன்று உயர்ந்தோங்க வணங்கு வோமே!

## கல்லுப்பட்டி

(தெ. சொக்கலிங்கம்)

கல்லுப்பட்டி பதினாறூர் வட்டகையைச் சேர்ந்தது. காரைக்குடியிலிருந்து 9 கி.மீ. தூரத்தில் அமைந்துள்ளது. இவ்வூரின் மொத்தப்புள்ளிகள் 265. இளையாத்தங்குடி, மாத்தூர், பிள்ளையார்பட்டி ஆகிய மூன்று கோவில் நகரத்தார்கள் இவ்வூரில் வாழ்ந்து வருகிறார்கள். பழைய ஆவணங்களில் எல்லாம் இவ்வூர் சுப்பிரமணியபுரம் என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. 1936-ல் கட்டி குடமுழுக்கு செய்யப் பெற்ற ஸ்ரீ நித்ய கல்யாணி உடனாய கைலாசநாதர் திருக்கோயில் 1950 மற்றும் 2000 ஆண்டுகளில் குடமுழுக்கு செய்யப்பட்டுள்ளது. நகரப்பிள்ளையார் கோவில் ஒன்று உள்ளது. இளையாத்தங்குடி பெருமருதூருடையார் பிரிவைச்

10

சேர்ந்த வ.முத்தையா செட்டியார் 133 ஆண்டுகளுக்கு முன்கட்டிய அரங்கநாதப் பெருமாள் கோவிலை வ.மு.சொ. சீனிவாசன் செட்டியார் குடும்பத்தார் நிருவகித்து வருகின்றனர். இவ்வூரில் நான்கு ஊருணிகள் உள்ளன. பிள்ளையார்பட்டிக் கோவிலைச் சேர்ந்த பழ.மெ.சாமிநாதன் 1935ஆம் ஆண்டு தொடங்கிய மெய்யப்பா தொடக்கப்பள்ளி இப்போது நடுநிலைப் பள்ளியாக அவர்தம் வழிமுறையினரால் நடத்தப் படுகிறது. இவ்வூர் பிள்ளையார்பட்டிக் கோவில் பங்காளிகள் மெய்யாத்தாள் படைப்பு மற்றும் சிவகாமி ஆயாள் படைப்பை தங்களுக்குரிய பொதுப்படைப்பாகப் படைத்து வருகின்றனர். மாத்தூர்க் கோவிலைச் சேர்ந்த எஸ்.எம்.சீனிவாசன் செட்டியார், பிள்ளையார்பட்டிக் கோவிலைச் சேர்ந்த எஸ்.என்.எஸ். சுப்பையா செட்டியார் ஆகியோர் இ.தே.ரா.வில் (I.N.A) பணியாற்றிய இவ்வூர் நகரத்தார்கள் ஆவர். இவ்வூரில் 25.9.11ல் அருசோ தலைமையில் காலை 8.30 மணிக்குத் துவங்கிய திருவாசகம் முற்றோதல் கைலாயநாதர் கோவிலில் 4 மணி அளவில் நிறைவுற்றது. முற்றோதலில் 86 பேர் கலந்து கொண்டனர். கல்லுப்பட்டி நகரத்தார்கள் சிறப்பாக ஏற்பாடுகள் செய்து நன்கு உபசரித்தனர்.



## 21. கல்லல்

### கல்லல் முத்து விநாயகர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

கல்லல் முத்து விநாயகரே!
கனிவாய் ஊரைக் காப்பவரே!
அல்லல் நீக்கி அனைவரையும்
ஆட்கொண் டருளும் விநாயகரே!
செல்லும் திசைகள் அனைத்திலுமே
சேர்ந்து வந்து காப்பவரே!
கல்லும் கனியப் பாடுகிறோம்
கல்லல் முத்தே! காத்திடுக!

### கல்லல் அருள்மிகு முத்துவிநாயகர் மீது தெ.சொக்கலிங்கம் பாடிய பாடல்.

கல்லல் நகரத்தார்க்கு கண் கண்ட தெய்வம்
அல்லல்தனை நீக்கும் ஆனந்த தெய்வம்
தொல்லை வல்வினை யைத்தொலைத்து விடும் தெய்வம்
எல்லையிலா ஆனந்தம் இனிது அருளும் தெய்வம்
தீரா நோயெல்லாம் தீர்த்தருளும் தெய்வம்
ஆறாத இன்பத்துள் ஆழ்த்துகிற தெய்வம்
செட்டிக்குளத்தருகே சீரோங்க வீற்றிருக்கும்
முத்து விநாயகரே முழுமுதல் தெய்வம்!

### கல்லல் - 09.10.2011

(தெ. சொக்கலிங்கம்)

கல்லல் பதினாறூர் வட்டகையைச் சேர்ந்தது. காரைக்குடியிலிருந்து 17 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரின் மொத்தப் புள்ளிகள் 560.

இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன் கோவில், நேமங்கோவில், சூரக்குடி, பிள்ளையார்பட்டி ஆகிய ஆறு கோவில் நகரத்தார் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர். இவ்வூரில் அருள்மிகு சௌந்தரநாயகி அம்மன் உடனாய சோமசுந்தரர் ஆலயம், குன்னம்மாகாளி அம்மன் கோவில், நற்கனி அம்மன் கோவில், நகரத்தார் அனைவருக்கும் பொதுவான அருள்மிகு முத்து விநாயகர் கோவில், இளையாத்தங்குடி – கழனிவாசற் குடிப்பங்காளிகளுக்கு மட்டும் பொதுவான பெருமாள் கோவில் ஆகிய கோயில்கள் உள்ளன. இவ்வூர் மணிமுத்தாற்றின் கரையில் அமைந்துள்ளது. இவ்வூரில் ஊருணிகளும் நிறைய உள. வைரவன் கோவில் ஆ.மு.ஆ. பொதுக்குடும்பத்தினரால் தொடங்கி நடத்தப்படும் 'முருகப்பா மேல்நிலைப்பள்ளி' இவ்வூரில் கல்விப்பணி செய்து வருகிறது. வைரவன் கோவில் பிள்ளையார் வகுப்பினர் ஒப்பிலிக்கருப்பர் படைப்பையும் மாத்தூர் கருப்பூர் பிரிவினர் பதினெட்டாம்படிக் கருப்பர் படைப்பையும் தங்களுக்குரிய பொதுப்படைப்புகளாகப் படைத்து வருகின்றனர். இவ்வூர் சிவன்கோவிலில் மாசிமகத் திருவிழா சிறப்பாக நடைபெறும். இவ் ஊரின் நுழைவு வாயிலில் உள்ள பெரிய பாலம் இவ்வூர் ஆ.மு. குடும்பத்தாரால் கட்டப்பட்டது. திருவாசக முற்றோதல் இவ்வூர் முத்து விநாயகர் கோயிலில் காலை 9.15 மணிக்கு துவங்கி மாலை 4.30 மணி அளவில் நிறைவுபெற்றது. மெய்யன்பர்கள் 122 பேர் கலந்து கொண்டனர். அதில் உறங்காம்பட்டியைச் சேர்ந்த பள்ளி மாணவ மாணவியர் ஐவர் கலந்து கொண்டு முழு நேரமும் இருந்து படித்தது பாராட்டுதற்குரியது. கல்லல் நகரத்தார்கள் சிறப்பாக ஏற்பாடு செய்திருந்தனர். அருசோ., தெ.சொ. பழ.மா. ஆகியோர் வாழ்த்திப் பேசினர். சீனி.கிருஷ்ணமூர்த்தி நன்றி சொல்ல முற்றோதல் இனிதே நிறைவுற்றது.

## 22. அரண்மனை சிறுவயல் - 20.10.2011

### கருணாகடாட்சி அம்மன் உடனாய மும்முடிநாதர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

மருதிருவர் வலம்வந்து களம்கண்ட
அரண்மனையும் வயலும் கொண்ட
அருமைமிகும் அரண்மனையாம் சிறுவயலில்
நகரத்தார் நாட்டார் போற்ற
நிறுவியுள்ள கற்கோவில்; பாண்டியர்கள்
திருப்பணியால் நிலைத்த கோவில்
கருணைபொழி கடாட்சிஸ்ரீ மும்முடிநா
தர் அடிகள் கடைக்கண் காப்பு!

### அரண்மனை சிறுவயல்

(தெ. சொக்கலிங்கம்)

அரண்மனை சிறுவயல் தெற்கு வட்டகையைச் சேர்ந்தது. காரைக்குடியிலிருந்து 20 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரின் மொத்தபுள்ளிகள் 208. இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன் கோவில், நேமங்கோவில், சூரக்குடி ஆகிய ஐந்து கோவில்களைச் சேர்ந்த நகரத்தார்கள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர். மருதுபாண்டியர்கள் இவ்வூரில் அரண்மனை கட்டி இதனையே தங்கள் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தனர். சிவகங்கை சரித்திரக் கும்மியும் அம்மானையும் மருதுபாண்டியர் இங்கே அரண்மனை கட்டியதை விளக்குகின்றன. மேலும் பாழடைந்த அரண்மனையின் பகுதிகளை இவ்வூரில் காண முடிகிறது. இவ்வூரில் அரண்மனை இருந்ததனால் இது அரண்மனை சிறுவயல் என்ற பெயரைப் பெற்றது. மும்முடிநாதர்

ஆலயம், பெரிய பெருமாள் கோவில், புலிக்குட்டி அம்மன் கோவில் ஆகியவை சிவகங்கை தேவஸ்தானக் கோவில்கள். நகரத்தார்களுக்குச் சொந்தமான கோவில் சித்தி விநாயகர் கோவில். இங்கு பாரி வேட்டை என்னும் திருவிழா நடைபெற்று வருகிறது. மகாத்மா காந்தி இவ்வூருக்கு வந்திருக்கிறார். நகரத்தார்களால் நடத்தப்பெறும் தாகூர் நடுநிலைப்பள்ளி உள்ளது. நகரத்தார் ஆடி மாதம் முதல் வெள்ளியன்று ஆடிப்பூசையும் தை மாதம் முதல் செவ்வாய் அன்று அம்மன் கோவிலில் செவ்வாய்ப் பொங்கலும் ஆண்டுதோறும் நடத்தி வருகின்றனர். இவ்வூர் சூரக்குடிப் பங்காளிகள் பொதுப்படைப்பு ஒன்றைப் படைத்து வருகின்றனர். மும்முடிநாதர் கோவிலில் திருவாசக முற்றோதல் அருசோ தலைமையில் காலை 9.30 மணிக்குத் துவங்கி மாலை 4.00 மணி அளவில் நிறைவடைந்தது. மெய்யன்பர்கள் 97 பேர் கலந்து கொண்டனர்.



## 23. வெற்றியூர் - 13.11.2011
## காளை விநாயகர் மற்றும் அருள்மிகு சௌந்தர நாயகி அம்மன் உடனாய அருந்ததீசுவரர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அருசோ)

நிலவளமும் நீர்வளமும் வெற்றி யூரின்
நெடுஞ்சொத்தாய் கல்வியினால் நிறைந்த ஊரின்
குலமான நகரத்தார் கோலா கலமாய்க்
கொண்டாடும் திருமடத்தின் காளை நாயகா!
வலம்வந்தே வணங்குகிறோம் அருந்த தீசா!
வாழ்வருளும் சௌந்தரநா யகியே! அம்மா!
நலமெல்லாம் தந்தருள்வாய் நகரத் தாரும்
நாட்டாரும் உயர்ந்தோங்க நயனம் பாரே!

## வெற்றியூர் - 13.11.11

(தெ. சொக்கலிங்கம்)

வெற்றியூர் தெற்கு வட்டகையைச் சேர்ந்தது. காரைக்குடியிலிருந்து 29 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரின் மொத்தபுள்ளிகள் 146. மாத்தூர், வைரவன் கோவில், இளையாத்தங்குடி, பிள்ளையார்பட்டி ஆகிய 4 கோவில் நகரத்தார்கள் வாழ்ந்து வருகின்றனர். இந்து அறநிலையத் துறையினரால் நிருவகிக்கப்படும் சௌந்தர நாயகி உடனாய அருந்ததீசுவரர் கோவில், அன்னபூரணி அம்மன்கோவில் ஆகியவற்றில் நகரத்தார் திருப்பணி செய்துள்ளனர். மாத்தூரைச் சேர்ந்த இராம.மு.இராம. ச.சோம. குடும்பத்தார் காளைவிநாயகர் கோவிலைக் கட்டியுள்ளனர். நகரத்தாருக்குப் பொதுவான நகர மடத்தில் ஆடிப்பூசை சிறப்பாக நடைபெறுகிறது. பிள்ளையார் கோவில் ஊருணி ராம.மு.ச.சோம குடும்பத்தினரால் வெட்டப்பட்டதாகும். காளையார்

கோவிலில் அரு. தெய்வராயன், இராம.மு.இராம. குடும்பத்தார்கள் விபூதி மடம் வைத்து கோவிலுக்கு நாள்தோறும் விபூதி கொடுத்து வருவதோடு 8–ம் திருவிழா அன்று வருபவர் அனைவருக்கும் விபூதிப்பை வழங்குகின்றனர். சாலாட்சி ஊருணி (குடிதண்ணீர்) கீழ்கரையில் சாலவிநாயகர் கோவில் தீர்த்தப்ப செட்டியார் வகையறா உபயம். கோவில் செட்டியார் வீடு மருது உடைய அய்யனார் கோவில் திருப்பணி செய்து உள்ளனர். சொக்கலிங்கம் செட்டியார் வகையறா நந்தவனம் வைத்து உள்ளனர். மாத்தூர்க் கோவிலைச் சேர்ந்த வெற்றியூர் நகரத்தார்கள் மாத்தூரில் 6ஆம் திருவிழா மண்டகப்படி நடத்தி வருகிறார்கள். மாத்தூர்க் கோவிலைச் சேர்ந்தவர்கள் கோட்டூர் நைனார் கோவிலில் வைகாசித் திருவிழாவில் சாமி எழுந்தருளலுக்கு கைலாச வாகனம் செய்து கொடுத்து இருக்கிறார்கள். கோட்டூர் வைகாசித் திருவிழாவில் முதல் மண்டகப்படியை இராம. குடும்பத்தாரும், நிறைவு மண்டகப்படி தெப்ப உற்சவம் குப.ஆறு. ராஜ்குமார் குடும்பத்தாரும் செய்து வருகிறார்கள்.

வெற்றியூர் நகரமடத்தில் (பூசை மடம்) திருவாசக முற்றோதல் காலை 9.15 மணிக்கு அருசோ தலைமையில் துவங்கி மாலை 4.30 மணி அளவில் நிறைவு அடைந்தது. மெய்யன்பர்கள் 101 பேர் கலந்து கொண்டனர். வெற்றியூர் நகரத்தார்கள் சிறப்பான ஏற்பாடுகள் செய்திருந்தனர். வெற்றியூர் அழ.கணேசன் செட்டியார் அவர்களால் புதிதாக செய்யப்பட்டிருந்த நடராஜர், சிவகாமி அம்மன், மாணிக்கவாசகர் விக்கிரகங்களை முற்றோதலின்போது வைத்து பூசை செய்யப்பட்டது. கிருஷ்ணன் செட்டியார் நன்றி சொல்ல முற்றோதல் இனிதே நிறைவுற்றது.



## 24. கொ. அழகாபுரி - 27.11.2011

### கொல்லங்குடி அழகாபுரி சித்தி விநாயகர் துதி

(அருசோ)

வெட்டுடையாள் மாகாளி அருள் கொல்லங்
குடி அழகா புரியில் ஓங்கும்
பெட்டகமாம் கற்கோவில் வீற்றிருந்தே
அருள் சித்தி விநாயகாஎம்
திட்டமெலாம் நிறைவேற்றித் திரவியமும்
தந்தருளித் தினமும் காப்பாய்
அட்டசித்தி அருளிடுவாய் கம்பர்சிலை
அழகாபுரி அமர்ந்த தேவே!

## கொ. அழகாபுரி - 27.11.2011

(தெ. சொக்கலிங்கம்)

கொல்லங்குடி அழகாபுரி தெற்குவட்டகையைச் சேர்ந்தது. காரைக்குடியிலிருந்து 40 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரின் மொத்தப் புள்ளிகள் 92. இந்த 92 புள்ளிகளுமே இளையாத்தங்குடி கிங்கிணிக்கூருடையார் பிரிவைச் சேர்ந்தவர்கள். செட்டிநாட்டில் மூன்று ஊர்கள் அழகாபுரி என்ற பெயரில் உள்ளன. அவை பில்ல மங்கலம் அழகாபுரி, கோட்டையூர் அழகாபுரி, கொல்லங் குடி அழகாபுரி ஆகும். இவ்வூரில் நகரத்தாருக்குப் பொதுவான சித்தி விநாயகர் கோவில் உள்ளது. இங்கு இரு ஊருணிகள் உள. அவற்றுள் ஒன்று குடி தண்ணீர் ஊருணி. இவ்வூரை அடுத்துள்ள கொல்லங்குடியில் வெட்டுடைய காளி அம்மன் கோவில் உள்ளது. அக்கோவில் திருப்பணியைச் செய்தவர்கள் இவ்வூரைச்

சேர்ந்த அம்பலகாரச் செட்டியார் வீடு எனப் பெயர் பெற்ற க.மெ.உ.குடும்பத்தினர். இப்போதும் இக்கோவிலின் நிர்வாகத் தலைமைப் பொறுப்பில் இவ்வூர் நகரத்தாரே உள்ள. பங்குனி மாதம் இக்கோவிலில் நடைபெறும் திருவிழாவில் 10ஆம் திருவிழாவாகிய பூப்பல்லக்கு இவ்வூர் நகரத்தார் மண்டகப்படியாகும். உ.வகையாரைச் சேர்ந்த 65 புள்ளிகள் மாங்கல்யக்காரி என்ற தேனாத்தாள் படைப்பைத் தங்களுக்குரிய பொதுப்படைப்பாக மூன்று ஆண்டுகட்கு ஒருமுறை சித்திரை மாதம் வளர்பிறை வெள்ளிக்கிழமை தொடங்கி 3 நாட்கள் படைக்கின்றனர். கொ.அழகாபுரி சித்தி விநாயகர் கோவிலில் அருசோ தலைமையில் திருவாசக முற்றோதல் காலை 9.40–க்குத் துவங்கி மாலை 4.45 அளவில் நிறைவடைந்தது. மெய்யன்பர்கள் 64 பேர் கலந்து கொண்டனர். கொ.அழகாபுரி நகரத்தார்கள் சிறப்பாக ஏற்பாடுகள் செய்திருந்தனர். கொ.அழகாபுரி நகரத்தார் சார்பில் வி.மெய்யப்பன் நன்றி சொல்ல முற்றோதல் இனிதே நிறைவடைந்தது.

இங்கு சித்திவிநாயகர் கோயிலில் இருக்கும் கம்பர் சிலை மிகவும் அழகாக இருக்கிறது.



## 25. நாட்டரசன்கோட்டை - 11.12.2011

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

நாட்டுக் கோட்டை ஊர்களிலே
நாலு புறமும் வீடமைய
காட்டு வெளியாய் நடுவினிலே
கண்ணகி கோவில் கொண்டநகர்!
பாட்டுக் கோட்டை கம்பனது
பாதம் அமைந்த நாட்டரசன்
கோட்டை! கண்ணாத் தாள் காப்பில்
குலவும் கோட்டை வாழியவே!

## நாட்டரசன்கோட்டை - 11.12.2011

(நாட்டரசன்கோட்டை ஊரைப் பற்றி தெ.சொக்கலிங்கம் பாடிய பாடல்)

கண்ணாத்தாள் வீற்றிருக்கும் நாட்டரசன் கோட்டை
கவிகம்பன் துயில் கொள்ளும் பாட்டரசன்கோட்டை
எண்ணத்தால் உயர்வுமிக்க நகரத்தார் எப்போதும்
எண்ணிலாத் தருமங்கள் இயற்றிவரும் கோட்டை
கம்பர் விழா காணுகின்ற கவின்மிகுந்த கோட்டை
களியாட்டக் கண்ணாத்தாள் காத்தருளும் கோட்டை
கண்பிணியைத் தீர்த்தருளும் கண்ணாத்தாள் கோட்டை
நாட்டரசன் கோட்டையினர் நலமோடு வாழ்க!

## நாட்டரசன் கோட்டை - 11.12.2011

(தெ. சொக்கலிங்கம்)

நாட்டரசன் கோட்டை தெற்கு வட்டகையைச் சேர்ந்தது. காரைக்குடியிலிருந்து நடராஜபுரம் வழியாக

35 கி.மீ. தொலைவில் உள்ளது. மொத்த புள்ளிகள் 891. இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன்கோவில், சூரக்குடி, இரணிக்கோவில், பிள்ளையார்பட்டி ஆகிய ஆறு கோவில் நகரத்தார்கள் வாழ்ந்து வருகிறார்கள். கரிகாலச்சோழீசுவரர் கோவில், வெங்கடேசப்பெருமாள் கோவில், கண்ணுடையம்மன் கோவில் ஆகிய இவ்வூர்க் கோவில்களில் நகரத்தார்கள் கௌரவ கண்காணிப்பாளர், தக்காராகப் பணியாற்றி நிருவகிப்பதுடன் பல்வேறு அறக்கட்டளைகளையும் ஏற்படுத்தி உள்ளனர். சூரக்குடிக் கோவில் பங்காளிகள் கட்டியுள்ள தீர்த்தார் குளம் தேசிக விநாயகர் கோவிலை அப்பங்காளிகள் நிருவகித்து வருகின்றனர். நகர மாளிகை (சாரணர் நிலையம்), ஐயாக்கள் மடம் ஆகியவை நகரத்தார் பொது அமைப்புகளாகும். மாணிக்கவல்லி பகுதியில் வாழும் நகரத்தார் கட்டியுள்ளது மாணிக்க விநாயகர் கோவில் ஆகும். மாத்தூர் மெ.நடராசன் செட்டியார் புதிதாகக் கல்யாண ராமர் கோயில் கட்டியுள்ளார். புதிதாக ஐயப்ப சுவாமி கோவில் கட்டப்பட்டுள்ளது. பெரிய கருப்பணசாமி கோவிலும் குருநாதன் கோவிலும் நகரத்தார்கள் வணங்கும் குலதெய்வக் கோயில்கள் ஆகும்.

இவ்வூரில் கண்ணாத்தாள் என்று அழைக்கப்படும் கண்ணுடையம்மன் கோவில் மிகவும் புகழ்பெற்றது. கண்ணகியே இக்கண்ணாத்தாள் என்றும் கூறுகின்றனர். கண் தொடர்பான நோய்கள்தீர இவ்வம்மனை வேண்டிக் கொண்டு கண்மலர்கள் வாங்கிச் சாத்துவர். இக்கோயிலின் முகப்பு மண்டபமாகிய சொற்கட்டான் மணிமண்டபம் அழகிய சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்தது. தை மாதத்தில் நகரத்தார்கள் அனைவரும் கூடி சீட்டுக் குலுக்கி எடுத்து அவ்வரிசைப்படி புள்ளிக்கு

ஒரு அடுப்பு அமைத்து செவ்வாய்ப் பொங்கலைச் சிறப்பாகக் கொண்டாடு கின்றனர். வைகாசி மாதம் நடைபெறும் கண்ணாத்தாள் வைகாசி விசாகத் திருவிழா பெரிய திருவிழா ஆகும். 12 ஆண்டுகட்கு ஒருமுறை எடுக்கப்படும் களியாட்டத் திருவிழா இவ்வூர் நகரத்தார்கள் ஊர்க் குடிமக்களுக்குச் சிறப்புச் செய்யும் விழா ஆகும். களியாட்ட வீடு என்றே தனி வீடு அமைத்து கண்ணாத்தாள் படம் எழுதி விளக்கேற்றி மது வடித்து வழிபடுதல் விழா நடைமுறையாகும்.

வேங்கடேசப்பெருமாள் கோவிலில் புரட்டாசி மாதம் திருவிழா நடைபெறும், தேசிக விநாயகர் கோவிலில் சதுர்த்தி விழா நடைபெறும். புது ஊருணி, மாணிக்கவல்லி ஊருணி செங்கமலத்தான் ஊருணி, தீர்த்தார் குளம் ஊருணி, வீரகண்டான் ஊருணி, நாயன்மார்குளம், கம்பர்சமாதி ஊருணி ஆகியவை இவ்வூரிலுள்ள நீர்நிலைகள் ஆகும். இவ்வூரில் மாத்தூர்க் கோவிலார் சிவகாமி ஆத்தாள் படைப்பு படைக்கி றார்கள். இவ்வூரில் உள்ள பள்ளிகள் 1. ச.ராம. மேல்நிலைப்பள்ளி 2. விசாலாட்சி வித்தியாசாலா தொடக்கப்பள்ளி 3. குப.ராம. தொடக்கப்பள்ளி 4. கானாடு காத்தான் முத்தையா சுப்பையா செட்டியார் பெண்கள் மேல்நிலைப்பள்ளி ஆகியவை ஆகும்.

வி.கே.என். குடும்பத்தார் வெள்ளையப்ப செட்டியார் – மீனாட்சி ஆச்சி தாய்சேய் நலவிடுதியை நடத்தி வருகிறார்கள். கம்பன் பள்ளிப்படை கோவிலும், கம்பன் செய்யும், கம்பன் வாய்க்காலும் அமைந்துள்ள இவ்வூரில் காரைக்குடி கம்பன் கழகத்தார் கம்பன் விழா 4ஆம் நாள் நிகழ்ச்சிகளை ஆண்டுதோறும் நடத்தி வருகின்றனர். கம்பன் பள்ளிப்படைக் கோவிலைக் கட்டிக்காத்துவந்த ஆ.வி.அரு.இராம.இராமநாதன்

செட்டியார் 'கம்பர் இராம' என்றே அழைக்கப்பட்டார். இவ்வூர் வெ.கண.க.கண. கண்ணப்பசெட்டியார் விடுதலைப் போராட்டத் தியாகி. இவ்வூரில் வெ.க.அ.வகை விடுதியும். பெரி.அரு.கண்ணப்ப செட்டியார் சத்திரமும், வெ.கண.பசுமடமும், பாரதி இலவச வாசக சாலையும் உள்ளன. நாட்டரசன் கோட்டை அருள்மிகு சிவகாமி அம்மன் உடனாய கரிகாலசோழீசுவரர் கோயிலில் திருவாசக முற்றோதல் 11.2.11ல் அருசோ தலைமையில் காலை 10 மணிக்குத் துவங்கி மாலை 4 மணிக்கு நிறைவடைந்தது. மெய்யன்பர்கள் 107 பேர் கலந்து கொண்டனர். நாட்டரசன்கோட்டை நகரத்தார்கள் சிறப்பாக ஏற்பாடுகளைச் செய்திருந்தனர். வரவேற்புரை Dr.KN.K.S.K. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் நிகழ்த்தினார்கள். தெ.சொ., சீனி முத்தையா, பழ.மா. வாழ்த்திப் பேசினர். நாட்டரசன்கோட்டை நகரத்தார் சார்பில் பொறியாளர் RM ஜெகந்நாதன் செட்டியார் நன்றிகூற முற்றோதல் இனிதே நிறைவடைந்தது.

முன்பு கண்ணாத்தாள் கோவில் கும்பாபிஷேகத்தை முன்னிட்டு இவ்வூரில் 3 நாட்கள் கார்சிஸ்ரீ அருசோ 'மகாபாரதம் விராட பருவம்' தொடர் சொற்பொழிவு செய்ய, மழை பொழிந்து குளங்கள் நிரம்பி, கும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெற்றது குறிப்பிடத்தக்கது.



## 26. சக்கந்தி - 25.12.2011

### கயிலாசு விநாயகர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

1. மலர் செந்தா மரைக்குளமும் அக்கிர காரம்
மாண்பான மாளிகையும் சூழ உள்ள
தலமான சக்கந்தி நகரத் தாரின்
தன்னிகரில் கயிலாச விநாய காஉன்
வளமான பெட்டகமாம் கோவி லுக்குள்
வந்தோர்கள் பெரும்பேறு பெற்றோர் ஆவர்
குலம் வளர நாடுயரக் கும்பிட் டோமே!
குணம் தந்து நலம் தந்து காப்பாய் அப்பா.

2. இளையாற்றங் குடிபேர செந்தூ ரார்கள்
இணையில்லாக் கற்கோவில் எழுப்ப இங்கே
முறையாக எழுந்தருளிச் சக்கந் திக்கு
முன்னேற்றம் தந்தருளும் மூல வித்தே!
களையின்றிக் காப்பவனே! வெள்ளி அங்கி
கடுக்கைமாலை கைலாச விநாய காஉன்
புழைக்கரத்தால் அனைவரையும் காப்பாய் அப்பா!
பொன்னடிகள் தொழுகின்றோம்! போற்றி! போற்றி!

## சக்கந்தி - 25.12.2011

(தெ. சொக்கலிங்கம்)

சக்கந்தி தெற்கு வட்டகையைச் சேர்ந்த ஊராகும். காரைக்குடியிலிருந்து 56 கி.மீ. தொலைவில் உள்ளது. சிவகங்கை-மேலூர் சாலையில் அமைந்துள்ளது.

இளையாத்தங்குடி பேர செந்தூருடையார் பிரிவைச் சேர்ந்த 33 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர். இவ்வூரில் உள்ள கைலாச விநாயகர் கோவில் நகரத்தார்களால் திருப்பணி செய்யப்பட்டதாகும். இக்கோவில் 1935-ல் கட்டப்பட்டு குடமுழுக்கு செய்யப்பட்டது. சமீபத்தில் 2011 ஜூலையில் ஒரு குடமுழுக்கு செய்யப்பட்டுள்ளது. நாராயணன் செட்டியார் நன்கொடை வழங்க நாராயணன் செட்டியார் சிட்டாள்ஆச்சி தொடக்கப்பள்ளி என்ற பெயரில் ஊராட்சி மன்றம் 1970இலிருந்து நடத்தி வருகிறது. சிவகங்கை -மேலூர் சாலையில் நைத்தான்பட்டி விலக்குச் சாலையில் உள்ள வல்லடியார் கோவில் இவ்வூர் நகரத்தாரின் குலதெய்வக் கோவில் ஆகும். அக்கோவிலில் சிவன்ராத்திரியை ஒட்டித் தொடங்கி, பௌர்ணமியில் நிறைவுபெறும் வண்ணம் 10 நாள் திருவிழா ஆண்டுதோறும் நடைபெறுகிறது. அதில் எட்டாம் திருவிழாவன்று சக்கந்தி நகரத்தார் அனைவரும் அங்கே கூடிப் பாற்பொங்கலிட்டு வழிபடுவது மரபு. காளையார் மங்கலத்தில் இவ்வூர் நகரத்தார் குலதெய்வமான கக்கூருடையார் அய்யனார் கோவில் அமைந்துள்ளது. அக்குலதெய்வத்தையும் வருடம்தோறும் சென்று வணங்கி வழிபட்டு வருகின்றனர். மதுரை கீழ ஆவணி மூலவீதியில் இவ்வூர் நகரத்தாருக்கு உரித்தான 'தண்ணீர்ப்பந்தல்' தர்ம கைங்கர்யத்தையும் சித்திரைத் திருவிழாவின்போது சுமார் 100 ஆண்டுகளுக்கு மேலாகச் சிறப்பாக நடத்தி வருகிறார்கள். செம்பனூரைச் சேர்ந்த கும.நா.சுப.

நா.இராமசாமி செட்டியார் இவ்வூரில் ஸ்ரீ வடிவாம்பிகை மில்ஸ் என்ற ஆலையினை நிறுவி உள்ளார்.

இவ்வூரைச் சேர்ந்த உல.க.கண.குடும்பத்தார் திருவாரூர் கமலாயத் தெப்பக் குளத்தின் மைய மண்டபத்தைக் கட்டியவர்களாவர். சக்கந்தி அருள்மிகு கைலாச விநாயகர் கோவிலில் திருவாசக முற்றோதல் 25.2.11ல் அருசோ தலைமையில் காலை 10 மணிக்குத் துவங்கி மாலை 5 மணிக்கு நிறைவடைந்தது. மெய்யன்பர்கள் 80 பேர் கலந்து கொண்டனர். சக்கந்தி நகரத்தார்கள் சிறப்பாக ஏற்பாடுகள் செய்திருந்தனர். வரவேற்புரை கண.சிதம்பரம் செட்டியார் நிகழ்த்தினார். அரு.சோ.,செ.சொ, பழ.மா.ஆகியோர் வாழ்த்திப் பேசினர்.



## 27. சோழபுரம் - 07.01.2012

## தீப்பாய்ந்தாள் அம்மன், அறம் வளர்த்த நாயகி உடனாய அருள்மொழிநாதர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ)

சோர்வில்லா நகரத்தார் சோழபுரத்
தார் போற்றும் சொர்க்கத் தேவி!
சோழபுரத் தீ ப்பாய்ந்தாள் சுகம் தந்து
புறமுடனே அகமும் காத்தே
ஊர்காக்கும் அம்மன்தன் திருவடியில்
உவப்போடு கூடி நின்று
உளமாரப் போற்றிடுவோர் உயர்வோடு
வளம்பெற்றே உயர்வர் அன்றோ!

பார் ஆண்ட சிவகங்கை மன்னர்க்கு
முடிசூட்டும் பண்பினாலே
பார்போற்றும் அருள்மொழியான் நாதனறம்
வளர்க்கின்ற நாயகிக்கு
சீர் கொண்ட கோயிலினைத் திருப்பணிசெய்
ஒக்கூரார் திறத்தி னாலே
செல்வமலி சோழபுரச் சிவபெருமான்
திருவடிகள் போற்றி! போற்றி!

## 27. சோழபுரம்

## சோழபுரம் தீப்பாய்ந்தாள் அம்மன் அறம் வளர்த்த நாயகி உடனாய அருள்மொழி நாதர்மீது தெ.சொக்கலிங்கம் பாடிய பாடல்

அறம் வளர்க்கும் அம்மா! சோழபுரத்தாயே!
அகிலமெலாம் அமைதி பெற அருள்தருவாய் நீயே!

தீவினையைத் தீய்த்தருளும் தீப்பாய்ந்த அம்மா!
தேசமெல்லாம் செழித்தோங்கச் செய்திடுவாய் அம்மா!
பொருளனே! புனிதா! அருள்மொழி நாதா!
இருள்கெட அருளும் இன்னுயிர்த் தேவா!
தவயோகி பாரதியார் தவமிருந்த சோழபுரம்
சிவமயமாய்த் திகழ்ந்தோங்கி சிவனருளால் வாழியவே!

## சோழபுரம் - 07.01.2012

(தெ. சொக்கலிங்கம்)

சோழபுரம் தெற்கு வட்டகையைச் சேர்ந்தது. காரைக்குடியிலிருந்து கல்லல், செம்பனூர், மதகுபட்டி வழியாக 40 கி.மீ. தொலைவில் உள்ளது. மொத்த புள்ளிகள் 32. மாத்தூர், பிள்ளையார்பட்டி ஆகிய இரு கோவில் நகரத்தார்கள் வாழ்ந்து வருகிறார்கள். இவ்வூரில் பழமையானதும், ஒக்கூர் சி.கரு.சி. மற்றும் சி.கரு.சி. கரு., குடும்பத்தாரால் திருப்பணி செய்யப்பெற்றதுமான அறம் வளர்த்த நாயகி உடனாய அருள்மொழிநாதர் கோவில் என்னும் சிவன் கோவில் சிவகங்கை அரச குடும்ப நிருவாகத்தில் உள்ளது. இவ்வூரில் மாத்தூர் உறையூர்ப் பிரிவு நகரத்தாரின் குலதெய்வமான தீப்பாய்ந்தாள் அம்மன் கோவில் ஒன்றும் உள்ளது. இப்பிரிவுப் பங்காளிகள் தங்கள் வீடுகளில் ஒவ்வொரு திருமணம் நிகழும்போதும் தீப்பாய்ந்தாள் படைப்பினைப் பொதுப்படைப்பாகப் படைத்து வருகின்றனர். இவ்வூர் மாத்தூர் நகரத்தார் தைப் பொங்கலன்று அம்மன் கோவிலில் பொங்கல் வைத்த பிறகே தத்தம் வீடுகளில் பொங்கல் வைப்பது மரபு. இங்கு நடைபெறும் ஆனித் திருவிழாவில் ஏழாம் திருநாள் மண்டகப்படியினை சுப.க.அ. குடும்பத்தார் செய்து வருகின்றனர். யோகி

சுத்தானந்த பாரதியார் தவக்குடில் கட்டி வாழ்ந்த சோழபுரத்தில் அவர் பெயரால் நடைபெறும் உயர்நிலைப்பள்ளிக்கு சுப.க.அ. குடும்பத்தார் நிலம் நன்கொடையாக வழங்கி உள்ளனர். இக்குடும்பத்தினரே காளையார் கோவில் சுகந்தவனப்பெருமாள் கோவிலை நிருவகித்தும் வருகின்றனர். இவ்வூரைச் சேர்ந்த சுப.கண குடும்பத்தினர் 100 ஆண்டுகட்கு முன்னர் திருப்பரங்குன்றம் சரவணப்பொய்கைக்குக் கல்படித்துறை கட்டிக் கொடுத்துள்ளனர். மேலும் இராமேஸ்வரம் கோயில் மூன்றாம் பிராகாரத்தில் நந்தவனம் அமைத்து கடந்த 100 ஆண்டுகளாக இறைவன் பூசைக்கு மலர் அளித்து வருகின்றனர். சோழபுரம் ராம அண. சுப்பையா செட்டியார் மதுரை மீனாட்சி அம்மனுக்கு வைரக்கிளி செய்து கொடுத்திருக்கிறார்கள். பழமுதிர்சோலை முருகப்பெருமான் ஆலயக் கோபுரம், சுற்றுமண்டபம், தேர் நிற்குமிடம் ஆகியவற்றை ராம.அண. சுப்பையா செட்டியார் கட்டிக் கொடுத்திருக்கிறார்கள். சோழபுரம் தீப்பாய்ந்த அம்மன் கோயிலில் திருவாசக முற்றோதல் அருசோ தலைமையில் காலை 10 மணிக்குத் துவங்கி மாலை 4.30 மணிக்கு நிறைவு பெற்றது. மெய்யன்பர்கள் 97 பேர் கலந்து கொண்டனர். சோழபுரம் நகரத்தார்கள் சிறப்பாக ஏற்பாடுகள் செய்திருந்தனர். வரவேற்புரையும் நன்றியுரையும் செந்தமிழன் நிகழ்த்தினார். அரு.சோ, தெ.சொ., பழ.மா. ஆகியோர் வாழ்த்திப் பேசினர். திருவாசக முற்றோதல் இனிதே நிறைவுபெற்றது.



# 28. கீழப்பூங்குடி - 22.01.2012

## ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

கீழப்பூங் குடியினிலே கோயில் கொண்டு
கீர்த்திமிகு நகரத்தார் நாட்டார் போற்றி
வாழப்பூங் குடிகாக்கும் சுந்த ரேசா!
வைகையினைக் கொண்டிங்கே வந்து காத்தே
ஆளுகின்ற மீனாட்சி அடிகள் போற்றி!
அற்புதமாய்க் கோபுரமும் மண்ட பங்கள்!
நாளெல்லாம் விழாக்கோலம்! செல்வச் சேர்க்கை!
நலமெல்லாம் தந்தருளைப் பொழிவாய் அப்பா!

## கீழப்பூங்குடி - 22.01.2012

(நெ. சொக்கலிங்கம்)

கீழப்பூங்குடி தெற்கு வட்டகையைச் சேர்ந்தது. காரைக்குடியிலிருந்து கல்லல், செம்பனூர் வழியாக 40 கி.மீ. தொலைவில் உள்ளது. மொத்தப் புள்ளிகள் 135. இளையாத்தங்குடி, மாத்தூர், இலுப்பக்குடி ஆகிய மூன்று கோயில் நகரத்தார்கள் வாழ்ந்து வருகிறார்கள். அருள்மிகு மீனாட்சி சுந்தரேசர் கோவில் இவ்வூர் கூராண்டான் செட்டியார், தீர்த்தப்ப செட்டியார் வகையினரால் 1870இல் கட்டி முடிக்கப்பெற்று குடமுழுக்குச் செய்யப்பெற்றது. இப்போது இக்கோயில் கூராண்டான் வகையினரால் நிருவகிக்கப்பட்டு வருகிறது. இங்கு நவராத்திரி சிறப்பாகக் கொண்டாடப் பெறுகிறது.

தீர்த்தப்ப செட்டியார் வகையினர் நிருவாகத்தில் சின்ன ஊருணியும் அதன் மேல்புறத்தில் அவர்களால் கட்டப்பட்ட பிள்ளையார் கோவிலும் உள்ளன. இதே ஊருணியின் வடகரையில் இவ்வூர் இராம நா. குடும்பத்தார் சித்தி விநாயகர் கோவில் கட்டி 1935-ல் குடமுழுக்குச் செய்து இன்றும் நிருவகித்து வருகின்றனர்.

கூ.அரு மற்றும் கூ.கண. வகையைச் சேர்ந்த 6 குடும்பத்தினர் புது ஊருணி செல்வ விநாயகர் கோவிலைக்கட்டி நிருவகித்து வருகின்றனர்.

இவ்வூரில் திருவருட்சமாதி கொண்ட மிளகாய்ச் சாமிக்கு ஒரு நினைவாலயம் எழுப்பப்பட்டு, கூராண்டான் வகையினரால் நிருவகிக்கப்பட்டு வருகிறது. இம்மடத்தில் ஆண்டுதோறும் சித்திரை மாதம் கடைஞாயிறு அன்று குருபூசையும் அன்னதானமும் நிகழ்ந்து வருகிறது. இம்மிளகாய்ச்சாமியின் வரலாற்றை உரைநடை வடிவிலும் செய்யுள் வடிவிலும் 1931–ல் நூல்களாக வெளியிடப் பெற்றுள்ளது. இவ்வூரில் அரசினர் உயர்நிலைப்பள்ளி 1961 முதல் நகரத்தார் களுக்குச் சொந்தமான மிளகாய்ச்சாமி மட விடுதியில் வாடகை இல்லாமல் நடந்து வந்தது. பின்னர் இதற்கு தனிக்கட்டடம் கட்ட இவ்வூரைச் சேர்ந்த கண.வேதாம் பாள் ஆச்சி 2 ஏக்கர் மனையிடமும் நிதி உதவியும் அளித்தார். இக்கட்டடத்தில் 1993 முதல் அரசினர் மேல்நிலைப்பள்ளி நடைபெற்று வருகிறது.

இவ்வூர் கூ.அரு.க.குடும்பத்தார் நிலமும் கட்டடமும் நன்கொடை அளிக்க அங்கு அரசினர் ஆரம்ப சுகாதார நிலையம், தாய்சேய் நலவிடுதி ஆகியவை நடந்து வருகின்றன. இவ்வூர் கூ.க.வயி. மகள் விசாலாட்சி ஆச்சியால் நன்கொடையாக வழங்கப்பெற்ற கட்டடத்தில் அரசினர் தொடக்கப்பள்ளி நடைபெற்று வருகிறது. இவ்வூரில் பிள்ளையார் நோன்பன்று நகரத்தார பொதுவாக இழையெடுத்துக் கொள்ளும் மரபு உள்ளது. இவ்வூர் கூ.க.அரு.குடும்பத்தாரால் கடந்த 100 ஆண்டுகட்கும் மேலாக மதுரை மீனாட்சி அம்மன் கோவில் மேல ஆடி வீதியில் ஒரு பசுமடம் நடத்தப்பட்டு வருகிறது. இவ்வூர் கூ.அரு. மற்றும் கூ.கண குடும்பத்தினர் சேர்ந்து சோழபுரத்தில் யசுர் வேத பாடசாலை ஒன்று

நடத்தி வந்தனர். இப்போதும் அக்கட்டடம் இவர்கள் பொறுப்பில் உள்ளது. அரசாங்கம் செய்ய வேண்டிய வேலைகளையெல்லாம் இவ்வூர் நகரத்தார்கள் செய்திருக்கிறார்கள்.

தற்போது இருக்கும் சிவன்கோயில் புதிதாகக் கட்டப்பட்டு சிவனுக்கு சுந்தரேசுவரர் என்றும் அம்பிகைக்கு மீனாட்சி என்றும் பெயர் சூட்டப்பட்டது. பழைய கோவில் காலப்போக்கில் அழிந்துவிட்டது. பழைய கோவிலில் எழுந்தருளி இருந்த அம்'ாள் பெயர் பிரம்ம வித்யாம்பிகை. பூங்குடியாள் என்னும் பெயருண்டு.

உத்திராட நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் உத்திராட நட்சத்திரத்தன்று கீழப்பூங்குடி மீனாட்சி அம்மனை வழிபட்டால் சகல தோஷங்களும் நீங்கும், வாழ்வில் முன்னேற்றம் உண்டாகும்.

கீழப்பூங்குடி அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயிலில் அருசோ தலைமையில் திருவாசக முற்றோதல் 22.1.12 காலை 10.15-க்குத் துவங்கி மாலை 4.30 மணிக்கு நிறைவுபெற்றது. மெய்யன்பர்கள் 85 பேர் கலந்து கொண்டனர். கீழப்பூங்குடி நகரத்தார்கள் நல்ல ஏற்பாடுகள் செய்திருந்தனர். வரவேற்புரையு: நன்றியுரையும் வயி.சொ.சம்பத் செட்டியார் நிகழ்த்தினார். அரு.சோ., தெ.சொ.பழ.மா. ஆகியோர் வாழ்த்திப் பேசினர். திருவாசக முற்றோதல் இனிதே நிறைவு பெற்றது.

கீழப்பூங்குடிச் சிவன் கோயில் கும்பாபிஷேகக் கவியரங்கிற்கு கவிஞர் அருசோ தலைமை தாங்கி நடத்தியது குறிப்பிடத்தக்கது. அப்பொழுது அவர் பாடிய பாடல்கள் 'அரு.சோ.கவிதைகள்' என்னும் தொகுப்பு நூலில் அச்சாகி உள்ளன.



## 29. ஒக்கூர் - 12.02.2012

### ஒக்கூர் சசிவர்ண விநாயகர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அருசோ)

சங்கத்து மாசாத்தி வாழ்ந்த ஒக்கூர்
சசிவர்ண விநாயகரே! நகரத் தார்கள்
தங்கத்தால் இழைத்துள்ளார்; பெட்ட கம்போல்
தன்னிகரில் திருக்கோவில்! நாட்டார் போற்ற
மங்கலமாய் எழுந்தருளி என்றும் காத்து
மக்கட்பே றுடன் செல்வம், கல்வி, ஆயுள்
மங்காமல் தந்தருளும் சூலத் துர்க்கை
மகிழ்அம்ச விநாயகரே! காப்பாய் அப்பா!

## ஒக்கூர் - 12.02.2012

தெ. சொக்கலிங்கம்

ஒக்கூர் தெற்கு வட்டகையைச் சேர்ந்தது. காரைக்குடியிலிருந்து கல்லல், செம்பனூர் வழியாக 30 கி.மீ. தொலைவில் உள்ளது. மொத்த புள்ளிகள் 190. இளையாத்தங்குடி, வயிரவன் கோவில், இலுப்பக்குடி ஆகிய கோவில் நகரத்தார்கள் வாழ்ந்து வருகிறார்கள். இவ்வூரில் நகரத்தாருக்குப் பொதுவான சசிவர்ண விநாயகர் கோவிலும், நாட்டார் நகரத்தாருக்குப் பொதுவான வெங்கலமுடைய ஐயனார் கோவிலும் உள்ளன. ஏழை காத்த அம்மன் என்ற பெயருடைய அம்மன் கோவில் ஒன்றும் உள்ளது. சி.க.அரு.சோமசுந்தரம் செட்டியார் தொடங்கிய சோமசுந்தரம் செட்டியார் தொடக்கப் பள்ளியும், மேல்நிலைப்பள்ளியும் செயல்பட்டு வருகின்றன.

ஒக்கூரில் சி.க.அரு.சோம.இராமநாதன் செட்டியார் ஸ்ரீ கண்ணாத்தாள் டெக்ஸ்டைல்ஸ் என்ற பெயரில் ஒரு நூற்பாலையும் மீனாட்சி நெசவாலை ஒன்றும் நிறுவி நடத்தி வருகிறார்கள்.

விநாயகர் கோவிலில் தை வெள்ளியில் நகரத்தார் வைக்கும் பொங்கலும், ஏழை காத்த அம்மன் கோவிலில் நாட்டாரும் நகரத்தாரும் இணைந்து நடத்தும் செவ்வாய்ப் பொங்கலும், சித்திரை மாதம் முதல் வெள்ளியில் நகரத்தார் பொதுவில் நடத்தும் மகேஸ்வர பூஜையும் இவ்வூரில் நடக்கும் விழாக்கள் ஆகும்.

மானாமதுரையில் ஒக்கூர் வெள்ளையன் செட்டியார் மேல்நிலைப்பள்ளியும் இவ்வூர் வெள்ளையன் செட்டியார் வழிமுறையினரால் நடத்தப்பட்டு வருகிறது.

இவ்வூரைச் சேர்ந்த சங்ககாலப்புலவர் ஒக்கூர் மாசாத்தியாருக்குத் தமிழக அரசு ஒரு நினைவுச்சின்னம் அமைத்துள்ளது. இவ்வூர் சி.க.அரு.சோம.ராமநாதன் செட்டியார் 1982-ல் தன் மணிவிழாவின்போது ஒக்கூர் மாசாத்தியாரின் 'கெடுக சிந்தை' என்னும் புறப்பாடலைக் கல்வெட்டாக வடித்து ஒக்கூரில் திருப்பத்தூர் - சிவகங்கை சாலையில் நிறுவியுள்ளது குறிப்பிடத்தக்கது.

**இவ்வூரைச் சேர்ந்தவர்கள் செய்த திருப்பணிகள்:**

1. சி.கரு., சி.சசி.கரு.சி.கரு. குடும்பத்தார் செய்த திருப்பணிகள்: சோழபுரம் அறம் வளர்த்த நாயகி உடனாய அருள்மொழி நாதர் கோயில்.

2. சி.கரு.சி.லெ.குடும்பத்தார் செய்த திருப்பணி பாம்பணி சிவன் கோவில் மற்றும் திருக்காளவாசல் தேவாரப் பாடசாலை.

3. சி.கரு.சி.சித.குடும்பத்தார் செய்த திருப்பணி மதுரையில் வேதபாடசாலை மற்றும் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆலயச் சுற்றுச் சுவர் திருப்பணி

ஸ்ரீலங்காவில் மாதம்பையில் ஒரு ஏக்கர் நிலத்தை நன்கொடையாக வழங்கி அங்கே ரூ.30,000/– செலவில் 'சரஸ்வதி வித்யாலயம்' என்ற பௌத்தமத பாடசாலையை சி.கரு.சி.கரு.சிந.கருப்பன் செட்டியார் 1950–ல் நிறுவியிருக்கிறார். அத்துடன் கட்டுநேரிய லஞ்சிகம என்ற இடத்தில் இருந்த முதியோர் இல்லம் ஒன்றிற்கும், ஆனந்தா கல்லூரி கட்டட நிதிக்கும் பெருந்தொகைகயை மேற்படியார் நன்கொடையாக வழங்கியுள்ளார். இவ்வூர் சி.க.அரு.க.அரு.சோமசுந்தரம் செட்டியார் இடமும் கட்டடமும் நன்கொடையாகக் கொடுக்க அதில் அரசு ஆயுர்வேத மருத்துவமனை செயல்பட்டு வருகிறது.

ஒக்கூர் விநாயகர் கோயிலில் திருவாசக முற்றோதல் அருசோ தலைமையில் காலை 9.30–க்கு துவங்கி மாலை 4.45–க்கு நிறைவுற்றது. மெய்யன்பர்கள் 85 பேர் கலந்து கொண்டனர். வரவேற்புரை வீர.சிந்தாமணி செட்டியாரும் நன்றியுரை சேக்கப்ப செட்டியாரும் நிகழ்த்தினார்கள். தெ.சொ., பழ.மா. வாழ்த்திப் பேசினர். திருவாசக முற்றோதல் இனிதே நிறைவுற்றது.



## 30. காளையார்மங்கலம் - 26.02.2012

### ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

கல்வியினால் உயர்ந்தின்று செல்வம் தோயும்
காளையார் மங்கலத்தில் கோயில் கொண்டு
வல்லவராய் நகரத்தார் வாழச் செய்யும்
வண்டமிழின் மீனாட்சி சுந்த ரேசா!
நல்லதொரு பொய்கையுடன் மரங்கள் சூழ
நாற்புறமும் வீடுகளும் மைதா னங்கள்!
சொல்லொண்ணா ஆற்றல்கள் பொழியும் எங்கள்
சுந்தரேசா! மீனாட்சி! அடிகள் காப்பு!

## காளையார் மங்கலம் - 26.02.2012

(தெ. சொக்கலிங்கம்)

இவ்வூர் தெற்கு வட்டகையைச் சேர்ந்தது. காரைக்குடியிலிருந்து 40 கி.மீ. தொலைவில் உள்ளது. ஒக்கூரிலிருந்து தென்கிழக்கே நான்கு கி.மீ. தொலைவில் உள்ளது. இளையாத்தங்குடி, வயிரவன்கோவில், சூரக்குடி ஆகிய கோவில்களைச் சேர்ந்த 159 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர்.

இங்குள்ள அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் கோவில் நகரத்தார்களுக்குப் பொதுவானது. 1920–ல் கட்டப்பட்டுப் பல குடமுழுக்குகளுக்குப் பின் 2006–ல் ஒரு நன்னீராட்டு விழா நடைபெற்றது. ஐயனார் கோவில், பூமாலை அம்மன் கோவில், சேவாத்தாள் கோவில், கருப்பையா கோவில், ஆகிய கோவில்கள் இவ்வூரில் உள்ளன. அத்துடன் மாரியம்மன் கோவில், கருமாரியம்மன் கோவில் என்று இரண்டு கோயில்கள் உள்ளன. அக்கோவில்களில் பங்குனிமாதம் காப்புக்கட்டி

பால்குடம், பூக்குழி என்று சிறப்பாக இருபிரிவினர் செய்து வருகிறார்கள். இவ்வூரில் உள்ள இரண்டு ஊருணிகளில் ஒன்று குடிநீர் ஊருணி. சித்திரை மாதம் கடைசி வெள்ளியில் நகரத்தார் பொங்கலும் தை மாதம் கடைசி வெள்ளியில் நாட்டாரும் நகரத்தாரும் கூடி பூமாலையம்மன் கோவிலில் நடத்தும் பூச்சொரிதல் விழாவும் இவ்வூரில் சிறப்புத் திருவிழாக்கள் ஆகும். இங்குள்ள சூரக்குடிக் கோவில் பங்காளிகள் உல.வ.வ. பொதுப்படைப்பை 3 ஆண்டுகட்கு ஒருமுறை படைத்து வருகின்றனர். உல.வ.வ. குடும்பத்தினர் குன்றக்குடியில் ஒரு விடுதி கட்டி நிருவகித்து வருகின்றனர். இவ்வூர் சூரக்குடிக் கோவில் பங்காளிகளில் ஒருவரான சித.சா. வள்ளியப்ப செட்டியார் I.N.A.-ல் பணியாற்றியவர். இவ்வூர் RM.சேதுநாராயணன் செட்டியார் அண்ணா மலைப் பல்கலைக்கழகத்தில் துணை வேந்தராக இருந்தவர்.

இவ்வூர் நகரத்தார் நன்கொடையுடன் தொடங்கப் பெற்ற அரசு மருத்துவமனை ஒன்று இயங்கி வருகிறது. மருத்துவமனை RM. சேதுநாராயணன் செட்டியார் முயற்சியால் கொண்டுவரப்பட்டது.

திருவாசக முற்றோதல் காளையார்மங்கலம் சிவன்கோவிலில் அருசோ தலைமையில் காலை 9.55 மணிக்குத் துவங்கி மாலை 4.15-க்கு நிறைவு பெற்றது. மெய்யன்பர்கள் 120 பேர் கலந்து கொண்டனர். வரவேற்புரை SRM கண்ணப்ப செட்டியாரும் நன்றியுரை கதி. ராமனாதன் செட்டியாரும் நிகழ்த்தினார்கள். தெ.சொ.பழ.மா., ஈப்போ.நா, சீனி. முத்தையா ஆகியோர் வாழ்த்திப் பேசினர். காளையார்மங்கலம் நகரத்தார்கள் நல்ல ஏற்பாடுகள் செய்திருந்தனர்.



## 31. நடராசபுரம் - 11.03.2012

### பர்வதவர்த்தினி சமேத இராமநாதசுவாமி துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

நடராச புரத்தினிலே நற்பொய்கை திருக்கோயில்
நகரத் தார்கள்
திடமாகச் செய்துள்ள திருப்பணிகள்! மூர்த்திகட்கு
வெள்ளி அங்கி!
நடமாடும் இராமநாதர் பர்வதவர்த் தினியோடு
நயந்து காக்க!
புடம்போட்ட நகரத்தார் பொருளோடும் அருளோடும்
பொலிந்து வாழ்க!

## நடராசபுரம் - 11.03.2012

(தெ. சொக்கலிங்கம்)

இவ்வூர் தெற்கு வட்டகையைச் சேர்ந்தது, காரைக்குடியிலிருந்து கல்லல் வழியாக 32 கி.மீ. தொலைவில் உள்ளது. பனங்குடியிலிருந்து வந்த நகரத்தார்கள் இணைந்து உருவாக்கிய ஊரே நடராசபுரம் என்பர். மொத்த புள்ளிகள் 170. இவ்வூரில் இளையாத்தங்குடி, வைரவன் கோவில், இலுப்பக்குடி, சூரக்குடி, மாத்தூர் ஆகிய 5 கோவில் நகரத்தார்கள் வாழ்ந்து வருகின்றனர்.

இவ்வூரில் பர்வதவர்த்தினி உடனாய இராமநாத சுவாமி கோவில் என்ற நகரச் சிவன் கோவில் உள்ளது. சிவன் கோவிலில் தை மாதம் லெட்சார்ச்சனை மற்றும் வருடாபிஷேகம் நடைபெறும். நகரத்தார் ஒரு பிள்ளையார் கோவிலையும் அதையொட்டி ஒரு குடிதண்ணீர் ஊருணியையும் அமைத்துள்ளனர். இது

தவிர 3 ஊருணிகள் உள்ளன. மிளகாய்ச்சாமி சமாதி ஒன்றும் அதனைச் சார்ந்த மடம் ஒன்றும் நகரத்தார் நிர்வாகத்தில் உள்ளன. மிளகாய்ச்சாமி மடத்தில் குருபூசை ஆடி மாதம் மூன்றாவது வெள்ளிக்கிழமை ஆண்டுதோறும் நடைபெறும்.

முரு.ராம. இராம குடும்பத்தார் இராமாயி நினைவு தொடக்கப்பள்ளி மற்றும் இராமசாமி செட்டியார் நினைவு உயர்நிலைப்பள்ளி ஆகியவற்றைக் கட்டி நிருவகித்து வருகின்றனர். இவ்வூரைச் சேர்ந்த டாக்டர் லெ.சிவ. சிவசுப்பிரமணியன் செட்டியார் தளவாய் புரத்தில் ஒரு காளியம்மன் கோவிலைக் கட்டி நிருவகித்து வருகிறார். இவ்வூர் தெப்பக்குளம் முத்து.உல.சுப. சுப்பிரமணியன் செட்டியாரால் அமைக்கப்பெற்றது. இவ்வூர் முரு.இராம.இராம குடும்பத்தார் அருகில் உள்ள திருத்திப்பட்டி, புரச்சான்குளம் ஆகிய சிற்றூர்களில் ஊருணிகள் அமைத்துக் கொடுத்துள்ளனர்.

இவ்வூரில் திருவாசக முற்றோதல் 11.3.12. அருசோ தலைமையில் நடைபெற்றது. வரவேற்புரை: வி. சுப்பையா டிரஸ்டி, நன்றியுரை: RM. சோமசுந்தரம், கலந்து கொண்டவர்கள்: 103 பேர்



## 32. பனங்குடி - 22.12.2014

### ஸ்ரீ பெரியநாயகி துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

நகரத் தாரும் நாட்டாரும்
நாளும் போற்றி நலமாக
உகப்பாய் வணங்கும் பனங்குடியின்
உயிரே! பெரிய நாயகியே!
மகவாய், தாயாய்த் தினந்தோறும்
மாண்பாய்க் காத்து வளம்தந்து
தகவாய்ப் புள்ளி அத்தனையும்
தழைத்தே ஓங்க அருளுகவே!

## பனங்குடி - 22.12.2014

(தெ. சொக்கலிங்கம்)

தெற்கு வட்டகை, காரைக்குடியிலிருந்து 34 கி.மீ. தொலைவு. இலுப்பக்குடி, வைரவன் கோவில், சூரக்குடி, இளையாத்தங்குடி (பட்டினசாமி) ஆகிய 4 கோவில்களைச் சேர்ந்த 27 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர்.

இவ்வூரில் சிவன் கோவில் இல்லை. நாட்டார் நகரத்தாரால் திருப்பணி செய்யப்பெற்று நகரத்தார் நிர்வாகத்தில் இருக்கும் பெரிய நாயகி அம்மன் கோவிலும் தனிப்பட்ட நகரத்தார் குடும்பங்கள் கட்டிய பிள்ளையார் கோவிலும் உள்ளன. ஒரு குடிதண்ணீர் ஊருணி உள்ளது. அம்மன் கோவிலில் ஆனிமாதம் தேர்த்திருவிழா நடைபெறுகிறது. நவராத்திரியின்போது 3 நாட்கள் நகரத்தார்கள் இலட்சார்ச்சனை நடத்து கின்றனர். ஆண்டுதோறும் தைமாதம் இரண்டாவது செவ்வாய்க்கிழமை அன்று நகரத்தார்கள் செவ்வாய்ப்

பொங்கல் வைக்கின்றனர். அம்மன் கோவிலின் அலங்கார மண்டபம் நாட்டரசன்கோட்டையைச் சேர்ந்த பெரி.மு.அரு. கண்ணப்பசெட்டியாரால் கட்டப்பெற்றது. இவ்வூரைச் சேர்ந்த கா.க.கா.க. இராம.இராமநாதன் செட்டியார் அவர்கள் அம்மன் கோவிலில் நந்தவனம் ஒன்றை அமைத்துப் பூசைக்கு மலர் அளித்து வருகிறார்கள். இக்கோவிலில் 22.12.14ல் அருசோ தலைமையில் காலை 9.30 மணிக்கு திருவாசகம் முற்றோதல் தொடங்கி மாலை 4.30 மணிக்கு நிறைவடைந்தது.



# 33. பாகனேரி - 25.03.2012

## பாகனேரி கருணாகடாட்சி சமேத ஸ்ரீ திருநீலகண்டேஸ்வரர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

தாய்நாட்டுப் பற்றாலே தியாகம் செய்து
தாய்மொழியின் பற்றாலே நூலும் தந்து
தாய்சமயப் பற்றாலே தேரும் தந்து
தன்னிகரில் காசிக்கும் நடந்து சென்று
தோய்ந்திருந்தே அறம்வளர்க்கும் கருணா கடாட்சி
துணையான திருநீல கண்டேஸ் வரரின்
சேய்களெனும் நகரத்தார் நாட்டார் வாழ்க!
திருநீல கண்டேசர் திருத்தாள் போற்றி!

## பாகனேரி - 25.03.2012

(தெ. சொக்கலிங்கம்)

*தெற்கு வட்டகை, காரைக்குடியிலிருந்து கல்லல் வழியாக 30 கி.மீ; மொத்தபுள்ளிகள்: 493 1. இளையாத் தங்குடி கழனிவாசல், 2. மாத்தூர், மணலூர், கருப்பூர் 3. வைரவன் கோயில், 4. சூரக்குடி, 5. பிள்ளையார்பட்டி கோயிலைச் சேர்ந்த நகரத்தார்கள் வாழ்ந்து வருகின்றனர்.*

*பாண்டியர் காலத்தில் கட்டப்பெற்ற கருணாகடாட்சி அம்மை உடனாய நீலகண்டேஸ்வரர் கோயில் சிவகங்கை அரச குடும்பத்திற்கு உரியது. இப்போது நகரத்தார்களால் நிருவகிக்கப்படுகிறது. நகரத்தார் 1935-ல் திருப்பணி செய்த விண்ண வண்ணப்பெருமாள் கோயிலும் சிவகங்கை அரச குடும்பத்திற்கு உரியதே. இப்போது நகரத்தார் நிருவாகத்தில் உள்ளது. சிவகங்கை அரச*

12

குடும்பத்திற்கு உரிய புல்வநாயகி அம்மன் கோயிலுக்கு நகரத்தார் குடமுழுக்குச் செய்து வைத்தார்கள்.

மாத்தூர் மணலூர் நகரத்தார்களால் கட்டி நிருவகிக்கப்படும் பாண்டி விநாயகர் கோவில் பெரி.அழ.மு. குடும்பத்தாரால் கட்டபெற்று, சுப.வே. மாணிக்கம் செட்டியாரால் புதுப்பிக்கப்பெற்றது. அன்னதான செல்வவிநாயகர் கோயில் ஆகிய கோயில்களும் அவற்றைச் சார்ந்த ஊருணிகளும் இங்கே உள்ளன.

புல்வநாயகி அம்மனுக்கு ஆனிமாதம் நடைபெறும் தேர்த்திருவிழாவும் அதனையொட்டி நடைபெறும் மஞ்சுவிரட்டும் இவ்வூரின் பெரிய திருவிழாக்களாகும். நகரத்தார் அனைவரும் சேர்ந்து ஆடி மாதம் முதல் வெள்ளியன்று மகேசுவர பூசை, தை மாதம் முதல் செவ்வாய் அன்று புல்வநாயகி அம்மன் கோயிலில் செவ்வாய்ப் பொங்கல் நடத்துகின்றனர். பிள்ளையார் நோன்பன்று அனைவரும் சிவன் கோவிலில் பொதுவாக இழை எடுத்துக் கொள்வது வழக்கம். இவ்வூர் பெரி.அழ.முத்துக்கருப்பன் செட்டியார் மகளும் ஒக்கூரில் வாழ்க்கைப்பட்ட வருமான தெய்வானை ஆச்சி, இடமும் கட்டடமும் நன்கொடையாகக் கொடுத்து, தெய்வானை ஆச்சி அரசினர் மகளிர் உயர்நிலைப் பள்ளி 1962–ல் தொடங்கப்பெற்று நடைபெற்று வருகிறது.

கண.அருணாசலம் செட்டியார் இடமும் கட்டடமும் நன்கொடையாகக் கொடுக்க இவ்வூரில் கண. அருணாசலம் செட்டியார் அரசினர் மருத்துவமனை 1980–ல் இருந்து இயங்கி வருகிறது. பெரி.அழ.மு. குடும்பத்தார் 15 லட்சம் செலவில் தனியாக ஒரு மருத்துவமனை கட்டியிருக்கிறார்கள்.

இவ்வூர் பழையவளவு, புதுவளவு என்ற இருபகுதி களை உடையது. பழைய வளவில் ஒரு நகரத்தார் மடமும் புதுவளவில் ஒரு நகரத்தார் மாளிகையும் இருக்கின்றன. மாத்தூர் மணலூர் நகரத்தாருக்குரிய குருபூசை மடம் ஒன்றும் உள்ளது.

சிவன் கோவிலின் முன் மண்டபத்தை குப்பான் செட்டியார் குடும்பத்தாரும், அம்மன் கோவில் முன் மண்டபத்தை திருமுறைக்காவலர் இராம. முத்துப் பழநியப்ப செட்டியாரும் கட்டிக் கொடுத்துள்ளனர்.

புல்வநாயகி அம்மன் கோயிலுக்குள் அக்னி ஆத்தாள் என்ற பெயரில் நகரத்தார் முன்னோர் ஒருவருக்கு வழிபாடு நடைபெறுகிறது. அக்னி ஆத்தாளைக் காரைக்குடி கருத்தான் செட்டியார் வீட்டைச் சேர்ந்தவர்களும், முத்த வெ.சொ, அபிசீனியா நாவன்னா வகைப் பங்காளிகளும், கண்டனூர், ஆத்தங்குடியைச் சேர்ந்த பிள்ளையார்பட்டிக் கோவில் பங்காளிகளும் வழிபடுகின்றனர். மேற்படியார்களுக்குச் சொந்தமான விடுதியொன்று அம்மன் கோயில் பின்புறம் உள்ளது.

இவ்வூர் நகரத்தார் பனங்குடியில் ஒரு பிள்ளையார் கோயிலும் ஊருணியும் கட்டியுள்ளனர். இவ்வூரைச் சேர்ந்த சுப.வே.மா.தியாகராாசன் செட்டியார் மதுரையை அடுத்த வில்லாபுரத்தில் ஒரு பிள்ளையார் கோயிலைக் கட்டி நிருவகித்து வருகிறார். இவ்வூர் பெரி.அழ.மு. குடும்பத்தார் வேதாரணியத்தில் ஒரு வேதபாடசாலை நடத்தி வந்தனர்.

இவ்வூர்ப் புல்வநாயகி அம்மன் கோவில் திருத்தேர் வெள்ளோட்ட விழாவில் காசிஸ்ரீ அருசோ. உள்ளூர்

டிரஸ்டி கிருஷ்ணன் செட்டியார் அழைப்பின்பேரில் கலந்து கொண்டு வாழ்த்துரை வழங்கினார். பிறகு இவ்வூரில் மழை வறண்ட பொழுது முத்துப்பழநியப்ப செட்டியார் மற்றும் கண்ணப்பன் ஏற்பாட்டில் காசிஸ்ரீ அருசோ மூன்று நாட்கள் மகாபாரதம் விராட பருவம் தொடர் சொற்பொழிவு ஆற்றினார். மழை பெய்தது.

இங்கு திருவாசக முற்றோதல் அருசோ தலைமையில் 25.03.2012ல் நடைபெற்றது. கலந்து கொண்டவர்கள்: 117 பேர்
வரவேற்புரை, நன்றியுரை: மாதவன் செட்டியார்



## 34. மதகுபட்டி - 08.04.2012

### ஸ்ரீ மீனாட்சி சொக்கலிங்கர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

அழகான சிற்றூராம் மதகு பட்டி
அற்புதமாய் எழுந்துள்ள இனிய கோவில்
பழகுதற்குப் பேரன்பால் அணுகு கின்ற
பழமான மதகுபட்டி மக்கள் போற்றும்
அழகுமிகு மீனாட்சி சொக்க லிங்கர்
அனைவர்க்கும் தினந்தோறும் அருள்பா லிக்கும்
குழகர் இவர்! தேவாரம் திருவா சகங்கள்
கும்பிட்டுப் பாடிடுவோம் காப்பார் நன்றே!

## மதகுபட்டி - 08.04.2012

(தெ. சொக்கலிங்கம் பாடியது)

நகரத்தார் முயற்சியிலே உருவான சிற்றூர்.
மதகுபட்டி என்னும் வளமார்ந்த சிற்றூர்.
நகரத்தார் நற்பணியில் உருவான திருக்கோயில்
மீனாட்சி, சொக்கலிங்கர் வீற்றிருக்கும் நற்கோயில்
மிக்கபுகழ் சொக்கலிங்கர் மீனாட்சி உடனிருந்து
தக்கவழி காட்டுகிறார், தனவளத்தைக் கூட்டுகிறார்
சொக்கலிங்கர் அருளாலே தூயமன நகரத்தார்
மிக்க நலம்பெற்று மேன்மையுடன் வாழியவே!

## 34. மதகுபட்டி - 08.04.2012

(தெ. சொக்கலிங்கம்)

இவ்வூர் தெற்கு வட்டகையைச் சேர்ந்தது. காரைக்குடியில் இருந்து கல்லல் வழியாக 35 கி.மீ. தொலைவு.

இவ்வூருக்கு சொக்கலிங்கபுரம் என்ற பெயரும் வழங்குகிறது.

1. இளையாற்றங்குடி பேரசெந்தூருடையார், கழனிவாசல் பிரிவினரும்,
2. மாத்தூர் கருப்பூர் உறையூர், அரும்பாக்கூர்,
3. வயிரவன் கோயில் ஆகிய மூன்று கோயில்களைச் சேர்ந்த 182 புள்ளிகள் வாழ்ந்து வருகின்றனர். இவ்வூரில் மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோயில் என்ற சிவாலயம் உள்ளது. 1935–ல் திருப்பணி முடிந்து குடமுழுக்குச் செய்யப்பெற்ற இக்கோயிலுக்கு 1979, 1995, 6.6.2008–ல் திருக்குட நன்னீராட்டு நிகழ்ந்தது. மதுரை மாவட்டத்தில் உள்ள அழகிச்சிப்பட்டி, கொட்டாணிப்பட்டி, உறங்கான்பட்டி ஆகிய ஊர்களில் வாழ்ந்துவந்த நகரத்தார்கள் ஒன்று சேர்ந்து 1902–ல் இவ்வூரை உருவாக்கினர். அதற்கு காரணகர்த்தா காங்கிரஸ் வேலாயுதஞ்செட்டியார் என்று மதகுபட்டி சொக்கலிங்கர் கோயில் குடமுழுக்கு விழா மலர் கூறுகிறது.

இவ்வூரில் சீனிவாசப் பெருமாள் கோயில், மாணிக்க விநாயகர் கோயில், தருளுதாளைக் காளி அம்மன் கோயில் ஆகியவையும் உள்ளன. ஆண்டிற்கு ஒருமுறை வல்லடியார் கோவில் திருவிழாவில் வெள்ளிக்கிழமை பொங்கல் வைப்பதும், ஆண்டுதோறும் சித்திரை 2–வது செவ்வாய் நாள் வைத்து மூன்றாவது செவ்வாய் பொங்கல் வைப்பதும் நகரத்தார் பங்கேற்கும் திருவிழாக்களாகும். மாத்தூர் அரும்பாக்கூர் பிரிவைச் சேர்ந்த உல.செ.சு.இராம. இராமசாமி செட்டியார் குடும்பத்தாரால் 1950–ல் தொடங்கப்பெற்ற கற்பகமாதா

நடுநிலைப்பள்ளி. இவ்வூரில் இயங்கி வருகிறது. இவ்வூரில் உள்ள அரசு சித்த மருத்துவமனைக்கு இளையாற்றங்குடி பேரசெந்தூருடையார் பிரிவைச் சேர்ந்த சுப.கண.சுப.மு. வள்ளியம்மை ஆச்சி இடமும் கட்டடமும் நன்கொடையாக வழங்கியுள்ளார். தமிழ்ப்புத்தகாலயம் கண. முத்தையா செட்டியார், க.வே. அரங்கநாதன் செட்டியார், சுப.சுப.லெட்சுமணன் செட்டியார் ஆகியோர் இ.தே.ராவில் (I.N.A) பணியாற்றியவர்கள் ஆவர்.

கல்வித்தந்தை டாக்டர். இலட்சுமணன் (SML), இந்த ஊரைச் சேர்ந்தவர். தையல் நாயகி ஆச்சி நினைவு இலவச மருத்துவமனை பிப்ரவரி 2006-ல் தொடங்கி, எல்லோருக்கும் மருத்துவம், கிராம நலம் பேணுவோம் என்ற கொள்கையில் சிறப்புடன் நடைபெறுகிறது. இந்த உதவியைச் செய்தவர் அழபெரி. அழ.ரெங்கநாதன் செட்டியார் மகன் திருநாவுக்கரசு அவர்கள் (வைரவன் கோயில்). AL.R. கல்யாண மண்டபம் பிப்ரவரி 2000-ல் துவங்கி சமத்துவம், சகோதரத்துவம் என்ற முறையில் எல்லோருக்கும் இலவசமாக நிகழ்ச்சிகளை நடத்திக் கொள்ள ரெ.திருநாவுக்கரசு அவர்கள் மனமுவந்து இசைந்துள்ளார்கள். 2001 முதல் 2006 வரை ஊராட்சி மன்றத் தலைவராக திருமதி தையல் நாயகி ராமனாதன் சேவை செய்தார்கள்.

2006 முதல் 2011 முடிய சுப.லெ.இராம.நாராயணன் ஊராட்சி மன்றத் துணைத்தலைவராகச் சேவை செய்தார்கள்.

இங்கு திருவாசகம் முற்றோதல் 8.4.12ல் அருசோ தலைமையில் நிகழ்ந்தது. முற்றோதல் நேரம்: காலை 10.00 முதல் மாலை 5.00 வரை, கலந்து கொண்டவர்கள்: 91, வரவேற்பு உரை: பேராசிரியர் இராம. இராமநாதன், நன்றியுரை: கா.வைத்தியநாதன்.



## 35. அலவாக்கோட்டை - 22.04.2012

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

1. உத்தமர்கள் சான்றோர்கள் நிறைந்த ஊராம்
உயர் அலவாக் கோட்டையிலே நகரத் தார்கள்
சித்தமெலாம் சிவன்பாலே வைத்துவாழும்
செந்தமிழின் நெறியாலே சீர்மிக் கோங்கிப்
பக்தியுடன் திகழ்கின்றார் மீனாட் சிக்குப்
பணிந்தென்றும் தொண்டாற்றும் பாங்கி னாலே
நித்தமுமே திருவருளால் செழிப்புற் றோங்க
நேர்த்தியினை மீனாட்சி அருள்வாய் அம்மா!

2. அண்மையிலே தோன்றிய ஊர் அலவாக் கோட்டை
அருள்பொழியும் மீனாட்சி சொக்க லிங்கர்
திண்ணமுடன நகரத்தார் மக்கள் எல்லாம்
திரவியமாய்ப் போற்றுகிற பக்தி யாலே
வண்ணமுடன் எழுந்தருளி அனைவ ருக்கும்
வரமருளிக் காக்கின்ற சொக்க நாதா!
எண்ணமெலாம் நீயேஆய் இருக்கும் மக்கள்
எல்லோர்க்கும் அருள்புரிய எழுந்து வாவா!

## அலவாக்கோட்டை - 22.04.2012

(தெ. சொக்கலிங்கம்)

தெற்கு வட்டகை. காரைக்குடியிலிருந்து கல்லல், மதகு பட்டி வழியாக 35 கி.மீ. தொலைவு. மொத்தப்புள்ளிகள்: 293 மாத்தூர், வைரவன் கோயில் இலுப்பைக்குடி, பிள்ளையார்பட்டி ஆகிய 4 கோவில் நகரத்தார்கள் வாழ்ந்து வருகிறார்கள். மீனாட்சி சொக்கலிங்கர் கோயில். சீனிவாசப்பெருமாள் கோயில் ஆகிய இரண்டு கோவில்கள் உள்ளன. சீனிவாசப்பெருமாள் கோவிலை

பி.நா.குடும்பத்தார்கள் நிருவகித்து வருகின்றனர். சிவன் கோயில் முதன் முதலாக 1924-ல் குடமுழுக்கு செய்யப்பட்டது. பி.நா.குடும்பத்தினர் சீனிவாசபெருமாள் கோவில்கட்டி 1909-ல் குடமுழுக்கு செய்யப்பட்டது. பின்னர் 1941-ல் செய்யப்பட்டது. இக்குடும்பத்தினர் லெட்சுமி விநாயகர் கோயில் ஒன்றையும் கட்டி நிருவகித்து வருகின்றனர். இலுப்பக்குடி நகரத்தார் சுப்பிரமணிய சுவாமி கோயில் கட்டி நிருவகிக்கிறார்கள். குடிதண்ணீர் உள்ளிட்ட ஊருணிகள் உள்ளன. நகரமடம் உள்ளது. அதில் நகரத்தார் ஆடிமாதம் முதல் வெள்ளிக் கிழமை அன்று மகேசுவர பூசை நடத்தி வருகின்றனர். செம்புசாமி மடம் ஒன்று உள்ளது. அதில் ஐப்பசி மாதம் குருபூசை நிகழ்கிறது. மாத்தூர், உறையூர்ப் பங்காளிகள் நாச்சாத்தாள் படைப்பினை தங்களுக்குரிய பொதுப் படைப்பாக படைத்து வருகின்றனர். இவ்வூரில் நா.சுப்பிர மணியன் செட்டியார் அவர்களால் நாராயணன் செட்டியார் தொடக்கப்பள்ளியும், பாகனேரியைச் சேர்ந்த திருமுறைக் காவலர் இராம.முத்துப் பழநியப்ப செட்டி யாரால் ஒரு மருத்துவமனையும் நடத்தப்பெறுகின்றன.

அறுபத்து மூவர் மடம் ஒன்று சிவனேசச் செல்வர் திரு. சிதம்பரம் செட்டியார் அவர்களால் கட்டப்பெற்று, இன்றைய நிர்வாகம் அவர்கள் பேரன் திரு.கருப்பையா செட்டியார் அவர்களால் சிறப்புற நடைபெற்று வருகிறது. நால்வர் குருபூசை வருடம் தோறும் நடைபெற்று வருகிறது.

இங்கு திருவாசகம் முற்றோதல் 22.4.2012ல் நடைபெற்றது. வரவேற்புரை: பி.ராம. ராமசாமி செட்டியார், நன்றியுரை: அரு. லெட்சுமணன் செட்டியார், கலந்து கொண்டவர்கள்: 96



## 36. சொக்கநாதபுரம் - 13.05.2012

### தேன்மொழியாள் திருக்கண்டீசர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

தேன்மொழியாள் உடனாய திருக்கண் டீசர்
திருக்கோவில் வலம் வந்தால் திரவி யங்கள்
நான்என்று முன்வந்து நடுவில் நிற்கும்!
நலமோடு வளம்யாவும் தாமே கூடும்!
யான்என்னும் செருக்கின்றி எனதும் இன்றி
எல்லோர்க்கும் உழைக்கின்ற நகரத் தார்க்குத்
தானாக முன்வருவான் சொக்க நாதன்!
தமிழாலே பரவுகிறோம் காப்பாய் அப்பா!

## சொக்கநாதபுரம் - 13.05.2012

(தெ. சொக்கலிங்கம்)

தெற்கு வட்டகை, காரைக்குடியில் இருந்து கல்லல் வழியாக 32 கி.மீ. தொலைவு. இளையாத்தங்குடி, மாத்தூர், பிள்ளையார்பட்டி ஆகிய 3 கோயில் நகரத்தார்கள் வாழ்ந்து வருகின்றனர். மொத்த புள்ளிகள் 301. நகரத்தாருக்குரிய பொதுக் கோவிலாகக் கற்பக விநாயகர் கோவில் இவ்வூரில் உள்ளது. சிவகங்கை மன்னர் குடும்ப அறநிலையத்திற்குச் சொந்தமான சிறுதேன்மொழியம்மை – திருக்கண்டீசர் கோயில் என்ற சிவன் கோவிலும் இவ்வூரில் உள்ளது. இத்திருப்பணியை நகரத்தார்கள் செய்துள்ளனர். இறைவன் சன்னதி மேற்குப் பார்த்து அமைந்துள்ளது. சிவன் கோவில் ஊருணி நகரத்தார்கள் உருவாக்கியது. நகரத்தார்

மடத்தில் ஆண்டுதோறும் ஆடிமாதம் முதல் திங்கட்கிழமை வேற்பூசை நடைபெறுகிறது. இளையாத்தங்குடி பட்டினசாமிப்பிரிவைச் சார்ந்த நகரத்தார் இல்லத்தில் (கீழவீடு) ஆண்டுதோறும் புரட்டாசி மாதம் 10 நாட்கள் இராமாயணம் படிக்கிறார்கள். அருள்மிகு சேவுகப் பெருமாள் ஐயனார், அருள்மிகு தொட்டியத்து கருப்பர் கோவில் இரண்டும் மாத்தூர் மணலூர் பிரிவைச் சேர்ந்த ஏழு ஊர் நகரத்தார்களின் குலதெய்வக் கோயிலாக உள்ளன. விரைவில் கும்பாபிஷேகம் நடைபெற உள்ளது.

இங்கு சிவன்கோவிலில் திருவாசகம் முற்றோதல் 13.5.12ல் அருசோ தலைமையில் நிகழ்ந்தது. நேரம் : காலை 9.15 முதல் மாலை 4.30 வரை, இடம் : சிவன் கோவில், கலந்து கொண்டவர்கள்: 105 பேர், நன்றியுரை : சோம. விஸ்வநாதன் செட்டியார்



## 37. செம்பனூர் - 27.05.2012

### ஸ்ரீநித்ய கல்யாணி சமேத
### ஸ்ரீகண்டீஸ்வரர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

ஒரு கோயில் புள்ளிகளாம் நேமம் கோயில்
உத்தமராம் செம்பனூர் நகரத் தாரின்
திருமிக்க கண்டீசர் நித்ய கல்யாணி
திருக்கோவில் வலம்வந்தோர் செல்வத் தோடு
பெரும்புகழும் பதினாறு பேறும் பெற்றுப்
பேருலகில் வளத்தோடு செழித்து வாழ்வர்
திருவருளும் குருவருளும் தினமும் சேரும்
செம்பனூர்க் கண்டீசா! காப்பாய் அப்பா!

## செம்பனூர் - 27.05.2012

(தெ. சொக்கலிங்கம்)

தெற்கு வட்டகையைச் சேர்ந்தது. காரைக்குடியில் இருந்து கல்லல் வழியாக 23 கி.மீ. இவ்வூரில் நேமங் கோயிலைச் சேர்ந்த 120 புள்ளிகள் வாழ்ந்து வருகின்றனர்.

பழைமையானதும் சிவகங்கை அரச குடும்பத்துக்கு உரியதுமான நித்யகல்யாணி அம்பாள் உடனாய கண்டீசர் கோவிலை இவ்வூர் கும.நா.குடும்பத்தார் திருப்பணி செய்து 27.04.1902-ல் குடமுழுக்குச் செய்தனர். இப்போது இக்குடும்பத்தின் வழிவந்த கும.நா.சுப.நா.ராம.சுப்பிரமணியன் செட்டியாரையே சிவகங்கை அறநிலையம் இக்கோவிலின் நிர்வாக அறங்காவலராக ஆக்கியுள்ளது. நகரத்தாரால்

கட்டப்பெற்று கும.நா.நா.சா.நா. குடும்பத்தாரால் நிருவகிக்கப்பெற்று வரும் ஐநூற்றீஸ்வரர் விநாயகர் கோவிலும் ஊர்ப் பொதுக் கோவிலான முத்து நாச்சியம்மன் கோவிலும் இவ்வூர் நகரத்தாராலும் தேவ கோட்டை மெ.லெ.மெ.இராமநாதன் செட்டியாராலும் கட்டப்பெற்ற சுந்தரராசப் பெருமாள் கோவிலும் இவ்வூரில் உள்ளன. ஒரு குடிதண்ணீர் ஊருணி உள்ளது. சுப.கா.காசிவிஸ்வநாதன் செட்டியார் நன்கொடையாக வழங்கிய இடம், கட்டடத்தில் மெய்யம்மை காசி கழக உயர்நிலைப் பள்ளியையும், கும.நா.நா.சா.நா. குடும்பத்தார் நன்கொடையாக வழங்கிய இடம், கட்டடத்தில் ஆரம்ப சுகாதார நிலையத்தையும் ஊராட்சி மன்றம் நடத்தி வருகிறது. செம்பனூர், கல்லல், நேமம் கோவில் பங்காளிகள் 4 ஆண்டுகட்கு ஒருமுறை செம்பனூரில் கூடித் தீப்பாய்ந்த அம்மன் படைப்பை 7 நாள் பொதுப்படைப்பாகப் படைத்து வருகின்றனர்.

இங்கு சிவன் கோவிலில் அருசோ தலைமையில் நிகழ்ந்த திருவாசக முற்றோதல் விழாவில் கலந்து கொண்டவர்கள் : 84 பேர், வரவேற்புரை : ராம. சுப்பிரமணியன் செட்டியார், நேரம்: காலை 9.30 முதல் மாலை 4.30 மணி வரை.



## 38. மானகிரி - 10.06.2012

### மானகிரி நகரச் சிவன் கோவில் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

1. தனம் பொலியும் மானகிரி நகரக் கோவில்
தனபுவன கங்காபு ரீஸ்வ ரற்கும்
குணமார்ந்த சுகந்த பரி மளசுந் தரிக்கும்
கோவிலினைச் சிறப்பாகக் கட்டி உள்ளார்
மணம்பெறவே தம்பதியாம் நவக்கிர கங்கள்
மகிமையினைக் காட்டுகிற தலம் ஈ தாகும்!
சினம் அகன்ற திருமுருகன் வள்ளி தெய்வ
யானையுடன் திருவருளைப் பொலியும் திருவேல்!

2. இக்கோவில் வலம் வந்தோர் எழுச்சி கொள்வர்
ஈறெட்டுப் பேறுகளும் எய்து வார்கள்
கற்கோவில் முருகனது சந்நிதானம்!
கலையம்ச மண்டபங்கள் சூழும் கோவில்
நற்காலம் மானகிரி மேரு கிரியாய்
நதியான கங்கை போல் செழிப்ப தாக!
சொற்கோலம் வாசகங்கள் பாடி நித்தம்
சுவாமியினைத் தொழுதிடுவோம் வணக்கம் காப்பு!

## 38. மானகிரி - 10.06.2012

(தெ. சொக்கலிங்கம்)

*16 ஊர் வட்டகை, காரைக்குடியிலிருந்து 6.கி.மீ. இளையாற்றங்குடி, மாத்தூர், வைரவன் கோவில், இலுப்பக்குடி 4 கோவில்களைச் சேர்ந்த நகரத்தார் வாழ்ந்து வருகிறார்கள். மொத்தபுள்ளிகள் 93 உள்ளார்கள்.*

சுப்பிரமணிய சுவாமிகோவில் நகரத்தார் பொது. ஆண்டுதோறும் வைகாசி மாதம் கடைசி வெள்ளியன்று மகேசுவரபூசை. இக்கோவிலில் நவக்கிரகங்கள் கல்யாணக் கோலத்தில் தம்பதிகளாக அமைந்துள்ளன. சனிப்பெயர்ச்சி விசேடமாக கொண்டாடப்படுகிறது. சக்தி விநாயகர் கோவில் நகரத்தார் பொது. தளக்காவூர் அதள நாயகி அம்மன் கோவில் திருப்பணி லெ.அரு.லெ.குடும்பத்தாரால் செய்யப்பட்டது. 8 நாள் திருவிழா சிறப்பாக நடைபெறுகிறது. லெ.அருணாசலம் செட்டியார் அவர்களால் 1928-ல் தொடங்கப்பெற்று, அவர்தம் வழிமுறையினரால் நிருவகிக்கப்பெற்று வரும் லெ.அரு.நடுநிலைப் பள்ளி இவ்வூரில் இயங்கி வருகிறது. இ.ராம க.இராமசாமி செட்டியாரால் கட்டப்பெற்ற மகப்பேறு மருத்துவமனை ஒன்றும் உள்ளது. சுப்பிரமணிய சுவாமி கோவிலில் புரட்டாசி மாதம் இராமாயணம் படிக்கப்படுகிறது. ஆண்டுதோறும் ஆடிமாதம் மூன்றாவது புதன்கிழமை தேனாத்தாள் படைப்பு படைக்கப்படுகிறது. இவ்வூர் லெ.அரு குடும்பத்தார் கிரிவலம் வந்த நல்லூரில் ஒரு சிவன் கோவிலும் அக்கோவிலுக்கு என ஒரு பசு மடமும் கட்டி உள்ளனர். எட்டுக் குடியில் பசுமடம அமைத்து லெ.அரு. குடும்பம், கிரிவலம் வந்த நல்லூர் பால்வண்ண நாதர் – ஒப்பனையம்பாள் லெ.அரு. குடும்பம் உபயம்.

இங்கு திருவாசக முற்றோதல் அருசோ தலைமையில் 10.6.2012ல் நிகழ்ந்தது. வரவேற்புரை : லெ. சண்முகம் செட்டியார், நன்றியுரை : கவிஞர் கனவுதாசன், கலந்து கொண்டவர்கள் : 121 பேர்



## 39. நாச்சியாபுரம் - 24.06.2012

### நாச்சியாபுரம் ஸ்ரீநாச்சியாரம்மன் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

நகரத்தைக் காக்கின்ற நாச்சி யாரே!
நாடெல்லாம் காத்துமழை பொழிய வேண்டும்
சிகரத்தில் தாய்நாடு பொலிய வேண்டும்
செந்தமிழும் உயர்ந்தோங்கிச் செழிக்க வேண்டும்
அகரத்தில் தொடங்குகின்ற மொழியைப் போலுன்
அடிகளிலே பிரபஞ்சம் தொடங்கு தம்மா!
நகரத்தார் போற்றுகிற நாச்சி யாரே!
நயனத்தால் அருள்பொழிந்து காப்பாய் அம்மா!

## நாச்சியாபுரம் - 24.06.2012

(தெ. சொக்கலிங்கம்)

*பதினாறூர் வட்டகை. காரைக்குடியில் இருந்து 13 கி.மீ. இளையாற்றங்குடி, வைரவன் கோயில், இலுப்பக்குடி பிள்ளையார்பட்டி ஆகிய 4 கோவில்களைச் சேர்ந்த நகரத்தார் வாழ்ந்து வருகின்றனர். மொத்தப்புள்ளிகள்: 362, நாச்சியாரம்மன் கோவில் நகரப்பொதுக் கோவில். சித்திரைத் திருவிழாவும் நவராத்திரித் திருவிழாவும் கொண்டாடப்படுகின்றன. இலுப்பைக்குடியைச் சேர்ந்த சுப.ராம.ராம. குடும்பத்தார் உமா மகேஸ்வரர் கோயிலைக் கட்டியுள்ளனர். பிள்ளையார்பட்டிக் கோவிலாரான பெரி.மெ. கருப்பஞ்செட்டியாரால் கட்டப்பட்ட பிள்ளையார் கோவில், தண்டாயுதபாணி கோவில் ஆகியவை சிறிது காலம் நடுவிக்கோட்டையார் வீட்டு நிருவாகத்தில் இருந்து பின்னர் நகரப்பொதுவில் ஒப்படைக்கப்பட்டது. தண்டாயுதபாணி கோவிலில் ஆடிக் கடைசி வெள்ளியன்று மகேஸ்வரபூசை*

நடைபெறுகிறது. அம்மன் கோவில் ஊருணி பழ.கண. குடும்பத்தார் நிருவாகத்தில் உள்ளது. இதனைப் பழைய ஊருணி என்றும் சிவன் கோவில் ஊருணியை புது ஊருணி என்றும் அழைக்கின்றனர்.

இவ்வூரில் ஜெயங்கொண்ட விநாயகர் உயர்நிலைப் பள்ளி உள்ளது. இதனை 1966-ல் காசிஸ்ரீ அருசோ தொடக்கி வைத்து ஆசி கூறியது குறிப்பிடத்தக்கது. இவ்வூரைச் சேர்ந்த நா.பழநியப்பன் 'ஆச்சி வந்தாச்சு' பத்திரிகை சிறப்பாக நடத்துகிறார்.

80 ஆண்டுகள் பழைமை வாய்ந்த ஜெயங்கொண்ட விநாயகர் தொடக்கப்பள்ளியும், 43 ஆண்டுகளாக மேற்படி உயர்நிலைப்பள்ளியும் நகரத்தார் பொது நிருவாகத்தில் இயங்குகின்றன. சு.வி.நா. குடும்பத்தாரால் இடமும் கட்டடமும் நன்கொடையாக வழங்கப்பட்ட மருத்துவமனை ஊராட்சி ஒன்றிய நிருவாகத்தில் உள்ளது. இவ்வூரைச் சேர்ந்த நா.மு.வ. ஜெய்ஹிந்த் நாச்சியப்ப செட்டியார் இ.தே.ராவில் (I.N.A.) பணியாற்றி உள்ளார்.

சிவன் கோவில் இலுப்பைக்குடியைச் சேர்ந்த பெரி.பெ.குடும்பத்தாரால் திருப்பணி செய்யப்பட்டு 1995-ல் குடமுழுக்கு நடைபெற்றது. மேற்படி கோயிலைச் சேர்ந்த பெ.சு. குடும்பத்தாரும் வி.ராம குடும்பத்தாரும் குன்றக்குடியில் மடம்கட்டி நிருவகித்து வருகின்றனர்.

இவ்வூரில் 24.6.12-ல் திருவாசகம் முற்றோதல் சிறப்பாக நிகழ்ந்தது. வரவேற்புரை : S.P. சிதம்பரம் செட்டியார், நன்றியுரை : ராமனாதன் செட்டியார், கலந்து கொண்டவர்கள் : 119 பேர்.



13

## 40. சிறாவயல் - 08.07.2012

### ஸ்ரீதிரிலோக நாயகி சமேத ஸ்ரீதியாகராசர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

திரிலோக நாயகியே! சிறாவயலின் தேவதையே!
தியாக ராஜா!
உரிமையினால் நகரத்தார் உறவாகிக் காக்கின்ற
ஊரின் தேவே!
நெறியோடு வாழ்கின்றார்; நிதம்போற்றித் தொழுகின்றார்
நெற்றிக் கண்ணா!
விரிகருணைத் திறனாலே வெற்றியெலாம் தந்திடுவாய்
விரைவாய் அப்பா!

## சிறாவயல் - 08.07.2012

(தெ. சொக்கலிங்கம்)

பதினாறு ஊர் வட்டகை. காரைக்குடியிலிருந்து 13 கி.மீ. வைரவன்கோவில், இலுப்பக்குடி, பிள்ளையார்பட்டி சார்ந்த மொத்தபுள்ளிகள்:163, இலுப்பைக்குடியைச் சேர்ந்த க.மு.நா. மெய்யப்ப செட்டியார் குடும்பத்தாரால் திரிலோக நாயகி உடனாய தியாகராசர் திருக்கோயில் 1912–ல் கட்டிக் குடமுழுக்குச் செய்யப்பெற்றது. 1927–ல் இக்கோயில் நகரத்தார் பொதுவில் ஒப்படைக்கப்பெற்றது. ஆறு குடமுழுக்குகளுக்குப் பின் அண்மையில் ஒரு குடமுழுக்கு நடைபெற்றது. இவ்வூர் பிள்ளையார்பட்டிக் கோவில் நகரத்தார் கட்டிய முத்துக்கருப்ப விநாயகர் கோயிலும் ஊருணியும் தற்சமயம் பிள்ளையார்பட்டி நகரக்கோவில் நிருவாகத்தில் உள்ளன. சோமசுந்தரம் நடுநிலைப்பள்ளி ஒன்று உள்ளது. வ.பழ.வ. குடும்பத்தார் நன்கொடையாகக் கொடுத்த இடத்தில் அரசு

மருத்துவமனை இயங்கி வருகிறது. ஆண்டுதோறும் ஆடி மாதம் நாட்டார் நகரத்தார் இணைந்து தண்டாயுதபாணி கோயிலில் மகேஸ்வர பூசை நடத்தி அன்னதானம் செய்து வருகின்றனர்.

தமிழகத்திற்கு வந்த காந்தியடிகள் இருமுறை இவ்வூருக்கு வருகை புரிந்துள்ளார். காந்தியத்தில் ஈடுபாடு கொண்ட இவ்வூர் நகரத்தார்கள் காந்தி வாசகசாலை என்ற படிப்பகத்தை நீண்ட காலம் நடத்தி, தற்போது சோமசுந்தரம் நடுநிலைப்பள்ளியாக இயக்கி வருகின்றனர்.

இங்கு பொது உடைமைத் தலைவர் ஜீவானந்தம் ஆசிரியராகப் பணிபுரிந்தார். அப்பொழுது அங்கு வந்த காந்தி அடிகள் அவரைப் பாராட்டிய விபரம்: உங்களுக்கு சொத்து இருகிறதா என்று காந்தி கேட்டார். இந்தியாவே என் சொத்து என்றார் ஜீவா. இல்லை. நீங்கள்தான் இந்தியாவின் சொத்து என்றார் காந்திஅடிகள்.

திருவாசக முற்றோதல் இவ்வூர்க் கோவிலில் அருசோ தலைமையில் 8.9.12ல் நிகழ்ந்தது. வரவேற்புரை: சுப. சுப்பிரமணியன் செட்டியார், நன்றியுரை : காசி ஸ்ரீ வ.சொ.சேதுச் செட்டியார், நேரம் : காலை 9.00 மணி முதல் 4.00 மணி வரை, கலந்து கொண்டவர்கள்: 120 பேர்



# 41. கண்டரமாணிக்கம் - 22.07.2012

## ஏலவார்குழலி எனும் பெரியநாயகி உடனாய ஸ்ரீகயிலாச நாதர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

ஈடில்லா நகரத்தார் கண்டிரமா ணிக்கத்தின்
ஏலவார் குழலி
ஆடியருள் கயிலாச நாதர் உறை மாணிக்க
ஆட்சி மிக்காய்!
பாடியருள் வாசகமும் பணிந்தருளும் தேவாரப்
பாங்கினாலே
கூடிவரும் செல்வமுடன் பதினாறு பேறருளிக்
குலவு வாயே!

## கண்டரமாணிக்கம் - 22.07.2012

(தெ. சொக்கலிங்கம்)

தெற்கு வட்டகை, காரைக்குடியிலிருந்து 18 கி.மீ. தொலைவு, இளையாற்றங்குடி, மாத்தூர், வயிரவன் கோவில், சூரக்குடி, இலுப்பக்குடி, பிள்ளையார்பட்டி ஆகிய 6 கோவில் நகரத்தார்கள் வாழ்கிறார்கள். மொத்தபுள்ளிகள்: 600.

இவ்வூரில் ஏறத்தாழ 100 ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்ட மாணிக்க நாச்சியம்மன் கோவில் நகரத்தார்களுக்குப் பொதுவானது. இதுவரை 4 குடமுழுக்கு விழாக்கள் நடந்துள்ளன. சிவகங்கை அரசர் குடும்ப அறநிலையத்திற்குச் சொந்தமான சிவன் கோவிலும் இரண்டு ஊருணிகளும் உள்ளன.

வைரவன் கோவிலைச் சேர்ந்த பெரி.சுப.பெரி. குடும்பத்தார் 74 ஆண்டுகளுக்கு முன் தொடங்கிய தெண்டாயுதபாணி உயர்நிலைப்பள்ளி, தொடக்கப்

பள்ளி, ஆகியவையும், இலுப்பைக்குடியைச் சேர்ந்த நா.பிச.வெ. குடும்பத்தார் தொடங்கிய மெய்யம்மை ஆச்சி – பிச்சைக்குட்டி பெண்கள் உயர்நிலைப்பள்ளியும் கல்விப் பணியாற்றி வருகின்றன.

சூரக்குடிக் கோவிலைச் சேர்ந்த முரு.அரு.சுப. குடும்பத்தார் தொடங்கி நடத்திய மருத்துவமனை அவர்களால் நன்கொடையாக வழங்கப்பெற்று இப்போது அரசு மருத்துவமனையாக இயங்கி வருகிறது.

மாத்தூர் கருப்பூர் பிரிவைச் சேர்ந்த தியாகி லெட்சுமணன் செட்டியார் இந்திய விடுதலைப் போராட்டத்தில் பங்கேற்ற நகரத்தார் ஆவார்.

இவ்வூருக்கு அருகில் வண்புகழ் நாராயணர் பெருமாள் கோவில் உள்ளது. மாணிக்க நாச்சியம்மனுக்கு சித்திரை மாதம் முதல் செவ்வாய் காப்புக்கட்டி 10 நாள் திருவிழா மிக விமரிசையாக நடந்து வருகிறது. 1901–ல் ஆரம்பித்து மு.கரு. தர்மகருப்பஞ் செட்டியார் வகையில் சிவன், மற்றும் அம்மன் கோவிலில் 10 நாள் நவராத்திரி திருவிழாவும் நடைபெற்று வருகிறது. இவ்வூரில் ஒரு குருபூசை மடமும் உள்ளது.

திருவாசக முற்றோதல் இவ்வூர்க் கோவிலில் 22.7.12ல் அருசோ தலைமையில் நிகழ்ந்தது. வரவேற்புரை : பழநியப்பன், நன்றியுரை: சோம. நாராயணன் செட்டியார், நேரம் : காலை 9.15 மணி மாலை 4.15 மணி வரை, கலந்து கொண்டவர்கள் : 106 பேர்



# 42. பட்டமங்கலம் - 12.08.2012

## பட்டமங்கலம் ஸ்ரீகுருதட்சணாமூர்த்தி, ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசர் நகரத்தார் மடம் ஸ்ரீ முருகன் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

1. கார்த்திகைப் பெண்கள் இயக்கிமார் அறுவர்
 கட்டளை மீறியதால்
 வார்த்தையால் ஆல மரத்தடி கிடந்து
 வாடவே சிவபெருமான்
 நேர்த்தியாய்த் தட்சணா மூர்த்தியாய் வந்து
 நிகழ்த்திய பட்டமங்கலம்
 கீர்த்திசால் கோவில் மீனாட்சி சுந்தரேசர்
 திருப்பணி செய் ஏ.வி.ஆர்

2. ஒப்பிலாப் பட்ட மங்கலத் துள்ளவர்
 உயர்வு சால் நகரத்தார்
 செப்பரும் மண்டபம் செந்தமிழ் முருகனைச்
 சேர்த்துள கருவறையில்
 எப்பவும் வடிவேல் எழுந்தருள் முருகன்
 இணையடி தொழுதிடுவோம்
 ஒப்பிலா முருகா! தட்சணா மூர்த்தி!
 உன்னடி உயர்காப்பே!

## பட்டமங்கலம் - 12.08.2012

தெ. சொக்கலிங்கம்

*தெற்கு வட்டகை, காரைக்குடியிலிருந்து 24 கி.மீ. மொத்தபுள்ளிகள்:182, இளையாற்றங்குடி, மாத்தூர், இலுப்பக்குடி, சூரக்குடி, வேலங்குடி, பிள்ளையார்பட்டி ஆகிய ஆறு கோவில் நகரத்தார் வாழ்ந்து வருகிறார்கள்.*

இவ்வூர் செட்டிநாட்டு ஊர்களில் மாணிக்கவாசகர் பாடல்பெற்ற சிறப்புடைய ஒரே ஊராகும். இவ்வூர் ஆலமரத்தின்கீழ், கார்த்திகைப் பெண்டிர் அறுவருக்கும் சிவபெருமான் ஆசிரியனாக எழுந்தருளினான் என்ற செய்தி திருவாசகத்தில் கீர்த்தித் திருவகவல் பதிகத்தில் 'பட்ட மங்கையில் பாங்காய் இருந்தங்கு அட்டமாசித்தி அருளிய அதுவும்' எனக் குறிப்பிடப்படுகிறது. மீனாட்சி சுந்தரேசுவரர்க்கு வடபுறம், பெரிய பழைய ஆலமரத்தின்கீழ், கிழக்கு நோக்கி அமர்ந்திருக்கும் அட்டமாசித்தி அருளிய தெட்சணாமூர்த்திக்கும் இவ்வூர் அ.வீர. அடைக்கப்ப செட்டியாரால் (சூரக்குடி) கற்கோவில் திருப்பணி செய்யப்பெற்றது. இப்போதும் இக்கோயில்கள் இவரது வழிமுறையினரால் நிருவகிக்கப்பெறுகின்றன.

சிவகங்கை அரச குடும்பத்துக்குரிய அழகு சௌந்தரியம்மன் கோவிலுக்கு கண்டரமாணிக்கத்தைச் சேர்ந்த செ.சி.நா.லெ.குடும்பத்தார் திருப்பணி செய்து குடமுழுக்குச் செய்து வைத்தனர். சிவகங்கை அரச குடும்பத்திற்குச் சொந்தமான மதியாதகண்ட விநாயகர் கோவில் ஒன்றும் உள்ளது.

இவ்வூரில் நகரத்தாருக்குச் சொந்தமான நகர மடமும் தெண்டாயுதபாணி திருக்கோயிலும் உள்ளன. இங்கு ஆண்டுதோறும் மாசிக் கார்த்திகையில் மகேஸ்வர பூசை சிறப்பாக நடத்தப்பட்டு வருகிறது. இவ்வூரில் நான்கு ஊருணிகள் உள்ளன.

மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோவில் கட்டிய அ.வீர. அடைக்கப்ப செட்டியார் 1944–ல் காலமானதும் அவருக்கு சமாதி ஆலயம் அமைக்கப்பெற்று, நாள்தோறும் பூசைகளும் புரட்டாசிக் கார்த்திகையன்று

குருபூசையும் அவரது வழிமுறையினரால் சிறப்பாக நடத்தப்பெறுகின்றது. அவர் நன்கொடையாகக் கொடுத்த இடத்தில் ஊராட்சி ஒன்றிய தொடக்கப் பள்ளி நடைபெறுகிறது. கருங்குளத்தைச் சேர்ந்த அரங்கநாதன் செட்டியார் குடும்பத்தினர் வள்ளியம்மை ஆச்சி மேல் நிலைப்பள்ளியை நடத்தி வருகின்றனர்.

இவ் ஊரைச்சேர்ந்த அழ.மெ.சு. குடும்பத்தார் வைணவத் தலமாகிய திருக்கோட்டியூரிலும், அழ.மெ.சு.சி.சு. குடும்பத்தார் சிவத்தலமாகிய திருப்புத்தூரிலும் வேத பாடசாலை நடத்தி வந்தனர். 1987–ல் அ.வீர. அ.வீர. அடைக்கப்ப செட்டியார் பட்டமங்கலத்தில் ஸ்ரீ அஷ்டமாசித்தி வேதாகமப் பாடசாலையைத் தொடங்கி நடத்தி வந்தார்.

பழம் பழுத்துக் கீழே விழுந்தால் மீண்டும் தானாகவே சென்று மரத்தில் ஒட்டிக் கொள்ளும் தனித்தன்மை/யுடைய ஏறழிஞ்சி மரம் ஒன்று இவ்வூரில் அஷ்டமாசித்தி ஆலமரத்தின் அருகே உள்ளது. செட்டிநாட்டில் இவ்வூரிலும், அரிமளத்திலும், வைரவன்பட்டியிலும் இம்மரம் இருக்கிறது.

இங்கு திருவாசக முற்றோதல் அருசோ தலைமையில் 12.8.12ல் நிகழ்ந்தது. வரவேற்புரை: சிங்காரம் செட்டியார், லெ. மெய்யப்ப செட்டியார். நன்றியுரை : மெய்யப்ப செட்டியார், நேரம் : காலை 9.45 மணி மாலை 4.30 மணி வரை, கலந்து கொண்ட நபர்கள் : 91 பேர்.



## 43. கருங்குளம் - 16.08.2014

### ஸ்ரீ செல்வ விநாயகர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

நீரின் வளமும் நில வளமும்
நிறைந்து மரங்கள் நிழல் பரப்பும்
ஊராம் நகரக் கருங்குளத்தில்
உயர்ந்த நகரத் தார்போற்றும்
சீர்சால் செல்வ விநாயகரே!
செல்வம் ஆயுள் சிறப்பெல்லாம்
பார் மேல் தந்தே அருள்புரிக!
பாது காப்பாய் பரம்பொருளே!

பழங்குடில் அமரும் பரநாச்சி
பாது காக்கும் சிற்றூராம்
கருங்குளம் வாழும் நகரத்தார்
கட்டி உள்ள திருக் கோவில்
திருவளர் செல்வ நாயகரே!
தேனும் பாலும் செழிக்கட்டும்
பெரும்புகழ் கருங்குளம் கொள்ளட்டும்
பெருகி வளர வணங்குகிறோம்.

## கருங்குளம் - 16.08.2014

### கருங்குளம் பரநாச்சி அம்மன் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

கருங்குளம் அருகே சிறுகுடிலில்
காட்சி அளிக்கும் பரநாச்சி!
உருவாய் அருவாய் உள்ளவளே!
உள்ளே அமர்ந்த திருத்தாயே!
கருவாய் இருந்த காலமுதல்
கனிவாய்க் காக்கும் கருப்பொருளே!
திருவே! உன்னைத் தெரிசித்தோம்
திருத்தாள் போற்றி! போற்றியே!

# கருங்குளம் - 16.08.2014

**(தெ. சொக்கலிங்கம்)**

தெற்கு வட்டகை; காரைக்குடியிலிருந்து 27 கி.மீ. தொலைவு; இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன் கோவில், வேலங்குடி, இரணிக்கோவில் ஆகிய ஐந்து நகரக்கோவில்களைச் சேர்ந்த 73 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர்.

நகரத்தார் பொதுவில் முன்னர் கட்டப்பட்ட செல்வ விநாயகர் கோவிலில் சிவன், அம்மன் மற்றும் பரிவார தெய்வங்கள் நிறுவப்பெற்று செல்வ விநாயகர் சிவன் கோவில் என்ற பெயருடன் 04.07.1985–ல் குடமுழுக்குச் செய்யப்பெற்றது. மேலும் ஊர்ப் பொதுவில் பரநாச்சியம்மன் கோவிலும் ஐயனார் கோவிலும் உள்ளன. இரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை பங்குனி மாதம் பரநாச்சியம்மன் திருவிழா சிறப்பாக நடைபெற்று வருகிறது.

கருங்குளம், நேமத்தான்பட்டியைச் சேர்ந்த இளையாத்தங்குடி கழனிவாசற்குடிப்பங்காளிகள் ஆடி மாதம் கருங்குளத்தில்கூடி பதினெட்டாம்படிக் கருப்பர் படைப்பை பொதுப்படைப்பாகப் படைத்து வருகின்றனர்.

கருங்குளம் அரங்கநாதன் செட்டியார் குடும்பத்தார் வள்ளியம்மை ஆச்சி தொடக்கப்பள்ளியை இவ்வூரிலும் வள்ளியம்மை ஆச்சி மேல்நிலைப் பள்ளியைப் பட்டமங்கலத்திலும் நடத்தி வருகின்றனர். வேலங்குடிக் கோவிலைச் சேர்ந்த வயி. அண்ணாமலை செட்டியாரும் வயி. செல்வ நாயகம் செட்டியாரும் I.N.A.ல் பணிபுரிந்தவர்கள் ஆவர். 40 ஆண்டுகளுக்கு முன்பு வரை நடந்துவந்த அருள்மிகு வேலாயுதசாமி பூசையை

இவ்வருடம் மறுபடியும் திருவாளர் பி.சித.நா. சிதம்பரம் செட்டியார் பெரு முயற்சி எடுத்து நகரத்தார்கள் ஆதரவுடன் நேற்று தினம் நடத்தினார்கள் (ஆடி மாதம் கடைசி வெள்ளி)

இங்கு திருவாசக முற்றோதல் காலை 10.00 மணி முதல் மாலை 5.00 மணி வரை நடந்தது. வழக்கம்போல் அரு.சோ. தலைமையில் நிகழ்ந்தது 100 அன்பர்கள் கலந்து கொண்டனர். தெ. சொக்கலிங்கம் உரை ஆற்றினார். இயக்கச் செயலர் காசிஸ்ரீ மாணிக்கம் நன்றி கூறினார்.

இவ்வூரைச் சேர்ந்த கருங்குளம் ரெங்கநாதன் செட்டியார் மிகவும் பிரபலமானவர். ராஜா சர் அண்ணாமலைச் செட்டியாரிடம் கைபழகியவர். ராஜா சர் முத்தையாச் செட்டியாரின் நெருங்கிய வட்டத்தில் இருந்து பணியாற்றியவர்.



# 44. கண்டவராயன்பட்டி - 26.08.2012

## கண்டவராயன்பட்டி
## ஸ்ரீமீனாட்சி சுந்தரேஸ்வரர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

அலங்கார மண்டபமும் அருள்புரியும் நந்தியுமாய்
அணிசெய் கோயில்
கலங்காத நகரத்தார் கண்டவராயன் பட்டி
கட்டியுள்ள
தலங்காணும் மீனாட்சி சுந்தரேசர் திருக்கோவில்
தலை வணங்கி
நலங்கண்டோர் பலகோடி நாள்தோறும் கழல்பணிந்து
வாழ்க நன்றே!

## கண்டவராயன்பட்டி - 26.08.2012

(தெ. சொக்கலிங்கம்)

மேலவட்டகை; காரைக்குடியில் இருந்து 30 கி.மீ., மொத்த புள்ளிகள் 704, இளையாற்றங்குடி மாத்தூர், வைரவன் கோவில், பிள்ளையார்பட்டி ஆகிய நான்கு கோவில்களைச் சேர்ந்த நகரத்தார்கள் வாழ்ந்து வருகிறார்கள். நகரத்தாருக்குச் சொந்தமான பிள்ளையார் கோவிலும் 1903-ம் ஆண்டு கட்டப்பட்ட மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோவில் என்கிற நகரச்சிவன் கோவிலும் உள்ளன. தெ.சி.நா. குடும்பத்தாரால் கட்டி நிருவகிக்கப்பட்டு வரும் தண்டாயுத பாணி கோவிலில் ஒவ்வொரு மாதமும் கார்த்திகை நாளில் அன்னதானம் நடைபெறுகிறது. அக்கோவில் பின்புறம் அமைந்துள்ள தெ.சி.நா. சொக்கலிங்கம் செட்டியார் சமாதியில் ஆண்டு தோறும் குருபூசை நிகழ்ந்து வருகிறது. இக்குடும்பத்தைச் சேர்ந்த சிவ சுப்பிரமணியன் செட்டியார் ஈரோடு

நகரத்தார் சங்கத் தலைவர் ஆவார். இக்கோவிலில் ஆண்டுதோறும் கந்த சஷ்டி விழா லெட்சார்ச்சனை விழாவில் அருசோ கந்தபுராணம் பற்றி உரை ஆற்றுவார். இவ்வூரின் வடக்கே மணிமுத்தாறு, சின்ன ஆறு ஆகிய இரு ஆறுகள் ஓடுகின்றன. இவ்வூரின் நான்கு பக்கங்களிலும் பெரிய கண்மாய்கள் உள்ளன. சிவன் கோவிலை ஒட்டி பழ.கரு. ஊரணி உள்ளது. மற்றும் பிற கோவில்களை ஒட்டி சில தனிப்பட்ட குடும்பங்களின் அறப்பணிகளாக ஏறத்தாழ பத்து ஊரணிகள் உள்ளன.

ஸ்ரீ பணிச்சாருடையவர் தருமகலாசாலை என்ற பெயரில் ஒரு நடுநிலைப்பள்ளி, சி.உ.ராம. ராமசாமி செட்டியாரால் 8.6.1930-ல் தொடங்கப்பெற்று, இதற்கான சொந்தக்கட்டடம் 1940-ல் கட்டப்பெற்று, இப்போது இப்பள்ளி சி.உ.ராம. கணபதி செட்டியாரால் நிருவகிக்கப்பட்டு வருகிறது.

இவ்வூரில் சிவராமன் செட்டியார் வீட்டில் கடந்த 100 ஆண்டுகளுக்கு மேலாக ஆண்டுதோறும் புரட்டாசி மாதம் இராமாயணம் படிக்கப்படுகிறது. ஒவ்வொரு சனிக்கிழமை (புரட்டாசி மாதத்தில்) பகலில் பூசை போட்டு அன்னதானம் செய்யப்படுகிறது. இவ்வீட்டில் எம்.எஸ்.எம். மெய்யப்ப செட்டியார் பிறந்தார். இங்கு காசிஸ்ரீ அருசோ இராமாயண பட்டாபிஷேக நிறைவுரை ஆற்றி உள்ளார்.

இவ்வூரில் இளையாற்றங்குடி கழனிவாசல்குடி நகரத்தாரின் ஒரு பிரிவினர் பத்தினி நாச்சியம்மன் படைப்பையும், மற்றொரு பிரிவினர் மேடைக்காளி படைப்பையும், பிள்ளையார்பட்டி நகரத்தார் பத்தினி நாச்சியம்மன் படைப்பையும் தங்களுக்குரிய பொதுப்படைப்பாகப் படைத்து வருகின்றனர்.

கண்டவராயன்பட்டி – திருப்புத்தூர் சாலையைத் தம் சொந்தச் செலவில் அமைத்துக் கொடுத்தவர் தெ.சி.நா. சொக்கலிங்கம் செட்டியார் ஆவார். இந்திய விடுதலைப் போராட்டத்தில் இவ்வூரைச் சேர்ந்த தொண்டர் நா. அருணாசலம் செட்டியார் ஆற்றியுள்ள பங்கு குறிப்பிடத்தக்கது.

வைகாசி மாதம் கிணற்றடிக் காளியம்மன் கோவிலில் நடைபெறும் பூத்திருவிழாவும், ஆனி மாதம் வல்ல நாட்டுக் கருப்பர், கடைப்பிள்ளை ஐயனார் கோவில் களின் புரவி எடுப்புத் திருவிழாவும் சிறப்பானவை.

கடந்த முந்நூறு ஆண்டுகளாக காரைக்குடி கண்டனூர், தேவகோட்டையைச் சேர்ந்த தைப்பூசக் காவடிகள் மற்றும் குன்றக்குடி வழியாக வரும் பிற செட்டி நாட்டு ஊர்க்காவடிகளும் கண்டவராயன்பட்டி பிலாவாய்க் கண்மாய்க்கரைக்கு வந்து நவமி திதி அன்று தங்கும். இங்குள்ள கண்டசித்தி விநாயகர் கோவிலில் பகல் நைவேத்தியம் நிகழும். இவ்விழாவின் சிறப்பு கண்டவராயன் பட்டி என்றாலே, பழநிக்காவடி தங்கும் இடம் என்ற எண்ணத்தை நகரத்தார் அனைவருக்கும் நினைவூட்டும் வண்ணம் அமைந்ததாகும்.

இவ்வூரில் ந.பெரி. குடும்பத்தாருக்குச் சொந்தமான முருகன் வேல் கோவில் பழைய வளவில் உள்ளது. இக்கோவிலில் திருக்கார்த்திகை மற்றும் ஆடிக்கார்த்திகை தினங்களில், அன்னதானமும் நித்திய பூசையும் நடைபெற்று வருகிறது.

திருவாசக முற்றோதல் இவ்வூர் சிவன் கோவிலில் அருசோ தலைமையில் 26.08.12.ல் நிகழ்ந்தது. வரவேற்புரை : சொக்கலிங்கம் செட்டியார், நன்றியுரை : சுப்பிரமணியன் செட்டியார், நேரம் : காலை 9.40 முதல் மாலை 4.30 வரை, கலந்து கொண்டவர்கள் : 87 பேர்



## 45. மகிபாலன்பட்டி - 09.09.2012

### நகர ஸ்ரீ மங்கள விநாயகர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

பூங்குன்ற நாட்டினிலே தமிழைப் போற்றும்
புலமைமிகு கணியன்பூங் குன்றன் போற்றி!
பூங்குன்றம் மகிபாலன் பட்டி மண்ணில்
பூத்தகதி ரேசன்தாள் போற்றி! போற்றி!
தூங்காது பணி செய்யும் நகரத் தாரின்
தொன்மைமிகு மங்களவி நாயகர் போற்றி!
பாங்காக நகரத்தார் நாட்டார் காத்துப்
பதினாறு பேறுகளும் அருள்வாய் போற்றி!

## மகிபாலன்பட்டி - 09.09.2012

தெ. சொக்கலிங்கம்

மேலவட்டகை; காரைக்குடியில் இருந்து 36 கி.மீ. தொலைவு; மொத்தபுள்ளிகள்; 186 இளையாற்றங்குடி, மாத்தூர், வைரவன் கோவில் ஆகிய மூன்று கோவில் நகரத்தார்கள் வாழ்ந்து வருகிறார்கள். நூறு வருடங்களுக்கு மேல் பழைமைவாய்ந்த மங்கள விநாயகர் கோவில் நகரப் பொதுக்கோவிலாகும். சித்தி விநாயகர் கோவிலும் சுப்பையா கோவிலும் உள்ளன. சி.சா. குடும்பத்தாரின் நிர்வாகத்தில் பூங்குன்றை குடகுமலை விநாயகர் தருமலிங்கம் கோவில்; நகரத்தாருக்கும் ஊராருக்கும் பொதுவான பூங்குன்ற நாயகி அம்மன் கோவில். இந்தக் கோவிலில் சித்திரைப் பௌர்ணமிப் பூத்திருவிழா மிகச் சிறப்பாக நடைபெறும். ஒக்கூர் நகரத்தார் வெட்டிய ஐயர் ஊரணி; குடிநீர் ஊரணி; அம்மன் கோவில் சேங்கை ஊரணி நீர்நிலைகளாகும். சித்தி விநாயகர் கோவில் பெரி. கா. காசிச் செட்டியாரால் கட்டப்பட்டு ஒக்கூர் நகரத்தார் நிர்வாகத்தில்

உள்ளது. இக்கோவில் இப்போது சிவன் கோயிலாக, இங்குள்ள ஒக்கூர் நகரத்தாரால் திருப்பணி செய்யப் பட்டுள்ளது.

இவ்வூரில் 150 ஆண்டுகளுக்கும் மேலாக சி.ராம. வீட்டில் புரட்டாசி மாதம் 8 நாட்கள் இராமாயணம் படிக்கப்படுகிறது. இவ்வூரிலிருந்து தேவகோட்டைக்கு பிள்ளை வளரச் சென்ற அ.கண வீரப்ப செட்டியார் கண்டவராயன்பட்டியிலிருந்து மகிபாலன்பட்டிக்கு கல்சாலை அமைத்துக் கொடுத்துள்ளார். இங்குள்ள தெய்வங்களுக்குப் பூங்குன்றப் பெயர் இருப்பதாலும் பூங்குன்றை குடகுமலை விநாயகர் கோவிலில் உள்ள கல்வெட்டு 'பூங்குன்ற வளநாடு' பற்றிக் குறிப்பதாலும் இவ்வூர் சங்ககாலக் கணியன் பூங்குன்றனாருடன் தொடர்புபடுத்திக் கூறப்படுகிறது.

1. மகிபாலன்பட்டியில் பண்டித மணி மு.கதிரேசன் செட்டியாரின் உருவச்சிலை உள்ளது.
2. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று உலகுக்குப் பறைசாற்றிய கணியன் பூங்குன்றனார் பிறந்த ஊர்.
3. முதுபெரும்புலவர் மகாமகோ உபாத்தியாயர் பண்டிதமணி கதிரேசன் செட்டியார் பிறந்த ஊர். 80 வருடங்களுக்கு முன்பு மு. ராம குடும்பத்தாரால் ஸ்ரீ பூங்குன்ற அய்யனார் கோவில் கட்டப்பட்டது.
4. வயிரவன் கோவில் நகரத்தாருக்குக் கருப்பர் கோவில் படைப்பு வீடு உள்ளது.

6. தமிழ் வளர்த்த பூமி

இங்கு திருவாசக முற்றோதல் 9.9.12ல் அருசோ தலைமையில் நிகழ்ந்தது. வரவேற்புரை – நன்றியுரை : ரா. ஏ. ஏகப்ப செட்டியார், நா. சின்னையா, கலந்து கொண்ட நபர்கள் : 77 பேர்.



# 46. ஆ.தெக்கூர் - 06.01.2013

## ஆ. தெக்கூர் ஸ்ரீமீனாட்சி சுந்தரேஸ்வரர் துதி

**(பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)**

பதினெட்டுப்படி உயர, தெக்கூர் மண்ணில்
பழங்கோவில் கற்கோயில் கொண்ட பெம்மான்
சதிபதியாம் மீனாட்சி சுந்த ரேசர்
சத்தியமாய் எழுந்தருளிக் காக்கும் பெம்மான்
மதி உயர்ந்த நகரத்தார் தொழிலும் கல்வி
மலைபோலும் செல்வத்தால் உயரச் செய்து
விதியினையும் புறந்தள்ளி வெற்றி கொள்ள
வினைகூட்டும் சுந்தரேசா! காப்பாய் அப்பா!

## ஆ. தெக்கூர்

**(தெ. சொக்கலிங்கம்)**

மேலவட்டகை; காரைக்குடியிலிருந்து திருப்பத்தூர் வழியாக 36 கி.மீ; இளையாற்றங்குடி, மாத்தூர், வைரவன் கோவில், இரணிக்கோவில் ஆகிய நான்கு கோவிலைச் சேர்ந்த 462 புள்ளிகள் வாழ்ந்து வருகிறார்கள்.

ஆத்தி மரங்கள் நிறைந்த தெற்குப் பகுதியை அழித்து, நிலந்திருத்தி, நகரத்தார் வீடுகள் கட்டி இவ்வூரை அமைத்தனர். அதனால் இவ்வூருக்கு ஆத்திக்காடு தெக்கூர் எனப் பெயர் ஏற்பட்டது. இங்கு மீனாட்சி சுந்தரேசுவரர் கோவில் என்ற பெயருடன் கூடிய நகரச் சிவன் கோவில் உள்ளது. இக்கோவில் 1924–ம் ஆண்டு கட்டப்பட்டது.

**இவ்வூரில் நகரத்தார் திருப்பணிகள், அறப்பணிகள் மற்றும் தர்மங்கள்:**

*1)* முன்னின்ற விநாயகர் கோவில், ஆத்திக்காட்டுப் பிள்ளையார் கோயில், பச்சை மூநிலை ஐயனார் கோவில்,

14

அரங்கநாதர் கோவில், உய்யவந்த அம்மன் கோவில், 2) புது ஊரணி, செட்டி ஊரணி, அரங்கநாதர் கோவில் ஊரணி, 3. ஸ்ரீவிசாலாட்சி தொடக்கப்பள்ளி, விசாலாட்சி கலாசாலை மேல்நிலைப்பள்ளி, ஸ்ரீவிசாலாட்சி தியாகராாசர் மகளிர் உயர் நிலைப்பள்ளி.

**வெளியூரில் செய்த திருப்பணிகள்:**

1. அரளிப் பாறையில் உள்ள சுப்பிரமணியர் கோவில், இடும்பர் கோவில்,
2. அரளிப்பாறையில் அன்னதான மடம்,
3. சிக்கல் சிங்கார வேலர் கோவில் திருப்பணி, சிக்கலில் பசுமடம்.
4. சோழம்பட்டி பிள்ளையார் கோவில் மற்றும் ஊருணி.

இவ்வூர் இராம சுப. பழநியப்ப செட்டியார் I.N.A.யில் பணியாற்றியவர்.

**கருமுத்து தியாகராாசன் செட்டியார்:**

ஆலைவேந்தராக விளங்கியவர், கல்வி வளர்ச்சிக்காக நல்கிய அறக்கொடைகளுக்காகவே ‘கலைத் தந்தை’ என்று போற்றப்பட்டவர். எந்தத் திக்கில் இருந்து மதுரைக்குள் நுழைந்தாலும் தியாகராாசர் நிறுவிய ஆலையோ அல்லது அவர் தொடங்கிய கல்லூரியோ நம்மை வரவேற்கும் என்று சோம.லெ. குறிப்பிடுகிறார்

11 பள்ளிகள், 4 கல்லூரிகள், 2 தொழிற் பயிற்சிக் கல்லூரிகள் ஆகியவற்றை தியாகராாசர் கல்வி அறநிலையங்கள் நிருவகித்து வருகின்றன. ஆ. தெக்கூரில் 1947–ல் தொடங்கி 1959–ல் நேரு பெருமகனாரால் மாபெரும் கட்டடம் திறந்து வைக்கப்பெற்ற விசாலாட்சி

கலாசாலை உயர்நிலைப் பள்ளி இப்போது மேல்நிலைப் பள்ளியாக இயங்கி வருகிறது.

தியாகராாசர் ஜாதகத்தில் ராகு, கேது, தவிர ஏழு கோள்களும் ஒரே லக்னத்தில் அமைந்திருந்தன. இதனை 'சப்தகிரியோகம்' என்று கணித்துச் சொன்னவர்கள் 'இப்படியொரு ஜாதகத்தை இதுவரையில் கண்டதில்லை' என்றும், 'இவர் ஒரு சாமியாராகப் போவார் அல்லது கோடீஸ்வரர் ஆவார்' என்றும் கூறினர். தியாகராாசர் 16 ஆலைகளை நிருவகித்து, ஆலைத் தொழில் பேரரசையே நடத்தியவர். இவர் தொடங்கியது மதுரை வங்கி, மதுரை ஜெனரல் இன்சூரன்ஸ் நிறுவனம். மேற்படி நிறுவனம் பிற்பாடு ஆயுள் காப்பீட்டுக் கழகத்துடன் இணைந்துவிட்டது. தியாகராாசர் தமிழ்ப்பற்று மிக்கவர். நாள்தோறும் திருக்குறள், திருவாசகம் ஓதி வந்தார். 'தமிழ்நாடு' நாளிதழ் நடத்தினார். அன்னை மீனாட்சி கோவிலுக்கு விடியற்காலை *5.30* மணிக்குச் சென்று தினந்தோறும் வழிபடுவார்.

இங்கு திருவாசக முற்றோதல் சிவன்கோவிலில் 6.1.13ல் அருசோ தலைமையில் நிகழ்ந்தது. வரவேற்பு : சோம.ராமசாமி, நன்றியுரை : எஸ். முத்துராமன், நேரம் : காலை 9.45 முதல் 4.45 மணி வரை, கலந்து கொண்ட நபர்கள்: 75 பேர்கள்.



## 47. நெற்குப்பை - 14.10.12

### வள்ளி தெய்வானை சமேத ஸ்ரீமுருகன் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)

கல்லாலே மண்டபமும் கவினார்ந்த சூழலுமாய்க்
காட்சி தந்து
கற்பனைக்கும் எட்டாத நெற்குப்பை வாழ் முருகா!
கனிந்த செல்வா!
வள்ளியுடன் தெய்வானை ஒருகாலின் மயிலேறி
வற்றாத ஞானம்
வளர்ந்திடவே எந்நாளும் நெற்குப்பை நகரத்தில்
வாழும் செல்வா!
அள்ளி நிதம் கொடை செய்ய அருள்புரியும் மா முருகா!
அறிவுக்குன்றே!
அடியார்க்கும் முதியோர்க்கும் இளைஞர்க்கும் மாதர்க்கும்
அருளும் தேவா!
பள்ளியிலே பயில்வோர்க்கும் தொழில் செய்வோர் அனைவர்க்கும்
அருள்பாலித்துப்
பதம் தந்து, மணம் தந்து பாராளும் மகவீந்து
பாலிப் பாயே!

(14.10.12-ல் இங்கு சிறப்பாகத் திருவாசகம் முற்றோதல் அருசோ தலைமையில் நிகழ்ந்தது)

## நெற்குப்பை - 14.10.12

(தெ. சொக்கலிங்கம்)

மேலவட்டகை; காரைக்குடியிலிருந்து 40 கி.மீ. தொலைவு; இளையாற்றங்குடி, வைரவன் கோவில், மாத்தூர், நேமங்கோவில், சூரக்குடி, இரணிக்கோவில், பிள்ளையார்பட்டி ஆகிய 7 கோவில்களைச் சேர்ந்த 700 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர். பழந்தமிழில் குப்பை என்பது குவியலைக் குறிக்கும். இவ்வூரில் நெற்குவியல்கள் மிகுதியாக இருந்த காரணத்தினால்

இவ்வூருக்கு நெற்குப்பை எனப் பெயர் வந்ததாகக் கூறுவர்.

**இவ்வூரில் நகரத்தார்கள் திருப்பணி மற்றும் அறப்பணிகள்:**

1. நகர சுப்பிரமணிய சுவாமி கோவில்.
2. மெய்ஞ்ஞான விநாயகர் கோவில்.
3. வேங்கடாசலப் பெருமாள் கோவில்.
4. பரியாமருதுபட்டியில் மருதீசர் கோவில்.
5. இவ்வூரில் உள்ள 15 ஊருணிகளில் 4 நகரத்தார்கள் வெட்டியது.
6. சாத்தப்பா அரசு உயர்நிலைப்பள்ளி.
7. தியாகராசன் அண்ணாமலை தொடக்கப்பள்ளி.
8. அலமேலு பழநியப்பா மருத்துவமனை.
9. இராம.சா.மடம்.
10. நகர மடம்.

**இவ்வூரில் நடைபெறும் படைப்புகள்:**

1. மாங்கல்ய காரி அம்மன் படைப்பு (இரணிக் கோவில்).
2. உடையம்மைப் பாட்டி படைப்பு (நேமங் கோவில்)

   நகரத்தார் ஆண்டுதோறும் மேற்கொள்ளும் பழநி நடைப்பயணம், காவடி எடுத்தல் ஆகிய மரபுகளை 400 ஆண்டுகட்கு முன் தொடங்கி வைத்த நேமங் கோவில் குப்பாபிச்சஞ்செட்டி குமாரன் குமரப்பன் இவ்வூரைச் சேர்ந்தவர். சிவகங்கை அரச குடும்பத் துக்குச் சொந்தமான மரகதவல்லி உடனாய மன மொத்த கண்டீசுவரர் கோவில் இவ்வூரில் உள்ளது. தெ.சொ. சொக்கலிங்கம் செட்டியார் குடும்பத்தா ரால் ஆண்டுதோறும் மார்கழி மாதம் முத்தானந்த சாமிக்கு குருபூசை நடத்தப்பட்டு வருகிறது.

## 48. வேந்தன்பட்டி - 4.11.2012

### ஸ்ரீ மீனாட்சி சொக்கலிங்கர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)

பொன்னான கோவிலிலே வேந்தன் பட்டி
பூலோக சொர்க்கமெனப் பொலியும் காட்சி!
கண்ணான மீனாட்சி சொக்க லிங்கர்
கைகூப்பி வருவோர்க்குக் காட்சி தந்தே
எந்நாளும் நெய் நந்திப் பெருமான் போற்ற
இனிதான வாழ்வருளிக் காக்கும் ஈசா!
பண்ணாலே உனைப்பாடிப் பரவு கின்றோம்
பரமேசா! எந்நாளும் காப்பாய் அப்பா!

## வேந்தன்பட்டி - 4.11.2012

(தெ. சொக்கலிங்கம்)

மேலப்பத்தூர் வட்டகை; காரைக்குடியில் இருந்து நெற்குப்பை வழியாக 46 கி.மீ. இளையாற்றங்குடி, மாத்தூர், வைரவன்கோவில், நேமம், இலுப்பைக்குடி, இரணியூர் ஆகிய ஆறு கோவில்களைச் சேர்ந்த 890 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகிறார்கள். மீனாட்சி சொக்கலிங்கேஸ்வரர் கோவில் நகரச் சிவன் கோவிலாகும். முதல் குடமுழுக்கு 12.11.1911–ல் நடை பெற்றது. பின்னர் பல குடமுழுக்குகள் நடந்துள்ளன. இவ்வூரின் தனிச்சிறப்பு இக்கோவிலில் உள்ள நெய் நந்தியாகும். நந்தீஸ்வரருக்குச் சாத்தப்பட்ட நெய் எத்தனை நாட்கள் ஆனாலும் ஈ, எறும்பு மொய்ப்ப தில்லை. இந்நந்தியும் சிவலிங்கமும் கொடும்பாளூரில் இருந்து கொண்டு வரப்பட்டவை எனக் கூறுகின்றனர். பிரதோச நாட்களில் நந்தியை வழிபட மக்கள் பெரும்

திரளாக வருகின்றனர். தண்டபாணி கோவிலும் நகரத்தார் பொதுக்கோவிலாகும். 1911-க்கு முன் சுப்பையா கோவிலில் இருந்து வந்த நகர மடம் இப்போது தனிக்கட்டடத்தில் இயங்குகிறது. இளையாற்றங்குடி ஒக்கூர் துர்க்கைச் செட்டிப் வகையறாவின் துர்க்கைசசெட்டி பிள்ளையார் கோவிலும், ஆறுமுகஞ்செட்டி வகையறாவின் ஆறுமுகஞ் செட்டிபிள்ளையார் கோவிலும், இலுப்பைக்குடி நகரத்தார்களின் மாப்படைத்தான் பிள்ளையார் கோவிலும், அற்குரிய மூன்று குளங்களும் இங்கு உள்ளன. பழைய ஊருணி நகரத்தார் பொதுவாகும்.

இவ்வூரில் திருவள்ளுவர் வாசக சாலை 13.4.1927-ல் தொடங்கப்பட்ட பழைமையான இலக்கிய அமைப் பாகும். து.க.லெ.கண்ணப்பன் I.N.A.ல் பணியாற்றியவர். நகரத்தார் பொது நிர்வாகத்தில் உள்ள நகரத்தார் தொடக்கப்பள்ளிக்கு லெ.நா. சொக்கலிங்கம் செட்டியார் கட்டடம் கட்டிக் கொடுத்துள்ளார்கள். திருக்களம்பூர் வைத்தியநாத சுவாமி கோவில் திருப்பணி பழ.மெ. குடும்பத்தாரால் செய்யப் பெற்றது. அப்பன் திருப்பதியில் நா.க.ராமன் செட்டியார் சிவன் கோவில் திருப்பணி செய்துள்ளார். மு.ராம.இராமசாமி செட்டியார் குடும்பத்தார் பசுமடம் வைத்துள்ளனர். சென்னைவாழ் வேந்தன்பட்டி நகரத்தார்கள் இவ்வூரில் பொதுநல மன்றம் அமைத்து சமூக உணர்வுடன் கல்யாண நிதி, கல்வி உதவிநிதி அளித்து வருகின்றனர். பழநியப்பன் ராமசாமி அடையாறு அஷ்டலெட்சுமி கோவிலுக்கு யானை வாங்கிக் கொடுத்துள்ளார். சுப. நாகப்ப செட்டியார் கார்த்திகை மடம் கட்டி மாதக் கார்த்திகை தோறும் அன்னதானம் செய்து வருகிறார்.

பெரி.சோம.பெரி. சிவலிங்கம் செட்டியார் குடும்பத்தார் கல்யாண மண்டபம் கட்டி நகரப் பொதுவுக்கு நன்கொடையாக அளித்துள்ளனர்.

வருஷா வருஷம் சித்திரை மாதம் முதல் ஒவ்வொரு கோவில் நகரத்தார்களில் இரண்டுபேர் நடப்புக்காரியக் காரர்களாக இருந்து கோவிலை நிர்வகித்து வருகிறார்கள்.

இங்கு திருவாசக முற்றோதல் 4.11.12ல் அருசோ தலைமையில் நிகழ்ந்தது. வரவேற்புரை : ஆறு. குமரப்பன், நன்றியுரை : நா.அண்ணாமலை, நேரம் : காலை 10.05 முதல் 5.45 மணி வரை, கலந்து கொண்டவர்கள் : 77 பேர்கள்.



## 49. மேலைச்சிவபுரி - 11.11.2012

### மேலைச்சிவபுரி மீனாட்சி சொக்கலிங்கர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)

மேலைச் சிவபுரியின் மீனாட்சி சொக்கலிங்கர்
தாளைப் பணிந்து தமிழ்பாடிப் பரவுகிறோம்

பொன்னைத் தருகின்றாய் பொருள் மேலும் தருகின்றாய்
கண்ணை இமை போலக் காக்கின்ற தேவதேவி!

நீரின் வளம்தந்து நிலவளமும் தந்ததுடன்
பாரின் வளம் தந்து பண்பளிக்கும் சொக்கேசா!

மாந்தர் ஒற்றுமையாய் மகிழ்ச்சியுடன் வாழ்ந்திடவே
காந்தம் போல் ஈர்த்துக் கா!

### திருநாவுக்கரசர் நற்பணி மன்றத்துக்கு (வாழ்த்து)

நகரத்தார் எல்லோரும் நலமாய்த் திகழ
எழுபத்து ஆறு (96) ஊர்களுக்கும் சென்று
மணிவாசகரின் திருவாசகப்
பெருவேள்வி எனப் பெரியோர் சொல்கின்ற
ஞானவேள்வி என நல்லோர் புகழ்கின்ற
இவ்வேள்வி நடத்தும் இனிய நல்லோரே
மணிவாசகரின் மகத்துவம் அறிந்தோரே
இல்லப் பணி நிறுத்தி வைத்து இங்கு வந்து
நல்ல பணி செய்யும் நல்லோரே (உங்கள்)
பாதம் பணிந்து வாழ்த்துகிறோம்
எல்லோரும் இன்புற்றிருக்க என்றும்
நகரத்தார் நாம் நலமாய்த் திகழ
ஒற்றுமையாய் ஒன்றாய்க் கூடிடவும்
கூட்டுப் பிரார்த்தனையாய் இந்தத்

தேன்கலந்த வாசகத்தை நாம் கலந்து
பாடி மகிழப் பார்புகழ வாழ்த்துகிறோம்.
அடியவர்கள் பாதங்களை அடிபணிந்து
அகம் மகிழ வாழ்த்தி வணங்குகிறோம்.
நாவினிக்க நன்றியினைச் சொல்கின்றோம்.

இப்படிக்கு,
காரைக்கால் அம்மையார்
மகளிர் வழிபாட்டு மன்றத்தினர்,
மேலைச்சிவபுரி.

## மேலைச் சிவபுரி - 11.11.2012

(தெ. சொக்கலிங்கம்)

மேலப்பத்தூர் வட்டகை; காரைக்குடியில் இருந்து நெற்குப்பை வேந்தன்பட்டி வழியாக 44 கி.மீ., இளையாற்றங்குடி, வைரவன் கோவில், நேமம், பிள்ளையார்பட்டி, இரணியூர் ஆகிய ஐந்து கோவில்களைச் சேர்ந்த 540 புள்ளிகள் வாழ்ந்து வருகின்றனர். நகரச் சிவன் கோவில் மீனாட்சி சொக்கலிங்கர் கோவில் ஆகும். முதல் குடமுழுக்கு 14.6.1922. இவ்வூரில் மதுரையைப் போலவே ஆவணி மூலத்திருவிழா சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. பிள்ளையார்பட்டிக் கோவிலைச் சேர்ந்த முத்தப்ப செட்டியார் வகையறாவால் சக்தி வேலாயுத சுவாமி என்னும் சுப்பையா கோவில் கட்டப்பட்டது. இங்கிருந்து தை மாதம் கார்த்திகையன்று காவடிகள் பழநிக்குப் புறப்படும். சன்மார்க்க சபையும் வள்ளுவர் மன்றமும் தமிழ் விழாக்கள் நடத்துகின்றன. சன்மார்க்க சபையில் நால்வர் குருபூசை நடத்தப்படுகிறது.

சன்மார்க்க சபை பண்டித மணியின் தூண்டுதலால் வ.பழ.சா. பழநியப்ப செட்டியார் அவர்கள் தம்பி அண்ணாமலை செட்டியார் ஆகியோரால் 1909–ல் தோற்றுவிக்கப்பட்டது. அப்பர் குருபூசையோடு சன்மார்க்க சபை தொடக்க விழா சோழவந்தான் மகாவித்துவான் அரசஞ் சண்முகனார் தலைமையில் நடைபெற்றது.

**சபையின் நோக்கம்:**

1. சொற்பொழிவுகள் மூலம் சைவத்தையும், தமிழையும் வளர்த்தல்.

2. கல்விப் பணி.

3. நூலகம் அமைத்தல் (தொல்காப்பியர் நூலகம்) ஆண்டுதோறும் மூன்று நாட்கள் இலக்கியத் திருவிழாவாகக் கொண்டாடப்படுகிறது. வ.ப.ழ.சா. குடும்பத்தார் விழாவிற்கு வரும் அனைவருக்கும் மூன்று நாட்களும் விருந்து கொடுக்கிறார்கள். சன்மார்க்க சபை ஆண்டுவிழாவிற்கு வராத தமிழறிஞர்களோ, சைவ சித்தாந்த வித்தகரோ இல்லை. கணேசர் செந்தமிழ் தொடக்கப்பள்ளி, கணேசர் செந்தமிழ்க் கல்லூரி ஆகியன சபையின் மூலம் தொடங்கப்பட்டவை. அரசினர் உயர்நிலைப் பள்ளிக்கு நிலத்தை நன்கொடையாகக் கொடுத்தது சன்மார்க்க சபை. தமிழ்நாட்டில் தொல்காப்பியர் பெயரால் அமைந்த முதல் நூலகம் சன்மார்க்க சபையின் நூலகமாகும். அக்காலத்தில் இச்சபையை 'பண்டிதமணி சபை' என்றே குறிப்பிடுவர். 'பண்டிதமணி' என்ற பட்டம் சபையின் 16–வது ஆண்டுவிழாவின்போது உ.வே.சா. தலைமையில் மு. கதிரேசன் செட்டியாருக்கு வழங்கப்பட்டது.

"சபையை நான் வளர்த்தேன் என்று பலர் சொல்லுவார்கள்'. உண்மையில் சபைதான் என்னை வளர்த்தது" என்று பண்டித மணி குறிப்பிடுவாராம். மேற்படி சபையும் கணேசர் செந்தமிழ்க் கல்லூரியும் என்றென்றும் பண்டித மணியை நினைவூட்டும் நிலையான சின்னங்களாகும்.

அரசினர் உயர்நிலைப்பள்ளியை, மேல்நிலைப் பள்ளியாக மாற்றுவதற்கு முருகமணி முரு.பழநியப்ப செட்டியார் ரூ.25,000/– நன்கொடை வழங்கியுள்ளார். இவ்வூரினரான சாமிநாதன் செட்டியார், இராம. ஆறுமுகம் செட்டியார் I.N.A.ல் பணியாற்றியவர்கள்.

பழநி வழி நடைப்பயணத்தில் மேலைச்சிவபுரியும் ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது. பிடாரம்பட்டி என்னும் ஊரில் வாழ்ந்த பிள்ளையார்பட்டிக் கோவில் முத்தப்ப செட்டியாரை மேலைச்சிவபுரி சேர்வைக்காரரும் ஊராரும் தம்மூரில் வந்து இருக்குமாறு அழைத்தனர். அவ்வண்ணமே இங்கு வந்து வசித்த சாமியாடி முத்தப்ப செட்டியார், ஆண்டுதோறும் தைமாதம் கார்த்திகையன்று காவடி கட்டிப் பழநிக்கு நடந்து சென்று வருவார். முத்தப்பர் அருள்வாக்கால் புதுக்கோட்டை மன்னருக்கு ஆண் வாரிசு இல்லாத குறை நீங்கியது. மகன் பிறந்த மகிழ்ச்சியில் மன்னர் விருப்பப்படி தாமிரவேல் செய்து முத்தப்பரிடம் கொடுத்தார். தொண்டைமான் திருமுக ஓலையின்படி இவ்வேலுக்கும் பழநி அன்னதான மடம் ஆறுகால் சவுக்கையில் அபிசேகமும் முத்தப்பருக்குப் பரிவட்ட மரியாதையும் நடைபெற்றன. இன்றும் முத்தப்பர் வழிமுறையினர் அத்தாமிரவேலை ஏந்தியே பழநிக்குக் காவடி கட்டிச் சென்று வருகின்றனர். வேல் திரும்ப

ஊருக்கு வரும் நாளில் சக்தி வேலாயுத சாமி கோவிலில் வேல் பூசையும் அன்னதானமும் நடைபெறும்.

ஆவணி மூலத் திருவிழாவில் திருக்கல்யாணத்தன்று மணமாக வேண்டிய பெண்பிள்ளைகளுக்குத் தாலி வழங்குகிறார்கள். தாலி பெற்றுச் செல்லும் பெண்களுக்கு ஓராண்டுக்குள் திருமணம் நடக்கிறது. இது ஒரு சிறப்பு.

கல்லூரியில் B.A., B.B.M., B.Sc., (com) B.Sc., (Matths) M.Com (Maths) ஆகிய பட்டங்களுக்குப் பாடங்கள் நடத்தப்படுகின்றன. M.Phil., Phd., ஆகிய ஆய்வுகளும் நடத்தப்படுகின்றன. மாணவர்களுக்குச் சிறப்புக்கட்டணம் தவிர வேறு எந்த விதமான நன்கொடையும் வாங்குவதில்லை. ஆசிரியர் பணிக்குச் சேர்க்கும் பொழுது எந்தவிதப் பணமும் அவர்களிடமிருந்து பெறுவதில்லை. தற்சமயம் 700 மாணவர்கள் படித்துக் கொண்டிருக்கின்றனர். போதிய வகுப்பறை மற்றும் நூலகங்களும் உள்ளன. நகரத்தார் மாணவர்களுக்குத் தனிச்சலுகை உண்டு.

இங்கு அருசோ தலைமையில் 11.11.2012ல் நிகழ்ந்த திருவாசக முற்றோதலில், வரவேற்புரை : சி. சொக்கலிங்கம் செட்டியார், நன்றியுரை : அ.சுப. அண்ணாமலைசெட்டியார், நேரம் : காலை 10.05 முதல் 5.15 மணி வரை, கலந்து கொண்டவர்கள் : 83 பேர்கள்



## 50. வலையபட்டி - 25.11.2012

### ஸ்ரீமலையாண்டி விநாயகர் துதி

### (பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)

மீனாடு கின்ற சுனையோடு மேகம்
மிளிர்ந்தாடும் மலையின் மீது
கானாடு தென்னை மரத்தோடு வில்வம்
கவினார்ந்த காட்சி நல்க
சேனாதி பதியாம் மலையாண்டி சேவை
சாதிக்கும் வலைய பட்டி.
தானாக வந்து தரிசிப்போர் என்றும்
தழைத்தோங்க அருள்க நாதா!

## வலையபட்டி - 25.11.2012

### (தெ. சொக்கலிங்கம்)

மேலப்பத்தூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 48 கி.மீ; இளையாற்றங்குடி, மாத்தூர், வைரவன்கோவில், நேமம், இலுப்பக்குடி, இரணியூர், பிள்ளையார்பட்டி ஆகிய 7 கோவில்களைச் சேர்ந்த 1686 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர். புள்ளிகள் எண்ணிக்கை தேவகோட்டை, காரைக்குடியை அடுத்து மூன்றாவது இடத்தில் உள்ளது.

மலையாண்டிசாமி கோவில் இவ்வூர் நகரத்தார்களின் பொதுக்கோவில். பொதுவாக முருகன்தான் மலையாண்டி என்று அழைக்கப்படுவது இயல்பு. ஆனால் மலையாண்டியாக மலைமீது கோவில் கொண்டிருப்பவர் விநாயகர் ஆவார். இன்றும் விநாயகருக்கே முதன்மை அளிக்கப்படும் கோவில் 1892-ம் ஆண்டு வடுவகிர்விழியாள் உடனாய

வலம்புரிநாதர் உறையும் சிவன்கோவிலாகத் திருப்பணி செய்யப் பெற்று முதல் குடமுழுக்கு நடந்தது. இக்கோவில் வளாகத்திலேயே இவ்வூர் மு. ராம.செந்தில்நாதன் செட்டியாரால் கட்டிக் கொடுக்கப்பட்ட வரதராசப் பெருமாள் கோவிலும், ஐயப்ப பக்தர்களால் கட்டிக் கொடுக்கப்பட்ட ஐயப்பன் கோவிலும் இப்போது நகரத்தார் நிர்வாகத்தில் உள்ளன.

க.மு.அ.சின்னையா செட்டியார் 1940–ல் கட்டி நகரத்தாரிடம் ஒப்படைத்த நகர விடுதியும், அ.ராம. அண.கல்யாணி ஆச்சி 1968–ல் கட்டி நகரத்தாரிடம் ஒப்படைத்த கல்யாண மண்டபமும் இப்போது நகரத்தார் நிர்வாகத்தில் உள்ளன. கே.எம்.பி.குமரப்ப செட்டியார் கட்டிய பசுமடம் இன்றும் அவரது வழிமுறையினரால் நடத்தப்படுகிறது. கு.கா.கு. முத்துக்கருப்பன் செட்டியார் கந்தர் சஷ்டி விழா மண்டபம் கட்டியிருக்கிறார். வ. கரு. சபாபதி செட்டியார் குடும்பத்தார் ஒரு கார்த்திகை மடத்தையும், கு.சுப. வகையினர் ஒரு கார்த்திகை மடத்தையும் நடத்தி வருகின்றனர். இம்மடங்களில் மாதந்தோறும் கார்த்திகை அன்று அன்னதானம் செய்யப்படுகிறது. இவ்வூர் அ.நா. அண்ணாமலை செட்டியார் கடந்த 34 ஆண்டுகளாக காசியில் ஒரு பசுமடம் நடத்தி வருகிறார்கள்.

இங்கு மலைக்கோவிலில் 25.11.12ல் அருசோ தலைமையில் நிகழ்ந்த திருவாசக முற்றோதலில், வரவேற்புரை : சுப. பழநியப்ப செட்டியார், நன்றியுரை : முனைவர் பெரி. அழகம்மை, நேரம் : காலை 10.05 முதல் 5.00 மணி வரை, கலந்து கொண்டவர்கள் : 74 பேர்கள்.



## 51. பொன்புதுப்பட்டி - 09.12.2012

### ஸ்ரீபுவனேஸ்வரி சமேத
### ஸ்ரீ பூலோக நாதர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)

பூங்கழல் தந்து புவனமே காக்கும்
புவனேஸ் வரியின் திருநாதா!
ஏங்கிடா துலகம் எழிலுடன் வாழ
இயல்புடன் காக்கும் பூலோகா!
பாங்குடன் நகரப் பொன்புதுப் பட்டி
பாதுகாக்கும் புவ னேசா!
சேங்கையும் பெருக சீரெலாம் வளரச்
செல்வமே! காக்க வா வா வா!

## பொன்புதுப்பட்டி - 09.12.2012

(தெ.சொக்கலிங்கம்)

மேலப்பத்தூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து நெற்குப்பை வழியாக 44 கி.மீ. தொலைவில் உள்ளது; ஊரின் பெயர் புதுப்பட்டி. பொன்னமராவதியை ஒட்டியிருப்பதால் பொன். புதுப்பட்டி என்று அழைக்கப்படுகிறது. இளையாற்றங்குடி, இலுப்பக்குடி, வைரன்கோவில் ஆகிய மூன்று கோவில்களைச் சேர்ந்த 606 புள்ளிகள் வாழ்ந்து வருகிறார்கள்.

ஸ்ரீபூலோகநாதர், ஸ்ரீபுவனேஸ்வரி அம்மை திருக்கோவில் நகரச் சிவன் கோவிலாகும். 11.2.1951 அன்று முதல் குடமுழுக்கு விழா நடைபெற்றது. சீநிவாசப்பெருமாளுக்கும் ஸ்ரீதேவி, பூதேவி அம்மையாருக்கும் சிவன் கோவிலில் சன்னதி அமைந்துள்ளது.

**பொன்புதுப்பட்டி நகரத்தார்கள் புதுப்பட்டியில் செய்த திருப்பணிகள் மற்றும் தர்மங்கள்:**

1. தேரோடும் சாலையில் 100 ஆண்டுகளுக்கு மேல் பழைமை வாய்ந்த நகரத்தார் மடம்.
2. மலேயா ஊரணி, அதன் கரையில் கற்பகமூர்த்தி பிள்ளையார் கோவில், சுப்பையா வெற்றி வேலாயுத சாமி கோவில்.
3. வீரஞ்செட்டி ஊரணிப் பிள்ளையார் கோவில், மடம், தருமக்கிணறு.
4. உடையப்பிராட்டி அம்மன் கோவில்.
5. மாம்பழத்தான் ஊரணி, பிள்ளையார் கோவில் மடம்.
6. சேங்கை, ஊரணி, பழநியப்பா பூங்கா, வானொலி அறை.
7. மெய்யஞ்செட்டி குடிநீர் ஊரணி.
8. நாகப்ப செட்டியார் நினைவு ஊராட்சி ஒன்றிய ஆரம்பப் பள்ளி.
9. கல்யாணி பெண்கள் இலவச தையல் பயிற்சி நிலையம்.

ஆடி மாதம் சுப்பையா வெற்றி வேலாயுத சாமிக்கு நகரத்தார்கள் மகேஸ்வர பூசை செய்து வருகிறார்கள். வீர.காசி விஸ்வநாதன் செட்டியார், நா.கும. பழநியப்ப செட்டியார் ஆகியோர் I.N.A.ல் பணிபுரிந்தவர்கள்.

**பொன்புதுப்பட்டி நகரத்தார் வெளியூர்களில் செய்த திருப்பணிகள் மற்றும் தர்மங்கள்:**

1. பொன்னமராவதியில் சிவன்கோயில் மற்றும் பெருமாள் கோவில்.

15

2. மூலங்குடி பெருமாள் கோவில்.
3. மூலங்குடி பொய் சொல்லா மெய்யர் கோவில்.
4. மூழிமலையான் சுப்பிரமணியர் கோவில் மடம்.
5. தேனி மலையில் கார்த்திகை மடம்.
6. பொன் புதுப்பட்டியில் முதியோர் உணவகம் ஏற்படுத்தி நடந்து வருகிறது.
7. நகர மடத்தை திருமண மண்டபமாக்கி, இதுவரை சுமார் 200 திருமணங்கள் நடைபெற்றிருக்கின்றன.
8. அஞ்சல் நிலையம் கட்டிக் கொடுத்து அஞ்சலகம் நடைபெறுகிறது.

இங்கு அருசோ தலைமையில் 9.12.12ல் சிறப்பாக நடைபெற்ற திருவாசக முற்றோதலில், வரவேற்புரை : R.M.S.சதாசிவம் செட்டியார், நன்றியுரை : மு.பழ.இராமநாதன் பழநியப்பன், நேரம் : காலை 9.30 முதல் 4.30 வரை, கலந்துகொண்டவர்கள் : 79 பேர்கள்.



## 52. உலகம்பட்டி - 23.12.2012

### ஸ்ரீஉலகநாயகி சமேத உலகநாதசுவாமி துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)

மகிழோடு தென்னையுடன் வேம்பு மாக
மணம் கமழும் கற்கோவில் எழுந்து காக்கும்
பகவானே! பார்புகழும் உலகம் பட்டி
பாலிக்கும் நாயகனே உலக நாதா!
சகம்புரக்கும் அம்பிகையே! உலக நாயகி!
சலியாமல் தொண்டாற்றும் நகரத் தார்கள்
அகமகிழ நலமெல்லாம் அருளிக் காப்பாய்!
அன்புருக வேண்டுகிறோம். அப்பா! வா வா!

## உலகம்பட்டி - 23.12.2012

(தெ. சொக்கலிங்கம்)

மேலவட்டகையைச் சேர்ந்தது; காரைக்குடியில் இருந்து திருப்பத்தூர் பொன்னமராவதி வழியாக 54 கி.மீ. தொலைவு; இளையாற்றங்குடி, மாத்தூர், வைரவன் கோவில், நேமம், இரணிக் கோவில், பிள்ளையார்பட்டி ஆகிய ஆறு கோவில்களைச் சேர்ந்த 275 புள்ளிகள் இவ்வூரில் வாழ்கின்றனர்.

உலக நாயகி அம்மன் உடனாய உலகநாதசாமி கோவில். நகரச் சிவன் கோவிலாகும். இக்கோவிலுக்கு முதல் குடமுழுக்கு 1929 ஜனவரியில் நடைபெற்றது. சேவுகானந்த ஞானியார் பூசை செய்த ஞானியார் மடம், தண்டாயுதபாணி கோவில் நூறு ஆண்டுகளுக்கு மேல் பழைமையானது.

**இவ்வூர் நகரத்தார்கள் இவ்வூரில் செய்த திருப்பணிகள் மற்றும் தர்மங்கள்:**

1. புது ஊரணி சக்தி விநாயகர் கோயில்.

2. தம்பையா கோவில் குதிரை.
3. புது ஊருணியின் நான்கு கரைப் பகுதிகளில் கல்கட்டு தர்மம்.
4. சிவன் கோவில் ஊரணி.
5. தம்பையா கோவில் சேங்கை என்னும் குடிநீர் ஊரணி.
6. ஞானியார் மடம் ஊரணி.
7. நாட்டுக்கோட்டை நகரத்தார் மடம்.
8. நந்தவனம்.
9. சிவன்கோவில் அக்ரஹாரம்.
10. தொடக்கப்பள்ளி.
11. அரசு உயர்நிலைப் பள்ளிக்கு இடம் நன்கொடை.
12. சொர்ணம் சிவலிங்க நிலைய மருத்துவமனை.
13. N.S.P. இராமனாதன் செட்டியார் கலியாணி ஆச்சி திருமண மண்டபம்.
14. ஞானியார் மடத்தில் தைப்பூச அன்னதான மடம், உற்சவ மண்டபம், மடப்பள்ளி, தண்ணீர்ப் பந்தல் ஐந்து, மீனாட்சி அம்மன் எழுந்தருளும் மண்டபம், இவை அனைத்தும் நகரத்தார் திருப்பணி.
15. முதியோர் நல்வாழ்வு மையம், கா.பழ. மீனாட்சி சுந்தரம் செட்டியார் அவர்கள் கட்டட நன்கொடை.

இவ்வூரில் இலட்சுமணன் செட்டியார் துறவுபூண்டு முதலில் ஞானியார் மடத்தில் தங்கியிருந்தார் பின்னர் இலட்சுமண சுவாமிகள் தனியே கட்டிய மடத்திற்கு

'சைவ சிந்தாந்த நிலையம்' என்று பெயர். ஞானியார் மடத்தில் நடைபெறும் தைப்பூசத்திருவிழா இவ்வூரின் பெரிய திருவிழாவாகும். வேற்பூசையும் பொதுவிருந்தும் சிறப்பாக நடைபெறும்.

சி.லெ. நாராயணன் செட்டியார் குடும்பத்தினர் தை மாதத்தில் லெட்சுமணசுவாமி குருபூசை நடத்தி வருகின்றனர். செட்டி நாட்டின் எல்லையில் இவ்வூர் அமைந்துள்ளதால் 'ஊருக்குக்கடைசி உலகம்பட்டி' என்னும் பழமொழி வழங்கி வருகிறது. ஆனால் இன்று ஊருக்கு முதல் உலகம்பட்டியாக மாறி வருகிறது.

இவ்வூர்ச் சிவன்கோவிலில் 23.12.12ல் அருசோ தலைமையில் நிகழ்ந்த திருவாசக முற்றோதலில் வரவேற்புரை : க.பழ. மாணிக்கம் செட்டியார், நன்றியுரை : சுப. ராமநாதன் செட்டியார், லெ.காசிநாதன் செட்டியார். நேரம் : காலை 9.40 முதல் 5.10 வரை, கலந்து கொண்டவர்கள் : 90 பேர்கள்.

இவ்வூர் அன்பர் லேனா காசிநாதனின் சேவை அளப்பரிது. இவரது சகோதரர்களின் சேவைக்கும் எல்லையில்லை.



## 53. கொப்பனாபட்டி - 19.1.2013

### ஸ்ரீமுத்து விநாயகர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)

கொன்னை யூரின் அருள்வளமும்
கொப்பனா பட்டிப் பொருள் வளமும்
முன்னைக் காலம் முதலாக
முழங்கும் முத்து விநாயகரே!
திண்ணை எங்கும் தமிழ் முழங்கும்
திருவரு ளாலே பொருள் ஓங்கும்.

அன்னை காசி விசாலாட்சி
அருளும் பொங்கும் திருக்கோவில்
கொப்பனா பட்டி நகரத்தார்
கோலா கலமாய்க் கொண்டாடும்
ஒப்பிலா முத்து விநாயகரே!
உயர்பெரும் கோவில் உன்னதமே!
செப்பருங் குளமும் மரங்களுமே!
சிறந்தநற் கோலம் எழில் வளமே!
அப்பனே முத்து விநாயகனே!
அடிதொழு கின்றோம் காப்பாயே!

## கொப்பனாபட்டி - 19.1.2013

### (தெ. சொக்கலிங்கம்)

மேலப்பத்தூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து திருப்பத்தூர், பொன்னமராவதி வழியாக 55கி.மீ; இளையாற்றங்குடி, இரணிக்கோவில், வைரவன் கோவில் ஆகிய 3 கோவில்களைச் சேர்ந்த 425 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகிறார்கள்.

1934–ல் திருக்குட நன்னீராட்டு விழா நடந்த முத்துவிநாயகர் கோவில் நகரத்தார் பொதுக் கோவிலாகும்.

**இவ்வூரில் நகரத்தார் செய்த தர்மங்கள்:**

1. அழகி ஆச்சி ஊரணி, நல்லூரணி, புது ஊரணி, அம்மன் சேங்கை ஊரணி.
2. லெ. மெய்யம்மை ஆச்சி தொடக்கப்பள்ளி.
3. மு.நா. நாராயணன் செட்டியார் உயர்நிலைப் பள்ளி.
4. அ.மெ. மெய்யப்ப செட்டியார் பேரன்களால் நிருவகிக்கப்பெறும் 'கலைமகள் கல்லூரி' என்ற பெண்கள் பள்ளி. 'கலைச்செல்வி' என்ற பட்டம் தந்து நல்லதொரு கல்வி வழங்கிய புகழ் பெற்ற நிறுவனம் இது.
5. மு.நா. நாச்சம்மை ஆச்சி மருத்துவமனை.

பழநி அடிவாரத்தில் அமைந்துள்ள நகரத்தார் இராக்கால மடம் இவ்வூர் மு.ப.மு.குடும்பத்தார் தர்மம் ஆகும். இவ்வூரினரான எம்.பழநியப்பன், வி.சிங்காரம் ஆகியோர் I.N.A.-ல் பணியாற்றியவர்கள். கொன்னையூர் மாரியம்மன் கோவில் தக்காராகப் பணியாற்றிய மு. ராம.சேதுராமன் செட்டியாரால் இவ்வூரில் பொறியியல் கல்லூரி ஒன்று தொடங்கப் பெற்றுள்ளது. நகரத்தார் நிருவாகத்தில் செ.கரு. கல்யாண மண்டபம் ஏற்படுத்தப் பெற்றுள்ளது. முத்துமாரி அம்மனுக்குப் பங்குனி முதல் ஞாயிறு விழா சிறப்பாக நடத்தப்படுகிறது. இலட்சுமண சுவாமிகள் குருபூசை விழாவில் அருசோ கலந்துகொண்டு சிறப்புரை ஆற்றி உள்ளார்.

இங்கு 19.01.13ல் நிகழ்ந்த திருவாசக முற்றோதலில், வரவேற்புரை : சுப. சேதுராமன் செட்டியார், நன்றியுரை : முரு. வேலாயுதம் செட்டியார், நேரம் : காலை 10.30 முதல் 5.00 வரை, அருசோ தலைமையில் கலந்துகொண்டவர்கள் : 61 பேர்கள்.



# 54. வேகுப்பட்டி - 27.01.2013

## ஸ்ரீசிவகாமசுந்தரி சமேத சிவலோகநாதர் துதி

(பொற்கிழிக்கவிஞர் அரு. சோமசுந்தரன்)

உயர்வான கோவிலிது வேகுப் பட்டி
உத்தமராய் நகரத்தார் ஒற்று மையாய்
நயமாகச் சிவலோக நாத ருக்கும்
நயனத்தால் காக்கின்ற சுந்த ரிக்கும்
வியனுலகே பாராட்டக் கட்டி யுள்ள
வெற்றிமிகு கோவிலிலே வீற்றி ருக்கும்
செயநாதா சிவலோக நாதா காப்பாய்
சிவகாம சுந்தரியே காப்பாய் அம்மா

**திருவாசக முற்றோதல் 27.01.13**

வரவேற்புரை : கவிஞர் இராம. ஆண்டியப்ப செட்டியார், கண.முத்தையா செட்டியார், நன்றியுரை : இராம. வள்ளியப்ப செட்டியார் புள்ளிகள் : 514, அருசோ தலைமையில் கலந்துகொண்டவர்கள் : 76 பேர்.

## கவிஞர் இராம. ஆண்டியப்பன் இயற்றியது
## திருநாவுக்கரசர்
## இறைபணி மன்றத்தார்க்கு வாழ்த்து!

வாயில் முதல் குடிகொண்டு வழியெல்லாம் துணைநின்று
'கோயில் நகரமென'ப் பாரில் நற்பெயர் பெற்று
குக்கிராமம் இல்லாது நகர்வரிசை செல்லாத
நற்றலமாய் விளங்கும் ஊரே நாங்கள் வாழும் வேகுப்பட்டி
சைவமும் வைணமும் சரிநிகராய்க் கருதுவதால்
சிவனும் பெருமாளும் சிறப்பாக விளங்குகிறார்
அம்பாளும் முருகனும் அவர்களுடன் அய்யப்பனும்

அதிரூப ஆஞ்சநேயர் வரவேற்கத் திகழுகிறார்
ஆண்டு சிலகாலமாய் அருமையான தக்கார்கள்
வேண்டியதைச் செய்து வைத்து விழாக்கள் பல நடத்துகிறார்
ஆந்திரத்தில் பொருளீட்டி அத்தனையும் ஊருக்கென
ஆஞ்சநேயரும் பெருமாளும் கட்டித்தந்த பக்தருள்ளார்.

ஊரில் உள்ள மக்கள் ஒற்றுமையாய் வாழ்கிறோம்
உயர்ந்தவர் தாழ்ந்தவர் செல்வந்தர் ஏழையென்ற
வேறுபாடு இல்லாது கூடிவிழா நடத்துகிறோம்.

தொண்ணூற்றாறு ஊர்களிலே தக்கதொரு பெயர்வாங்கி
மக்களுக்குத் தெரியும்வகை மிக்கபணி செய்த நல்ல
மேலான பலரினையும் மனதார வாழ்த்துகிறேன்.

மேன்மை தரும் தெய்வங்களின் திருவடியை வேண்டுகிறேன்
சிற்றூராம் எங்கள் ஊர் சிவன்கோவில் தக்காராம்.
நந்தலத்துத் திருமகனார் பொன்மனத்து முத்தையா.
நல்லதொரு ஏற்பாட்டால் நடக்குமிந்த விழாவிற்கு

வந்திருக்கும் அனைவரையும் வரவேற்று மகிழ்கின்றேன்
நகரத்தார் ஊர்களிலே நற்பெயர் பெற்றுத் திகழும்
ஓங்காரக் குடியென்ற உயர் காரைக் குடியதனில்
திருநாவுக்கரசர் இறைபணி மன்றத்தார்

திருவாசக முற்றோதல் – திருவருளால் (இங்கு) நடக்கிறது.
தொல்லை இரும்பிறவி சூழும் தளைநீக்கி
அல்லல் அறுத்து ஆனந்தம் ஆக்கிய தேனை
அன்பர்கள் அறுபத்துக்கும் அருமையாய் ஓதுவது

அவனால்தான் கிட்டும் அப்பேற்றினைப் பெற்றோம் நாங்கள்
'அரு.சோ' என்று சொன்னால் அறியாதார் யாருமில்லை.
அத்தனை பட்டங்களையும் அள்ளித்தரப் பெற்றவர்கள்

(முத்தமிழ்ப் பேரறிஞர்' 'கவிஞர்கோ' 'பொற்கிழிக் கவிஞர்'
'கவிஞர்கோ' 'காசிஸ்ரீ' 'கைலைமணி')
அமைதியின் வடிவம அறிவின்சிகரம்
பகுதியாய் வாழ்வில் பக்தியையும் பரப்புகிறார்.

இராமாயணம், பாரதம் இன்பம்தரும் கந்தபுராணம்
பாராயணம் செய்யாமல் பகுத்து அதனை எளிமையாய்ப்
பிரியமாய் அனைவரும் கேட்கப் பத்துநாள் நடத்துபவர்

சரிநிகர் இவர்க்குச் சொல்ல செட்டிநாட்டில் சிலரே உள்ளார்!
தலைமையாய் அரு.சோ. நடத்த, தடம்பற்றி நாராயணனார்
தேயன்னா சொக்கலிங்கம், திரு. மு. அருணாசலம்
பானா ழானா (பழ). மாணிக்கம் பக்திநெறி உறுப்பினருடன்

பலநாளாய் நடத்துமிந்த முற்றோதல் மிகச் சிறப்பு
தமக்காக ஏதுமின்றி நகரத்தார் வாழ்வில் உயர
அனைத்துச் சமூகத்தினரும் அன்புடன் ஒன்றாய் வாழப்
பெண்டிரும் பிள்ளையாவும் கல்வி கேள்வியில் சிறக்க

மக்கள், மொழி, நாடு எக்காலமும் ஓங்க
வம்சம் ஓங்க ஒப்பற்ற இயக்கமாகும்
அற்புதமாய் அனைவரும் கூட ஆனந்த ராகம் கூட்டி
ஆண்டவனின் பாசுரத்தை அழகாகச் சொல்லக் கேட்க
வேண்டியவை நமக்குக் கிட்டும் வினையெல்லாம் தீர்ந்து போகும்
தாண்டவமாய் ஆடுகின்ற தில்லைக் கூத்தன் அருளும் சேரும்!
நகரத்தார் நாளும் உயர நல்லதொரு வேள்வியாக
நான்காண்டுத் திட்டமாக நற்பணியைச் செய்யுமிந்த
நாவுக்கரசர் மன்றத்தார்க்கு நல்வரவை நானும் கூறி
சிவலோக நாதர் பாகம் சிவகாம சுந்தரி அருளை
எந்நாளும் வழங்க வேண்டி இனிய வாய்ப்புக்கு நன்றி சொல்வேன்.

கவிஞர் இராம. ஆண்டியப்பன், வேகுப்பட்டி.

## வேகுப்பட்டி

(தெ. சொக்கலிங்கம்)

மேலப்பத்தூர் வட்டகை, காரைக்குடியிலிருந்து 45 கி.மீ. தொலைவு; இளையாற்றங்குடி, மாத்தூர், சூரக்குடி, பிள்ளையார்பட்டி ஆகிய 4 கோவில்களைச் சேர்ந்த 514 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர்.

**இவ்வூர் நகரத்தார்கள் செய்த திருப்பணி மற்றும் அறப்பணிகள்:**

1. சிவகாம சுந்தரி உடனாய சிவலோக நாதர் கோவில்.
2. சுப்பையா கோவில்.
3. ஐயப்பன் கோவில்.
4. ஊர்ப் பொதுக்கோவிலாகிய ஏன மாரியம்மன் கோவில்.
5. நகரத்தார் ஊருணி.
   (மெய்யஞ்செட்டி ஊருணி புதுப்பட்டி நகரத்தாரால் அமைக்கப்பட்டது)
6. சிவகாம சுந்தரி செந்தமிழ்ப் பாடசாலை.

சிவன்கோயிலில் பன்னிரு திருமுறைகளுக்கு ஒரு சன்னதி உள்ளது. இவ்வூரில் ஆறு நகரத்தார் வீடுகளில் ஆண்டுதோறும் புரட்டாசி மாதம் 8 நாட்கள் இராமாயணம் படிக்கப்படுகிறது. இவ்வூர் அழ.மு.செ. இராம.வள்ளியப்ப செட்டியார் I.N.A.ல் பணியாற்றியவர். இவ்வூர் சி.பழ. இராமநாதன் செட்டியார் மணமேற் பட்டியில் கண்ணப்ப ஐயனார் கோவிலைக் கட்டியுள்ளார்.



## 55. பூலாங்குறிச்சி - 15.09.2014

### ஸ்ரீசிங்கார வேலர்

### சீனிவாசப் பெருமாள் கோவில் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ. பாடியது)

பூலாங் குறிச்சி நகரத்தார்
புகழின் மிக்கார் பொருள் மிக்கார்
நாலா மிரமும் பன்னி ரண்டும்
நளின மான நற்கோவில்!
மாலாம் சீனி வாசனுடன்
மலையடி வாரம் முருகனுடன்
பாலாய் அருள்பொழி தெய்வமெலாம்
பாது காக்கும்! பதம் பணிவோம்!

## பூலாங்குறிச்சி - 15.09.2014

(தெ.சொக்கலிங்கம்)

மேலவட்டகை, காரைக்குடியிலிருந்து 42 கி.மீ. தொலைவு, சிவகங்கை மாவட்டத்தில் உள்ளது. இளையாற்றங்குடி, சூரக்குடி, இரணிக்கோவில், பிள்ளையார் பட்டி, வைரவன் கோவில், இலுப்பக்குடி ஆகிய 6 கோவில்களைச் சேர்ந்த 460 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர்.

புது ஊருணி மேல் கரையில் பெரியசுப, சின்னசுப, இராம ப.வ. வகையாரால் கட்டப்பட்ட பிள்ளையார் கோவில் நகரத்தார் பொதுவில் ஒப்படைக்கப்பட்டு இங்கு சுப்பிரமணியர், அம்பாள், சிவன், துர்க்கை சன்னதிகளுடன் நகரச் சிவன் கோவில் கட்டப் பட்டுள்ளது. வ.செ. வகையறாவால் கட்டப்பட்டுள்ள மீனாட்சி

சொக்கலிங்கம் கோவில் 80 ஆண்டுப் பழைமையானது. அறநிலையத்துறைப் பொறுப்பில் உள்ள அங்காள பரமேஸ்வரி அம்மன் கோவிலுக்கு நகரத்தார் முயற்சியால் குடமுழுக்கு விழா நடைபெற்றது. வெள்ளையன் செட்டியார் குடும்பத்தாரால் கட்டப்பட்ட பிள்ளையார் கோவிலும் உள்ளது.

ஊரின் வடபுறத்தில் பெரியசுப, சின்னசுப, ஆறுபேர் வீட்டைச் சேர்ந்தவர்கள் அமைத்த புது ஊரணியும், தென்புறத்தில் இராம.ப.வ. இராம. குடும்பம், பெத்த பெருமாள் குடும்பத்தாரால் அமைக்கப் பெற்ற பழைய ஊரணியும் உள்ளன.

துவார் சென்று கும்பிடும் பிள்ளையார்பட்டிப் பங்காளிகள் அடைக்காத்தாள் கோவில் வீட்டில் ஆண்டுக்கொரு முறை படைக்கிறார்கள். வி.பழ.வி. வினைதீர்த்தான் செட்டியார் வீட்டிலும், அரு.சி. ராம.வ. வீட்டிலும், வ.சொ. ஆனந்தி ஆச்சி வீட்டிலும் 8 நாட்கள் இராமாயணம் படிக்கப்படும். மாங்குடியார் வீடு ஆண்டுதோறும் குருபூசை நடத்துகிறார்கள்.

வ.செ. மீனாட்சி ஆச்சி தொடக்கப்பள்ளி வ.செ. குடும்ப நன்கொடையாகும். அரசு உயர்நிலைப்பள்ளிக்கு சுப.சொ. குடும்பத்தார் கட்டடம் கட்டித் தந்துள்ளார்கள்.

வ.செ.சிவலிங்கம் செட்டியாரிடம் இடமும் பணமும் நன்கொடையாகப் பெற்று தமிழக அரசு வ.செ. சிவலிங்கம் செட்டியார் அரசினர் கலைக் கல்லூரியை அமைத்துள்ளது.

வ.சொ. சொக்கலிங்கம் செட்டியார் – மீனாட்சி ஆச்சி ஆண்கள் மருத்துவமனைக்கு வ.சொ.

குடும்பத்தார் கட்டடம் கட்டிக் கொடுத்துள்ளனர். பெண்கள் மருத்துவமனை வ.ராம. குடும்ப நன்கொடையாகும். வ.செ. சிவலிங்கம் செட்டியார் வீடு, பெரிய சுப. வீடு, ராம.ப.ராம.ப வீடு ஆகியவை கலையழகு மிக்க வீடுகளாகும். இவ்வூர்க் கல்வெட்டுக்கள் சில, தொல் பொருள் ஆய்வுத்துறையினரால் கண்டுபிடிக்கப்பட்டுத் தமிழக வரலாற்றுக்கு உதவியுள்ளமையும் குறிப்பிடத் தக்கது.

திருவாசக முற்றோதல் இங்கு 15.9.2014 காலை 9.30 மணிக்குத் தொடங்கி மாலை 4.30 மணிக்கு நிறைவேறியது. 80 பேர் கலந்து கொண்டனர். அருசோ தலைமை.



## 56. செவ்வூர் - 24.02.2013

### ஸ்ரீ மீனாட்சி சொக்கலிங்கர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)

குறைவிலாச் செவ்வூர் கோதில்லா நகரில்
கோவிலாய்க் கொண்டமீ னாட்சி!
நிறைவெலாம் கொண்ட நகரத்தார் மக்கள்
நெடுகிலும் வணங்கிடும் சொக்கர்!
துறையெலாம் சென்று தொழிலெலாம் வென்று
சோணையன் துணைமி னாலே.
முறையுடன் வாழும் செவ்வூரை நன்கு
முன்னேற்ற மூர்த்தி யேவா!
விருந்தெலாம் ஓம்பி வேள்விகள் செய்து
வெற்றியாய் வாழும் மக்கள்
அருந்தவே நித்தம் அமுதெலாம் படைக்கும்
அன்னையே ஸ்ரீமீ னாட்சி
பொருந்தியே செவ்வூர் புள்ளிகள் வளர
பொருளுடன் அருளுமே பொலிய
இருந்துனைத் தொழுதோம்; எழுந்தருள் செய்வாய்
ஈசனே! எழுந்து வா வா.

## செவ்வூர் - 24.02.13

(தெ. சொக்கலிங்கம்)

மேலவட்டகை; காரைக்குடியிலிருந்து திருப்புத்தூர், கண்டவராயன்பட்டி வழியாக 40 கி.மீ. சூரக்குடி, இரணிக்கோவிலைச் சேர்ந்த 256 புள்ளிகள் வாழ்ந்து வருகிறார்கள்.

நகரத்தார் மீனாட்சி சொக்கலிங்கர் திருக்கோவில் நகரச்சிவன் கோவிலாகும். இங்குள்ள லிங்கம்

புதுக்கோட்டை மாவட்டம் கொடும்பாளூரிலிருந்து செவ்வூர் மு.ப.ராம. இராமனாதன் செட்டியாரால் கொண்டு வரப்பட்டு வாலஸ்தாபனத்தில் வைத்துப் பூசைகள் 1920 முதல் நடைபெற்றது. சுவாமி அம்மன் கல்மண்டபம் இரண்டும் சொ.ராம. சொக்கலிங்கம் செட்டியாராலும், இதர மண்டபங்கள் நகரத்தார்களாலும் கட்டப்பெற்று 11.4.1932 அன்று முதற் குடமுழுக்கு விழா நடைபெற்றது. சுப்பிரமணியர் கோவில் கும. இராம நாதன் செட்டியார் என்ற கதிரேசன் செட்டியாரால் கட்டப்பெற்றது. 55 ஆண்டுகளுக்கு முன் நகரத்தாரிடம் ஒப்படைக்கப்பெற்றது. ரோட்டுப் பெருமாள் கோவில் என்னும் ஸ்ரீவரதராசப் பெருமாள் கோவில் 1994-ல் நகரத்தார்களால் திருப்பணி செய்யப்பட்டது.

சுப்பிரமணியர் கோவிலில் இரண்டாண்டுகளுக்கு ஒரு முறை மகேஸ்வர பூசை நடைபெறும். ரோட்டுப் பெருமாள்கோவிலில் புரட்டாசி சனிக்கிழமை அன்று நகரத்தார் பொதுவில் அன்னதானம் செய்யப்படுகிறது.

கும. பெரி. பழ. குடும்பத்தாரால் பள்ளிக்கூடம் கட்டப்பெற்று அரசினர் பள்ளியாக பழநியப்பன் சானகி ஆச்சி என்ற பெயருடன் நடுநிலைப்பள்ளியாக நடைபெற்று வருகிறது. ஆத்திரம்பட்டியிலும், மலம்பட்டியிலும் செ.இராம. குடும்பத்தார் பள்ளியும் கிணறும் அமைத்துள்ளனர். மு.கும.பெரி.சிதம்பரம் செட்டியார் நினைவைப் போற்றும்வண்ணம்அன்னார் மகன் இரத்தினம் என்ற பெரிய கருப்பன் செட்டியார் தொடக்கப்பள்ளிக்கு பரியா மருது பட்டியில் கட்டம் கட்டிக் கொடுத்துள்ளார். மலம்பட்டி பிள்ளையார் கோவில் கும.இராமநாதன் செட்டியாரால் கட்டப் பட்டதாகும். சோணையன் கோவிலும் அதையொட்டிய திருமண மண்டபமும் நகரத்தார் பொதுவாகும்.

இங்கு சிவன் கோவிலில் அருசோ தலைமையில் நிகழ்ந்த திருவாச முற்றோதலில், வரவேற்புரை; நன்றியுரை : P.A. நாகப்பன், நேரம் : காலை 5.30 முதல் மாலை 5.30 மணி வரை, கலந்துகொண்டவர்கள் : 78 பேர்கள்.

'எவ்வூரு போனாலும் செவ்வூரு
போக மனம் செல்லுமே - அவ்வூரார்
பார்த்திருக்கத் தின்னார்
பசிப்போர் முகம் பார்ப்பார்
கோத்திரத்திற் குள்ள குணம்"

- பாடுவார் முத்தப்பர்

இவ்வூர்க்கோவிலில் நிகழ்ந்த இத்திருவாசக விழாவில் உள்ளூர் மக்கள் திரளாகக் கலந்து கொண்டனர். கோவில் கும்பாபிஷேகம் விரைவில் நிகழவும், இவ்வூர்ப் பையன்களுக்கு விரைவில் திருமணம் நிகழவும் வாழ்த்திப் பாடுமாறு அருசோ ஐயாவை மக்கள் வேண்டினர். அதன்படி அருசோ ஐயா பாடல் பாடிக் கொடுத்தார். பசு மாடு வாங்கி கோவிலில் கட்டச் சொன்னார். அதன்படி மக்கள் உடனே செய்தனர்; விரைவில் கும்பாபிஷேகம் நிகழ்ந்தது. அதில் அருசோ ஐயா கலந்து கொண்டு வாழ்த்தினார். திருவாசக நிகழ்ச்சிக்குப் பிறகு 12 பையன்களுக்குத் திருமணம் நிகழ்ந்ததாக மக்கள் கூறினர். அருசோ ஐயா எழுதிய பாடலை கையளவு அட்டையில் 5000 பிரதிகள் அச்சிட்டு ஓர்அன்பர் மக்களுக்கு வழங்கினார்.



16

## 57. மிதிலைப்பட்டி - 09.03.2013

### ஸ்ரீசிவயோகவல்லி சமேத
### ஸ்ரீ ஆவுடை நாதர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

கவிராயர் பரம்பரைக்கு முதன்மை தந்து
காக்கின்ற சிவயோக வல்லி யோடு
புவிகாக்கும் ஆவுடைய நாதா! மிதிலைப்
பொன்பட்டி காக்கின்ற தேவ தேவா!
செவிகுளிர வாசகங்கள் கேட்கும் தேவா!
திருவருளால் பொலிகின்ற மிதிலைப் பட்டி
குவிகின்ற செல்வத்தால் நகரத் தார்கள்
குலமோங்க ஊரோங்க அருளு வாயே!

## மிதிலைப் பட்டி - 09.03.2013

(தெ. சொக்கலிங்கம்)

மேலப்பத்தூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து கீழச் சிவல்பட்டி வழியாக 30 கி.மீ. மாத்தூர், இளையாற்றங் குடி, இரணிக்கோவில், பிள்ளையார்பட்டி, சூரக்குடி ஆகிய 5 கோவில்களைச் சேர்ந்த 311 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகிறார்கள். சிவயோகவல்லி உடனாய ஆவுடையநாதர் சிவன் கோவிலாகும். 1926-ல் அழகிய சிற்றம்பலக் கவிராயரால் கட்டப்பெற்ற இக்கோவிலுக்கு நகரத்தார்களால் கல்திருப்பணி செய்யப்பெற்று 29.1.1940-ல் முதல் குடமுழுக்கு விழா நடைபெற்றது. 10.06.2013-ல் ஐந்தாவது குடமுழுக்கு விழா நடைபெற்றது.

**இவ்வூர் நகரத்தார்கள் செய்த திருப்பணிகள் மற்றும் தர்மங்கள்.**

1. சிந்தாமணிப் பிள்ளையார் கோவில் மற்றும் ஊரணி.

2. சித்திவிநாயகர் கோவில் மற்றும் ஊரணி.
3. சிறுகாட்சி விநாயகர் கோவில்.
4. பொய்யாமொழி விநாயகர் கோவில்.
5. ஆவுடையார் ஊரணி.
6. வரதராசப் பெருமாள் கோவில் மற்றும் ஊரணி.
7. சிவலிங்கம் மீனாட்சி தொடக்கப்பள்ளி.
8. சிவயோகபுரத்தில் வள்ளியம்மை இராமசாமி ஊராட்சி ஒன்றியத் தொடக்கப்பள்ளி.
9. நந்தவனம்.
10. பசுமடம்.
11. வள்ளியம்மை ஆச்சி இலவச திருமண மண்டபம்.
12. ஐயப்பன் திருக்கோவில்.
13. ஸ்ரீசிவகாளி அம்மன் திருக்கோவில்.
14. நகரத்தார் மண்டபம், குன்றக்குடியில் மிதிலைப்பட்டி நகரத்தார் மடம்.
15. திருக்கோளக்குடியில் குடைவரைப் பிள்ளையார் கோவில், குடிநீர் ஊரணி.
16. சிவன் கோவிலில் தை மாதம் 2-ம் தேதி பத்ர மூர்த்தி சுவாமி புறப்பாடு நடைபெறும் நித்தியப்படி 5 கால பூசைகள் நடைபெற்று வருகின்றன.
17. ஐம்பெரும் காப்பியங்களுள் சிலப்பதிகாரம், மணி மேகலை ஆகிய இருகாப்பியங்களுக்கும் இவ்வூர்க் கவிராயர், தமிழ் தாத்தா உ.வே.சா. அவர்களுக்கு மூல ஏட்டுச் சுவடிகள் தந்து சரித்திரப்புகழ் பெற்றுள்ளார்.
18. மிதிலை மீனாட்சி சுந்தரேஸ்வரர் டிரஸ்ட்.

19. மிதிலை கல்வி அறக்கட்டளையால், மிதிலை மழலையர் மற்றும் தொடக்கப் பள்ளி (ஆங்கில வழிக்கல்வி) ஒன்று 24.06.2010-ல் நகரத்தார் பெருமக்களால் தொடங்கப்பெற்று அவர்களது நிர்வாகத்தில் சிறப்பாக இயங்கி வருகிறது.

இளையாற்றங்குடி கழனிவாசல் குடியார், மாத்தூர் குளத்தூரரார், மாத்தூர் குளத்தூரில் க.யெ. ஐயாக்கள் வீடு படைக்கும் 3 பொதுப்படைப்புக்கள் இவ்வூரில் நடைபெறுகின்றன. கழனிவாசல் குடியார் வீட்டில் தெண்டாயுத பாணிக்கும், படைக்கப்படும் பெண் தெய்வத்திற்கும் தனித்தனி அறைகள் உள்ளன. படைப்பு நடத்தும் பங்காளிகள் பொங்கலன்று வீட்டில் பொங்கல் வைத்த பிறகே தத்தம் வீடுகளில் பொங்கல் வைப்பார்கள். புரட்டாசி மாதம் சிவன் கோவிலில் நகரத்தார்களால் இராமாயணம் படிக்கப்படுகிறது. மேலும் சிவகாளி அம்மனுக்கு தனிக்கோவில் நகரத்தார்களால் கட்டப்பட்டு நித்தியப்படி பூசைகள் நடைபெற்று வருகின்றன. காளி அம்பாளுக்கு வருடா வருடம் துர்க்கா சூக்த ஹோமம் தொடர்ந்து நடந்து வருகிறது. அனைத்துப் பொது நிகழ்ச்சிகளிலும் பக்தர்களுக்கு உணவு வழங்குவது தனிச்சிறப்பாகும்.

**மிதிலைப்பட்டி பற்றி உ.வே.சா**

தமிழ் வளர்த்த பூமி, தமிழ்ப் பூங்கா, தமிழ்த்தெய்வம் கோவில் கொண்டுள்ள ஊர் என்கிறார் உ.வே.சா. மிதிலைப் பட்டியை நான் எந்தக் காலத்தும் மறக்க முடியாது. மற்ற இடங்களில் மணிமேகலைக்குக் கிடைத்த ஏடுகளில் சில பாகங்கள் குறைந்தும் திரிந்தும் போயிருந்தது. எல்லாப் பாகங்களையும் ஒழுங்குபடச்

செய்ததும் செந்தமிழ்ச் செல்வியின் மணிமேகலையை அவள் அணிந்து கொள்ளும் வண்ணம் செப்பஞ் செய்து கொடுத்ததும் மிதிலைப்பட்டி பிரதியே.

“அழகிய சிற்றம்பலக்கவிராயருக்கு மிதிலைப்பட்டி கிராமத்தை ஜமீன்தார் வெங்களப்ப நாயக்கர் கொடுத்தார். அவரால்தான் இன்று நல்ல நிலையில் இருக்கிறோம். வண்டிக்காரன் சம்பளம் ரூ.3/– பழைய சோறு, தங்களுக்கு வண்டியோட்டியது” என்பார்களாம். கவிராயர்கள் பலர் இவ்வூரில் இருந்திருக்கிறார்கள். அவர்களிடமிருந்து தான் பாடுவார் முத்தப்பர் தமிழ் கற்றார்.

அழகிய சிற்றம்பலக் கவிராயர் வீட்டில் கலைமகளும் திருமகளும் ஒருங்கே களிநடம் புரிந்தனர்.

09.03.13ல் அருசோ தலைமையில் சிவன் கோவிலில் நிகழ்ந்த திருவாசகம் முற்றோதல், வரவேற்புரை : Ky.CT. பழநியப்ப செட்டியார், நன்றியுரை : ஆர்.எம். ஏகப்பன், நேரம் : காலை 9.30 முதல் 5.30 மணிவரை, கலந்து கொண்ட நபர்கள் : 93 பேர்.



## 58. ராங்கியம் - 24.03.2013

### சிவகாமி அம்மை பூமிநாதர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)

பதினாலாம் நூற்றாண்டைச் சேர்ந்த கோவில்
பழைமைமிகு சிவகாமி அம்மை கோவில்
அதிகாரம் அறநிலைய ஆட்சி கையில்!
ஆனாலும் நகரத்தார் அறத்தி னாலே
சிதிலங்கள் ஆகாமல் ராங்கி யத்துச்
சிவன்கோவில் திகழ்கிறது. பூமி நாதர்
நதிகங்கை போல்பொங்கி நாடு காக்க
நாம் தினமும் வாசகங்கள் பாடுவோமே!

### நகர ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோவில் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)

நகரத்தார் என்றைக்கும் முருக னுக்கு
நயமான அடிமை எனச் சொல்லிக் கொள்வர்
பகரத்தான் ஒண்ணாத கூட்டம் இன்று
பழநிக்கு நடக்கிறது; முருகன் கோவில்
சிகரமெனத் திகழ்வதனால் ராங்கி யத்தில்
செல்வரெலாம் திருப்பணிகள் செய்துள் ளார்கள்.
அகரத்தை நாவசைக்கக் கற்றுத் தந்த
அய்யனே! சுப்ரமண்யா! காப்பாய் அய்யா!

## ராங்கியம் - 24.3.2013

(தெ. சொக்கலிங்கம்)

மேலப்பத்தூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து கீழச் சிவல்பட்டி வழியாக 36 கி.மீ; இராசசிங்கமங்கலம் என்பது இராங்கியத்தின் பழைய பெயராகும்.

இளையாற்றங்குடி (கழனிவாசல் - ஒக்கூர்) நேமங்கோவில், இலுப்பக்குடி, இரணிக்கோவில் ஆகிய 4 நகரக்கோவில்களைச் சேர்ந்த 400 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகிறார்கள். மிகப் பழைய சிவன்கோவில் ஒன்று உள்ளது. இக்கோவில் 14-ம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்ற கல்வெட்டுகள் உள்ளன. சிவகாமியம்மை உடனாய பூமிநாதர். இக்கோவில் தமிழக அரசின் அறநிலையத்துறையால் நிருவகிக்கப்படுகிறது. ஆயினும் இக்கோவிலுக்குரிய ஒருகாலப் படித்தரம் இவ்வூர் நகரத்தாரால் வழங்கப்படுகிறது.

சுப்பிரமணியசுவாமி கோவில் நகரத்தார்களுக்குப் பொதுவாகக் கட்டப்பட்டுள்ளது. இவ்வூரில் உள்ள பெரிய கருப்பணசுவாமி கோவிலைப் பல்வேறு ஊர்களைச் சேர்ந்த நகரத்தார்களும் குலதெய்வக் கோவிலாகக் கொண்டு வழிபடுகின்றனர். நகரத்தார் பொதுவில் 1948-ல் தொடங்கப் பெற்ற சிவகாமி அம்பாள் ஆரம்ப வித்யாசாலை மற்றும் சிவகாமி அம்பாள் உயர்நிலைப்பள்ளியும், ராங்கியம் நகரத்தார்/ களால் ராங்கியம் சாரிடபிள் டிரஸ்டின் கீழ் நிருவகிக்கப்படுகின்றன. வ.நா. வள்ளியப்ப செட்டியார் சொந்தமாக ஒரு மருத்துவமனையைத் தொடங்கி (1944-ல்) 20 ஆண்டுகள் நடத்தியபின் அதனை அரசிடம் ஒப்படைத்து, தற்போது அரசு மருத்துவமனையாக இயங்கி வருகிறது.

சுப்பிரமணிய சுவாமி கோவிலில் வைகாசி விசாகம் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. இள்ளயாற்றங்குடி கழனிவாசல் பிரிவைச் சேர்ந்த இராங்கியம், கண்டவராயன்பட்டி, குழிபிறை, கொப்பனாபட்டி, பூலாங்குறிச்சி, விரையாச்சிலை, வேகுப்பட்டி, குருவிக்

கொண்டான்பட்டி, வலையப்பட்டி ஆகிய 9 ஊர்களைச் சேர்ந்த நகரத்தார்கள் 2 ஆண்டுகளுக்கு ஒருமுறை ஆடி மாதம் இவ்வூரில் கூடி வளத்தி அம்மன் படைப்பினைப் படைக்கின்றனர்.

இலுப்பக்குடியைச் சேர்ந்த இராங்கியம், குழிபிறை, பனையபட்டி ஆகிய ஊர்களைச் சேர்ந்த நகரத்தார்கள் 2 ஆண்டுகளுக்கு ஒரு முறை ஆடி மாதம் கூடி அடைக் காத்தாள் படைப்புப் படைக்கிறார்கள்.

இவ்வூரைச் சேர்ந்த மு.நா. நாகப்ப செட்டியார் I.N.A.ல் பணிபுரிந்தவர். வ.நா.அ.சுப்பிரமணியன் செட்டியார் தஞ்சாவூர் மாரியம்மன் கோவிலுக்கு இராசகோபுரம் கட்டி, குடமுழுக்குச் செய்துள்ளார். நா.அ. நாகப்ப செட்டியார் குடும்பத்தினர் அம்மாபட்டி கருப்பர் கோவில் குடமுழுக்கை நிகழ்த்தியுள்ளனர். இவ்வூரைச் சேர்ந்த V.N. சிதம்பரம் செட்டியார் மதுரை மீனாட்சி அம்மன் கோவிலுக்குத் தக்காராக இருந்து கிருபானந்த வாரியார் அவர்களால் 'மீனாட்சி திருமைந்தன்' என்ற சிறப்புப் பெயர் பெற்றார்.

இங்கு 24.3.13ல் அருசோ தலைமையில் நிகழ்ந்த திருவாசகம் முற்றோதல், வரவேற்புரை : நா.வ.சித.இராமநாதன், நன்றியுரை : Architect R.R. சிவா, நேரம் : காலை 10.15 முதல் 5.30 மணி வரை., கலந்துகொண்டவர்கள் : 158 பேர்.



## 59. குருவிக்கொண்டான்பட்டி - 20.4.13

### குருவிக்கொண்டான்பட்டி நகர ஸ்ரீ மீனாட்சி சொக்கலிங்கர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)

நிறைகுளமும் தென்றலுமாய்த் திகழும் கோவில்
நெடும்புகழின் நகரத்தார் நிறைந்த கோவில்
குறைவில்லா நகரத்தார் குருவிக் கொண்டான்
கோவிலிலே மீனாட்சி சொக்க லிங்கர்
மறைஓத முறை ஓத மக்கள் நித்தம்
மாண்பாகப் பூசிக்க மகிழ்ச்சி வெள்ளம்!
துறைதோறும் முன்னேறித் தொண்டு செய்யச்
சொக்கலிங்க மீனாட்சி அருளுவாயே!

## குருவிக் கொண்டான்பட்டி - 20.4.2013

(தெ.சொக்கலிங்கம்)

மேலப்பத்தூர் வட்டகை, காரைக்குடியிலிருந்து 33 கி.மீ. இளையாற்றங்குடி மாத்தூர், வைரவன்கோவில், சூரக்குடி, இரணிக்கோவில், பிள்ளையார்பட்டி, இலுப்பக்குடி ஆகிய 7 கோவில்களைச் சேர்ந்த 330 புள்ளிகள் வாழ்ந்து வருகிறார்கள். மீனாட்சி சொக்கலிங்கர் கோவில் இவ்வூர் நகரச்சிவன் கோவிலாகும். இக்கோவில் குடமுழுக்கு விழா சிறப்பாக நடத்தப்பட்டு வருகிறது. மு.சி. சதாசிவம் செட்டியார் கட்டியுள்ள ஆத்திரம் பட்டி செல்வ விநாயகர் கோவில் இவ்வூரில் உள்ளது. அண்மையில் உள்ள கீரணிப்பட்டி முத்து மாரியம்மன் கோவில் இளையாற்றங்குடி தேவஸ்தான நிருவாகத்தில் உள்ளது. கீரணிப்பட்டி திருவிழாவில் முதல் 5 நாட்கள் மு.சி. முத்துக்கருப்பன் செட்டியார் பசுமடத்திலும், பின் 5 நாட்கள் சிவ. கரு.

முத்தையா செட்டியார் பசு மடத்திலும் நகரத்தார் விருந்து நடைபெறும். வீரஆஞ்சநேயர் கோவிலை வயி.லெ.வயிரவன் செட்டியார் கட்டிப் பராமரித்து வருகிறார்கள். கவிமணி மன்றம் 54 ஆண்டுகளுக்கும் மேலாக இவ்வூரில் சிறப்பாகப் பணியாற்றிவரும் இலக்கிய அமைப்பாகும்.

**இவ்வூர் நகரத்தார் செய்த திருப்பணி மற்றும் அறப்பணிகள்:**

1. சொக்கலிங்கம் மீனாட்சி நடுநிலைப் பள்ளி.
2. அ.சொ. சொக்கலிங்கம் செட்டியார் அரசு மருத்துவமனை.
3. திருச்சி மன்னார்புரத்தில் அமைந்துள்ள பிள்ளையார் கோவில் மண்டபத்திருப்பணி.
4. திருக்கோளக்குடியில் திருமடம்.
5. வைரவன் கோவிலாரும், பிள்ளையார்பட்டிக் கோவிலாரும் இவ்வூரில் அவரவர்களுக்கான பொதுப்படைப்பு படைத்து வழிபடுகின்றனர். அவரவர்களுக்குத் தனித்தனிப் படைப்பு வீடு உள்ளது.

இங்கு சிவன் கோவிலில் 20.4.13ல் அருசோ தலைமையில் நிகழ்ந்த திருவாசம் முற்றோதல், வரவேற்புரை , நன்றியுரை: சோம.முத்துராமன் என்ற சோலை, முன்னாள் தலைமை ஆசிரியர், நேரம் : காலை 9.10 முதல் 5.00 மணி வரை, கலந்துகொண்டவர்கள் : 76 பேர்.



## 60. இளையாற்றங்குடி - 28.04.2013

### நித்திய கல்யாண சமேத கைலாசநாதர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

காவிரிப்பூம் பட்டினத்தை விட்டு வந்த
கவினார்ந்த நகரத்தார் சிறிது காலம்
காவிரியைக் கற்பனையில் எண்ணிக் கொண்டு
காலார இளைப்பாறி இருந்த தாலே
காவிரிக்குச் சமமாகக் குளங்கள் வெட்டிக்
கைலாச நாதர்க்குக் கோவில் கட்டிக்
காவிரிபோல் இளையாற்றங் குடியில் வாழ்ந்தார்
கல்யாணி, கைலாச நாதர் போற்றி!

## இளையாற்றங்குடி - 28.4.2013

(தெ. சொக்கலிங்கம்)

காரைக்குடியிலிருந்து 25 கி.மீ. தொலைவு; தேவர்களின் இளைப்பினை ஆற்றியதால் இளைப்பாற்றங்குடி என்று பெயர் கொண்டு பின்னாளில் இளையாற்றங்குடி என்று வழங்குவதாகத் தலபுராணம் கூறுகிறது. இளைய ஆதன்குடி என்பதே இளையாத்தங்குடி ஆயிற்று என்பார் கம்பன் அடிப்பொடி. (சா.க.)

காவிரிப் பூம்பட்டினத்தில் வாழ்ந்த கீழத்தெரு ஒருவழியாருக்கு இளையாற்றங்குடி நகரமும் அவ்வூர்க்கோவிலும் பாண்டிய மன்னர்களால் கி.பி. 707-ல் வழங்கப்பட்டன. பின்னர் மற்ற எட்டுக் கோவில் பிரிவுகளாகவும் இவர்கள் பிரிந்தனர். இக்கோவிலார் ஏழு உள் பிரிவுகள் உடையவர்கள். அவை:

1. ஒக்கூருடையார்,
2. பட்டினசாமியார்

3. பெருமருதூருடையார்
4. கழனிவாசல்குடியார்
5. கிங்கிணிக் கூறுடையார்.
6. பேரசெந்தூருடையார்.
7. சிறுசேத்தூருடையார்.

இந்த ஏழு உட்பிரிவுகளும் சமூக உறவில் தனித்தனிக் கோவில் போலவே நடந்து கொள்வர். மொத்தப் புள்ளிகள் 8120. இறைவன் – கைலாசநாதர், இறைவி – நித்ய கல்யாணி. இக்கோவிலின் ஏழு உட்பிரிவினருக்கும் தனித்தனிப் பிள்ளையார் கோவிலும் ஊருணியும் உள்ளன. பட்டின சாமிப் பிரிவினருக்குத் தனியே ஒரு சிவன் கோவிலும் கழனிவாசல் குடியாருக்குத் தனியே ஆதிகேசவப் பெருமாள் கோவிலும் உள்ளன. இங்கு அனைத்துப் பிரிவினருக்கும் பொதுவாக ஒரு நகரவிடுதியும் ஒக்கூராருக்கு ஒரு நகர விடுதியும் கழனிவாசல் குடியாருக்கு ஒரு நகரவிடுதியும் உள்ளன.

கணேசப் பண்டிதர் இயற்றிய இளசைப் புராணம், விசுவநாத ஐயர் இயற்றிய இளையாற்றங்குடி மான்மியம் ஆகியவை இக்கோவிலின் தொடர்பான இலக்கியங்கள். கல்வெட்டுக்கள் இக்கோவிலை கல்வாயிலாண்ட நாயனார் கோவிலென்றும், இறைவனைக் கைலாச முடைய நாயனார் என்றும், இறைவியைத் திருக்காமக் கோட்ட நாச்சியார் என்றும், பழுதுபட்ட பழைய பெருமாள் கோவிலை விண்ணவர் எம்பெருமான் கோவிலென்றும் குறிப்பிடுகின்றன.

**திருவிழாக்கள்:**

1. சித்திரை மகம் நடராசருக்கான வருடாபிசேகம்
2. நால்வர் குருபூசை,
3. சிவராத்திரி
4. ஆருத்ரா தரிசன விழா
5. கிரணிப்பட்டி முத்துமாரியம்மன் கோவில் இளை யாற்றங்குடி தேவஸ்தான நிருவாகத்தில் உள்ளது.

இங்கு அருசோ தலைமையில் 28.04.13ல் நடந்த திருவாசம் முற்றோதல் நிகழ்ச்சியில், வரவேற்புரை : கி.நா. கண்ணன், நன்றியுரை : பி.எல். முருகப்பன், நேரம் : காலை 9.30 மணி முதல் 4.30 மணி வரை, கலந்துகொண்டவர்கள் : 81 பேர்

**இளையாற்றங்குடி புள்ளிகள்**

| | | |
|---|---|---|
| ஒக்கூர் | – | 1740 |
| கழனிவாசல்குடி | – | 2300 |
| பட்டினசாமி | – | 1691 |
| கிங்கிணிக்கூருடையார் | – | 783 |
| பேரசந்தூருடையார் | – | 150 |
| சிறுசேத்தூருடையார் | – | 6 |
| பெருமருதூருடையார் | – | 1450 |
| | | 8120 |



## 61. இரணிக்கோவில் - 06.06.2013

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

திரும்புகின்ற திசையெல்லாம் சிற்பத்தின்
களஞ்சியமாய்த் திகழும் கோவில்
இரும்பு மனம் கொண்டோரும் இளகிடவே
செய்கின்ற இரணிக் கோவில்
கருணைமன நகரத்தார் கற்கண்டாய்ச்
செய்துள்ள கயிலை ஈது!
கரும்பெனவே வந்திங்கே ஆட்கொண்டார்
தேவிபதம் தொழுவோம் நாமே!

## இரணிக்கோவில் - 6.6.2013

காரைக்குடியிலிருந்து வைரவன்பட்டி விராமதி வழியாக 24 கி.மீ., மொத்தப் புள்ளிகள் 4500. இளையாற்றங்குடிக் கோவிலைச் சேர்ந்த திருவேட்பூருடையார் என்னும் பிரிவினரான சகோதரர்களில் மூத்தவர் வழியினர் இரணியூர்க் கோவிலைத் தமக்குரிய தனிக்கோவிலாகக் கொண்டு வாழலாயினர். இளையவர் வழியின்ர் பிள்ளையார்பட்டிக் கோவிலைத் தமக்குரிய தனிக்கோவிலாகக் கொண்டு வாழலாயினர். நரசிம்ம அவதாரத்தில் இரணியனைக் கொன்ற பாவம் நீங்கத் திருமால் சிவபெருமானை இத்தலத்தில் வழிபட்டதாகக் கூறும் புராணக் குறிப்பின் அடிப்படையில் இவ்வூர் இரணியூர் என வழங்கப்பட்டது. 13-ம் நூற்றாண்டில் இரணியூர்க் கோவில் நிருவாகத்தை நகரத்தார் ஏற்றுக் கொண்டனர்.

இப்போது இக்கோவிலைச் சேர்ந்த நகரத்தார்கள் 35 ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர். இக்கோவிலைச்

சார்ந்து நீல்மேகப் பெருமாள் கோவில், பத்ரகாளி அம்மன் கோவில், நகரவிடுதி ஆகியவை அமைந்துள்ளன. சிவன் கோவிலுக்கு கல்ஊரணியும், பெருமாள் கோவிலுக்குப் பெருமாள் ஊரணியும், காளியம்மன் கோவிலுக்கு அம்மன் சேங்கை என்றும் திருவேட்புடையார் ஊரணியும் உள்ளன. 1926-ம் ஆண்டு இந்தியக் கல்வெட்டு அறிக்கையில் இரணியூர்க் கல்வெட்டுக்கள் 13 இடம் பெற்றுள்ளன. இக்கல்வெட்டுகளில் இக்கோயில் கல்வாயிலாண்ட நாயனார் கோவிலென்றும் இங்குள்ள இறைவன் பெயர் ஆட்கொண்ட ஈஸ்வரமுடைய நாயனார் என்றும் காணப்படுகின்றது.

**இக்கோவிலுக்குத் தனிச் சிறப்புக்கள் ஆறு:**

1. கருவறை அமைப்பு,
2. தூண் சிற்பங்கள்
3. கோட்டச் சிற்பங்கள்
4. பாரதமாதா, தேசியக்கொடி, இராட்டை காந்தி (காலத்திற்கேற்பப் புதிய சிற்பங்கள்.)
5. நிலைவறை, கற்சாளரம், கற்குழாய் அமைத்தல்.
6. ஐம்பொன் சிற்பங்கள் (27 சிற்பங்கள்)

**தூண் சிற்பங்களில் மிகச் சிறந்தவை:**

1. காலசம்கார மூர்த்தி.
2. முப்புரம் எரித்தவர்.
3. உமையொருபாகன்.

வேறு எந்தக் கோவிலிலும் காண்பதற்கு அரியதான எட்டுத் திக்குகளுக்கும் உரிய கடவுளர்களின் சிற்பங்கள் ராஜகோபுர தளத்தில் உள்ள கோட்டங்களில் காணப் படுகின்றன. கோவிலின் முன்பகுதியான அஷ்டலெட்சுமி

மண்டபம், நகரத்தார் வளர்த்த ஓவியக்கலைக்கும் சிற்பக்கலைக்கும் சான்றாக அமைந்துள்ளது. பேரூர், கிருஷ்ணாபுரம் சிற்பங்கள் போலச் செட்டி நாட்டின் சிற்பக் களஞ்சியமாக இரணிக்கோவில் திகழ்கிறது.

இங்கு அருசோ தலைமையில் 06.06.13ல் நிகழ்ந்த திருவாசகம் முற்றாதல், வரவேற்புரை : அரு. சபாரெத்தினம் செட்டியார், நன்றியுரை : கொப்புடையாள், பழநியப்ப செட்டியார், நேரம் : காலை 9.10 முதல் 4.30 மணி வரை, கலந்துகொண்டவர்கள் : 60 பேர்.



## 62. ஆவினிப்பட்டி - 01.06.2013

### ஆவினிப்பட்டி ஸ்ரீமீனாட்சி சொக்கலிங்கர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)

ஒளியோடு காற்றாட உயர்மண்ட பத்தினிலே
உயிராய் நின்று
வழிகாட்டும் மீனாட்சி சொக்கேசா உன்னடியில்
வந்தோர்க்கு என்றும்
துளிகூடத் துயரின்றி நலம் கூட்டி நகரத்தார்
தொழிலைக் காத்து
விழிகாக்கும் இமையால்ஆ வினிப்பட்டி ஈசா நீ
வெற்றி ஆள்வாய்.

## ஆவினிப்பட்டி - 01.06.2013

(தெ. சொக்கலிங்கம்)

மேலவட்டகை; காரைக்குடியிலிருந்து 30 கி.மீ. தொலைவு; இளையாற்றங்குடி, மாத்தூர், வைரவன் கோவில், சூரக்குடி, பிள்ளையார்பட்டி ஆகிய 5 கோவில்களைச் சேர்ந்த 273 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர். இங்கும் மீனாட்சி சுந்தரேஸ்வரர் என்ற நகரச் சிவன் கோவில் உள்ளது.

**இவ்வூர் நகரத்தார்களின் திருப்பணி மற்றும் அறப்பணிகள்:**

1. வீரகேசரி செட்டியார் குடும்பத்தினரால் கட்டப் பட்ட சுந்தர விநாயகர் கோவில்.
2. தெ. பழ. குடும்பத்தார் கட்டி இன்று ஊர்ப் பொதுவாக விளங்கும் செல்வ விநாயகர் கோவில்.
3. ஆ.க. குடும்பத்துப் பிள்ளையார் கோவில் மற்றும் ஊரணி.

17

4. கா.சித.கரு. குடும்பத்தார் கட்டிய தண்ணீர்ப் பந்தல், பிள்ளையார் கோவில்.

5. விவேகானந்தா கல்விக் கழகம்.

6. இளையாற்றங்குடி தேவஸ்தான நிர்வாகத்தல் உள்ள காட்டுச் சுப்பையா கோவிலில் நாக.வ.வகையறா திருப்பணி செய்துள்ளனர்.

7. ப.மு.ராம.குடும்பத்தார் சுவாமி மலையில் தேவாரப் பாடசாலை நடத்தி வந்தனர்.

நாட்டார், நகரத்தாருக்குப் பொதுவான மலை நாச்சியம்மன் கோவிலின் மாசி சிவராத்திரி விழாவும் விநாயகர் சதுர்த்தி விழாவும், இவ்வூரின்திருவிழாக்கள் ஆகும்.

தேவகோட்டை, பனையப்பட்டி, ஆவினிப்பட்டி ஊர்களைச் சேர்ந்த மாத்தூர் குளத்தூர் பிரிவினர் வழிபடும் குப்பியப்பத்தாள் படைப்பு இவ்வூரில் 2 ஆண்டுக்கு ஒருமுறை ஆடி மாதத்தில் படைக்கப்படு கிறது. வைரவன் கோவிலைச் சேர்ந்தோர் கட்டுச் சோத்துக் கருப்பையா படைப்பைப் படைத்துக் கும்பிடு கின்றனர். இளையாற்றங்குடி ஒக்கூர் நகரத்தார் அழகாத் தாள் படைப்பை இவ்வூரில் நடத்தி வருகின்றனர்.

வீரகேசரி பத்திரிகை (இலங்கை) கொழும்பு: இவ்வூர் வீரகேசரி குடும்பத்தார் நடத்துவது. தமிழில் பிரபலமானது.

அருசோ தலைமையில் 1.6.13ல் இங்கு திருவாசக முற்றோதல் நிகழ்ந்தது, வரவேற்புரை : கரு.நல்லமுத்துச் செட்டியார், நன்றியுரை : பழ. ஆண்டியப்ப செட்டியார், நேரம் : காலை 9.25 முதல் 5மணிவரை, கலந்துகொண்டவர்கள் : 85 பேர்



## 63. விராமதி - 11.01.2015

### ஸ்ரீசெல்வ விநாயகர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ. பாடியது)

நீரின் வளமும் நிலவளமும்
நிறைந்த விராமதி நகரத்தார்
சீரும் சிறப்பும் பொலிந்தருளும்
செல்வ விநாயகா! திருவடிகள்
ஊரும் உலகும் போற்றிடவே
உயர்திரு வாசகம் பாடினமே!
பேரும் புகழும் பெருந்திருவும்
பேணி நீதினம் அருளுகவே!

## விராமதி - 11.01.2015

(தெ. சொக்கலிங்கம்)

மேலவட்டகை, காரைக்குடியிலிருந்து நேமம் வழியாக 24 கி.மீ. தொலைவு; இளையாற்றங்குடி, வைரவன் கோவில் ஆகிய இரு கோவில்களைச் சேர்ந்த 217 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர். செல்வ விநாயகர் கோவில் நகரத்தார் பொதுக் கோவிலாகும். 3 குடிநீர் ஊரணிகள் உள்ளன. இளையாற்றங்குடி ஒக்கூரார் தண்டாயுதசாமி வீட்டில் மகேசுவரர் இடும்பன் பூசையும் மூதாதையர் படைப்பும் நடத்தி வருகின்றனர். இங்கு வைகாசியில் திங்கள், புதன், வியாழன் ஆகிய ஏதாவதொரு கிழமையில் வள்ளியம்மை ஆயாள் படைப்பு நடைபெறும். காரைக்குடி, உ. சிறுவயல், சண்முகனாதபுரம், விராமதியைச் சேர்ந்த ஒக்கூர் நகரத்தார்கள் காரைக்குடியில் திருமாத்தாள் படைப்புப் படைத்து வருகின்றனர்.

*1934*-ல் ஒக்கூர்ப் பிரிவைச் சேர்ந்த சு.வே.கதி. குடும்பத்தால் தொடங்கப்பட்ட சு.வே.கதி. சிகப்பி ஆச்சி வித்தியாசாலை தொடக்கப்பள்ளியாக அக்குடும்பத்தின் வழிமுறையினரால் நடத்தப்பட்டு வருகிறது.

இவ்வூரினரான வெ.நா. நடராஜன் செட்டியார், வெ.நா. நாராயணன் செட்டியார் ஆகியோர் I.N.A.ல் பணிபுரிந்துள்ளனர். பசுமடம் ஒக்கூர் சாத்தம்மை ஆயா படைப்புப் பங்காளிகளாலும், ந.மு. நந்தவனம் ஒக்கூராரில் ஒருவகையாராலும் அமைக்கப் பெற்று நடந்து வருகின்றன. நகரத்தார்கள் வாழ்ந்து வருகின்ற *76* ஊர்களிலும் திருவாசக முற்றோதல் சிறப்பாக நடைபெற்றது. *76* ஊர்களில் முதல் முற்றோதல் பிள்ளையார்பட்டி கற்பக வினாயகர் சன்னதியிலும் *76*-வது முற்றோதல் விராமதி செல்வ விநாயகர் சன்னதியிலும் நடைபெற்றது குறிப்பிடத்தக்கதாகும்.

விராமதி செல்வ விநாயகர் கோவிலில் 11.1.2015ல் அருசோ தலைமையில் நிகழ்ந்த திருவாசகம் முற்றோதல் நிகழ்ச்சியில் உள்ளூர் நகரத்தாரும் ஆச்சிமார்களும் நிறையப் பேர் கலந்து கொண்டனர். தெ.சொக்கலிங்கம் சிறப்புரை ஆற்றினார். இயக்கச் செயலர் காசிஸ்ரீ பழ.மாணிக்கம் நன்றி கூறினார். உள்ளூர் மக்கள் காலை, மதிய, மாலை விருந்து அளித்துச் சிறப்பித்தனர்.



# 64. கீழச்சிவல்பட்டி - 22.06.2013

## ஸ்ரீமீனாட்சி சுந்தரேஸ்வரர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)

தங்கத்தால் சுந்தரேசர்! தங்கத்தால்
மீனாட்சி! தாள்கள் போற்றி!
பங்கமிலாப் புகழ் கீழச் சிவல்பட்டி
கொண்டாடும் பதங்கள் போற்றி!
மங்காத நகரத்தார் மழைவேண்டிப்
பாடும் அடி மலர்கள் போற்றி!
எங்கணுமே கற்சிற்பம்! மண்டபங்கள்!
எழிலார்ந்த இறைதாள்! போற்றி!

## கீழச்சிவல்பட்டி - 22.06.13

(தெ. சொக்கலிங்கம்)

மேலவட்டகை; காரைக்குடியிலிருந்து நேமம் வழியாக 24 கி.மீ. இளையாற்றங்குடி, மாத்தூர், வைரவன் கோவில் நேமம், பிள்ளையார்பட்டி, சூரக்குடி, இரணிக்கோவில் ஆகிய ஏழு கோவில்களைச் சேர்ந்த 700 புள்ளிகள் வாழ்ந்து வருகின்றனர். இவ்வூர் இரண்டிற்கும் பொதுவான அருள்மிகு மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக் கோவில் நகரச் சிவன் கோவிலாகும். இக்கோவிலுக்கு முதல் குடமுழுக்கு 21.10.1877-ல் நடைபெற்றது. இக்கோவில் சிறப்பைஒட்டி இவ்வூரைச் சிறுமதுரை என்றும் அழைப்பர். நகரத்தார் பொதுவில் கட்டப்பட்டுச் சிவன்கோவில் நிர்வாகத்தில் இருந்து வரும் மாரியம்மன் கோவிலுக்கு 21.1.1989-ல் முதல் குடமுழுக்கு விழா நடைபெற்றது. சுந்தரராசப்பெருமாள் கோயில் வெ.கரு. குடும்பத்தாருக்குச் சொந்தமானதாகும். கல்லுக்கட்டி, சிவகங்கை, சந்தைப்பேட்டை, ஊரணி ஆகிய மூன்று குளங்கள் இவ்வூரில் உள்ளன.

**இவ்வூரில் நடைபெறும் படைப்புகள்:**

*சூரக்குடி – அழகாத்தாள் படைப்பு – ஆடிமாதம் ஆண்டுதோறும் மகேஸ்வர பூசையும் இதில் உண்டு. மகேஸ்வர பூசைக்காக வேல்முருகன் அலங்கார மண்டபம் இக்கோவில் வீட்டில் கட்டப்பட்டுள்ளது.*

| | | |
|---|---|---|
| வைரவன் கோவில் - ஆண்டாத்தாள் படைப்பு | - | மாசிமாதம் |
| 6 ஊர்நகரத்தார் | - | 3ஆண்டுக்கு ஒருமுறை |
| மாத்தூர் - கண்ணாத்தாள் படைப்பு | - | மாசி மாதம் |
| வைரவன்கோவில் – மாங்கல்யக்காரி படைப்பு | - | ஆடிமாதம் முதல் திங்கட்கிழமை |
| பிள்ளையார்பட்டி – நாகம்மாள் செங்கிடாய் | - | மாசி மாதம் |
| கருப்பர் படைப்பு | - | |
| மாத்தூர் பழநியப்பையா படைப்பு | - | வேலங்குடித் திருவிழா முடிந்தபின் |
| நேமம்கோவில் – மாங்கல்யக்காரி படைப்பு | - | ஆடி மாதம் கடைசிவெள்ளி |

*கீழச்சிவல்பட்டி அளகாபுரி தமிழ்மன்றம் 55 ஆண்டு களாகத் தை மாதம் பொங்கலைஒட்டி தமிழர் திருநாளைச் சிறப்பாகக் கொண்டாடி வருகிறது. இவ்வூரைப் பற்றி 9 பிரபந்தங்கள் பாடப் பெற்றுள்ளன. பாடுவார் முத்தப்பர் தோன்றிய இவ்வூரில் முத்தப்பர் கோட்டம் அமைந்துள்ளது. பாடுவார் முத்தப்பர் கவிபாடும் ஆற்றலோடு, வாக்கு பலிக்கும் அருளுடைய வராகவும் இருந்தார்.*

**பாடுவார் நூல்கள்:**

*1. திருமுகவிலாசம், 2. நகரவாழ்த்து, 3. செயங் கொண்டார் சதகம், 4. உச்சினி மாகாளியம்மன் துதி,*

*5. தல்லாகுளம் கருப்பர் அகவல் 6. மருதம் பிள்ளையார் பதிகம், 7. கிரணிப்பட்டி முத்துமாரியம்மன் பதிகம், 8. குன்றக்குடி முருகன் பதிகம், 9. பழநியாண்டவர் பதிகம், 10. இராங்கியம் கருப்பர் குதிரையடி.*

*'காடுவெட்டிப் போட்டு' என்று துவங்கும் பாடல் பெரும்பாலான நகரத்தார் வீடுகளில் இடம் பெற்றிருக்கக் காணலாம். கிழச்சிவல்பட்டி மற்றும் அளகாபுரி நகரத்தாருக்குப் பொதுவான ஸ்ரீமீனாட்சி சுந்தரேஸ்வரர் கலாசாலை 1923–ல் தொடங்கி பள்ளியாகவும் 1928–ல் உயர்நிலைப்பள்ளியாகவும் 1981 முதல் மேல்நிலைப் பள்ளியாகவும் உயர்வு பெற்று தொண்டாற்றி வருகிறது.*

இங்கு அருசோ தலைமையில் திருவாசகம் முற்றோதல் 22.6.13ல் நிகழ்ந்தது, வரவேற்புரை – நன்றியுரை : புலவர் நா.சுப்பிரமணியன், நேரம் : காலை 10.25 முதல் 6.00 மணி வரை, கலந்துகொண்டவர்கள் : 117 பேர்கள்.

காடுவெட்டிப் போட்டு, கடிய நிலம் திருத்தி
வீடுகட்டிக் கொண்டிருக்கும் வேள் வணிகர் – வீடுகட்கு
அன்றைக்கு வந்த எங்கள் அம்மா இலக்குமியே
என்றைக்கும் நீங்காதிரு

*– பாடுவார் முத்தப்ப செட்டியார்*



# 65. பி. அழகாபுரி - 22.06.2013

## பி. அழகாபுரி வெயிலுகந்த விநாயகர்துதி

பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்

வெயிலுகந்த விநாயகரைப் போற்றி வாழும்
வெற்றிமிகு பி.அழகா புரியில் வாழும்
மயிலனைய ஆச்சியரும் நகரத் தாரும்
மாண்புடைய வைத்தீசர் கோவி லுக்கு
குயிலெனவே இசைப்பாடல் பாடிக் கொண்டு
கொம்பேந்தி நடக்கின்றார் விரதம் பூண்டார்
வெயிலுகந்த விநாயகரே! வணங்கு கின்றோம்
விளைவெல்லாம் நலமாகத் தருவாய் அப்பா.

## பி. அழகாபுரி

இளையாற்றங்குடி, மாத்தூர், வைரவன்கோவில், நேமம், இரணியூர், பிள்ளையார்பட்டி ஆகிய ஆறு கோவில்களைச் சேர்ந்த 600 புள்ளிகள் வாழ்ந்து வருகிறார்கள். செட்டி நாட்டில் வேறு இரு அழகாபுரிகள் இருப்பதால் இதனை அவற்றிலிருந்து வேறுபடுத்தும் பொருட்டு அருகிலுள்ள பில்லமங்கலம் என்னும் சிற்றூரையும் சேர்த்து பில்லமங்கலம் அளகாபுரி என்பர். சில நகரங்கள் அருகருகே அமைந்து இரட்டை நகரங்களாக இருப்பது போல அமைந்திருப்பவை கீழச்சிவல்பட்டியும், பி.அழகாபுரியும். கீழச்சிவல்பட்டி சிவகங்கை மாவட்டத்திலும் பி. அழகாபுரி புதுக்கோட்டை மாவட்டத்திலும் அமைந்துள்ளன.

**இவ்வூர் நகரத்தார் செய்த திருப்பணி மற்றும் அறப்பணிகள்:**

1. வெயிலுக்கந்த விநாயகர் கோவில்.

2. கலங்காத கண்ட விநாயகர் கோவில்,
3. கமலாலய ஊரணி
4. புது ஊரணி
5. அறுபத்து மூவர் குரு பூசை மடம்
6. பசுமடம்

க.தெ. கிருஷ்ணப்ப செட்டியார் ஆண்டுதோறும் இவ்வூரிலிருந்து வைத்தீஸ்வரன் கோவிலுக்குச் செல்லும் நடைப்பயணத்தைத் தொடங்கி வைத்ததோடு, அவர்தம் வழிமுறையினர் வைத்தீஸ்வரன் கோவிலில் ஒரு பசுமடத்தையும் நடத்தி வருகின்றனர்.

**இவ்வூரில் நடைபெறும் படைப்புகள்:**

மாத்தூர் கண்ணூர் – சிறுகூடல்பட்டியில் நாராயணசாமி கோவில் படைப்பு.

இவ்வூர் இராம.மு. சோமசுந்தரம் செட்டியார் பிள்ளையார்பட்டியில் பசுமடமும், கற்பகவிநாயகர் தொடக்கப் பள்ளியும் தொர்டங்கி அவர்தம் வழிமுறை யினரால் நடத்தப்பட்டு வருகிறது. இக்குடும்பத்தார் காஞ்சிபுரத்தில் நாராயண சேவாசிரமம் என்ற ஆயுர்வேத மருத்துவமனையும் நடத்தி வருகிறார்கள். மேலும் இக்குடும்பத்தினர் 35 ஆண்டுகளுக்கு முன்பு மருதங்குடியில் ஆதினமிளகி ஐயனார் கோவிலுக்கும் மற்றும் செங்கிடாய்க்கருப்பர் கோவிலுக்கும் குடமுழுக்கு நடத்தி உள்ளனர்.

இவ்வூரில் 22.06.13ல் திருவாசகம் முற்றோதல் நிகழ்ந்தது.



## 66. சிறுகூடல்பட்டி - 10.06.2014

### ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ. பாடியது)

அழகாய்ப் புதிதாய் மீனாட்சி
　　ஆல யத்தை நகரத்தார்
பழகிப் போன சிறுகூடல்
　　பட்டி காணக் கட்டியுளார்
நலமாய்க் குளமும் புதுப்பித்து
　　நந்த வனமும் உள்வைத்துத்
தலமாய்ச் செய்தார் மீனாட்சி
　　சுந்த ரேசா! அருள்புரிக!

காற்று வெளிச்சம் குறைவில்லை
　　கலைசேர் சிற்பம் கணக்கில்லை
ஊற்றும் நீரும் பெருகட்டும்
　　ஊரும் பொருளும் வளரட்டும்
ஆற்றல் செல்வம் அதிகரிக்க
　　அன்னை மீனாள் அருள்புரிக!
ஏற்றம் தருவாய் சுந்தரேசா!
　　என்றும் காப்பாய் மலையரசி!

## சிறுகூடல்பட்டி - 10.06.2014

(தெ. சொக்கலிங்கம்)

மேலவட்டகை; காரைக்குடியிலிருந்து 18 கி.மீ தொலைவு; இளையாற்றங்குடி, மாத்தூர், வைரவன் கோவில், பிள்ளையார்பட்டி ஆகிய நான்கு கோவில்களைச் சேர்ந்த 415 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர்.

ஸ்ரீமீனாட்சி சுந்தரேசுவரர் கோவில் என்ற நகரச் சிவன் கோவில் திருப்பணி முடிக்கப்பெற்று, 1895–ல் குடமுழுக்குச் செய்யப்பெற்றது. இவ்வூர் நாட்டார் நகரத்தாருக்குப் பொதுவான அழகு நாச்சியம்மன் கோவிலில் சித்திரை முதல் நாள் நடைபெறும் பால்குடம், மது எடுப்பு விழாக்களிலும் மலையரசி அம்மன் கோவிலில் வைகாசி பௌர்ணமி அன்று நடைபெறும் அபிடேக ஆராதனையிலும் நகரத்தார் பங்கேற்பது மரபு.

இவ்வூர் ஆதை. கு.பழ.சுப. குடும்பத்தினரால் தொடங்கப்பெற்ற 'கலைமகள் வித்யாசாலை' என்ற நடுநிலைப்பள்ளி இப்போது நகரத்தார் நிர்வாகத்தில் நடந்து வருகிறது. இவ்வூர் வைரவன் கோவில் பங்காளிகள் தங்களுக்குரிய பொதுப்படைப்பாக அடைக் காத்தாள் படைப்பை ஆண்டுதோறும் ஆடிமாதம் படைத்து வருகின்றனர். மாத்தூர் கண்ணூர்பிரிவைச் சேர்ந்தவர்கள் சிறுகூடல்பட்டியில் இல்லையெனினும் வேறு ஏழு ஊர்களைச் சேர்ந்த கண்ணூர்ப் பிரிவுப் பங்காளிகள் இவ்வூரில் வந்து நாராயணசாமி கோவில் படைப்பைப் படைத்து வருகின்றனர். பி.அழகாபுரி, தேவகோட்டை, கீழச்சிவல்பட்டி, சிறுகூடற்பட்டி ஆகிய ஊர்களைச் சேர்ந்த மாத்தூர் அரும்பாக்கூர் பங்காளிகள் மாசி மாதம் தேவகோட்டையில் கூடி நயின்ப்பையா படைப்பையும், கீழச்சிவல்பட்டி, சிறுகூடற்பட்டியைச் சேர்ந்த பிள்ளையார் பட்டிப் பங்காளிகள் மாசி மாதம் கீழச்சிவல்பட்டியில் கூடி நாகம்மை ஆயாள் படைப்பையும் படைத்து வருகின்றனர்.

கவியரசர் கண்ணதாசன் இவ்வூரில் பிறந்தவர். காரைக்குடிக்கு சுவீகாரம் வந்தவர். பிறந்த இடத்தில் முத்தையா என்று பெயர். பிள்ளை வந்த இடத்தில் நாராயணன் என்று பெயர். இவரே சூட்டிக்கொண்ட புனை பெயராகிய கண்ணதாசன் என்ற பெயர்

நிலைத்துள்ளது. 'கண்ணதாசன் இலக்கியப் பேரவை' இவ்வூரில் 1990ல் தொடங்கப்பெற்று இலக்கியப் பணி செய்து வருகிறது. இவ்வூரைச் சேர்ந்த சித.பெரியகருப்பன் செட்டியார் I.N.A.ல் பணிபுரிந்தவராவார்.

இவ்வூர் ஆத. கு. பழ. மு. முத்தையா செட்டியார் அவர்கள் பழைய சிவன் கோயிலைக் கட்டியும் பராமரித்தும் வந்தார்கள். கோயிலில் உள்ள உற்சவமூர்த்திகள் அனைத்தும் அவர்களால் செய்யப்பட்டவை. மேலும் அவர்கள் பசுமடம், மருத்துவமனை, துவாதசிமடம் ஆகியவைகள் ஏற்படுத்தி உள்ளார்கள்.

கரு.சி.பழ. குடும்பத்தார் திருப்பத்தூர் – புதுக்கோட்டை சாலையில் கஞ்சிமடம் மற்றும் தண்ணீர்ப் பந்தல் ஏற்படுத்தினார்கள். மேற்படி குடும்பத்தார் நெடுஞ்சாலையிலிருந்து சிறுகூடற்பட்டிக்கு 1917–ல் சாலைவசதி செய்துள்ளார்கள்.

நா.கரு: கருத்தான் செட்டியார் குடும்பத்தார் ஊருக்கு மேற்கே குடிதண்ணீர் ஊரணி வெட்டியுள்ளார்கள். மு. பழநியப்ப செட்டியார் வயிரவபுரம் ஜமீன் என்று அழைக்கப்பட்டுள்ளார். அவர் திருப்பத்தூர் திருத்தளி நாதர் ஆலயத்திற்கு யானை வாங்கிக் கொடுத்து பராமரித்து வந்துள்ளார். மகன்கள் தற்போது உள்ள யானையை (சிவகாமி) வாங்கிக் கொடுத்தும், வைகாசித் திருவிழா ஆறாம் மண்டகப் படியை நடத்தியும் வருகிறார்கள். சிவன்கோயிலுக்கு அண்மையில் 2010–ம் ஆண்டு குடமுழுக்கு நடைபெற்றது. அதுமுதல் சித்திரை மாதம் மூன்றாவது வெள்ளி, சனி, ஞாயிறு ஆகிய மூன்று நாட்கள் திருவிழா நடைபெற்று வருகிறது.

இங்கு மலையரசி கோவிலில் 10.6.2014–ல் அருசோ தலைமையில் திருவாசகம் முற்றோதல் சிறப்பாக நிகழ்ந்தது.

## 67. வயிரவன்பட்டி - 28.07.2013

## ஸ்ரீவடிவுடையம்பாள் சமேத ஸ்ரீ வளரொளி நாதர் ஸ்ரீவயிரவர் போற்றி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

வடிவுடையாள் உடனாகி வையமெலாம் காக்கின்ற
வளரொளியாம் நாத போற்றி!
செடியாய தீவினைகள் தீமையெலாம் செகுக்கின்ற
வயிரவராம் தேவ போற்றி!
கடிமணங்கள் நிகழ்ந்திடவும் பிள்ளைப்பே றமைந்திடவும்
காத்தருளும் கடவுள் போற்றி!
அடியார்கள் தொண்ணூற்றா றூரராம் நகரத்தார்
உயர்ந்தோங்க அருள்வாய் போற்றி!

## வயிரவன்பட்டி (கோவில்) - 28.07.2013

(தெ.சொக்கலிங்கம்)

காரைக்குடியிலிருந்து 15 கி.மீ. தொலைவு, திருக் கோவிலில் வயிரவர் வழிபாடு சிறப்பிடம் பெறுவதால் இவ்வூர் வைரவன் பட்டி என்றும், வைரவன் கோவில் என்றும் இங்குள்ள ஊரணி வைரவதீர்த்தம் என்றும் அழைக்கப்படுகிறது. இக்கோவிலார் மூன்று உட்பிரிவு களை உடையவர்கள் அவை: (1) சிறுகுளத்தூருடையார், (2) கழனிவாசலுடையார், (3) மருதேந்திரபுரமுடையார் என்றும் உட்பிரிவு மூன்று வகுப்புக்களை உடையது. அவை: (1) பெரிய வகுப்பு, (2) தெய்வ நாயனார் வகுப்பு, (தெய்யனார் வகுப்பு), (3) பிள்ளையார் வகுப்பு, மொத்தப் புள்ளிகள் 5800. இக்கோவிலில் அமர்ந்தருள் செய்யும் இறைவன் வளரொளி நாதர். இறைவி வடிவுடையம்மை. இக்கோவிலின் ராஜ கோபுரத்தின் தென்கிழக்குப் பகுதியில் வெளிப்பிள்ளையாரும், வடகிழக்குப் பகுதியில் முப்பலிக்கருப்பர் கோவிலும், கோவிலுக்கு நேர் எதிரே

ஊரணியும், கோவிலுக்குத் தென்மேற்கில் 'வயிரவர் தீர்த்தம்' என்னும் ஊரணியும், நகரவிடுதியும், கோவிலின் எதிரே நவீன வசதிகள் அனைத்தும் அமைந்த குடில் களும் அமைந்துள்ளன. மற்ற திருக்கோயில்களில் அம்மன் சன்னதி அமைந்துள்ள இடத்தில் இங்கு வைரவர் சன்னதியும், அதை அடுத்து அம்மன் சன்னதியும் அமைந்துள்ளன. இங்குள்ள சண்டிகேஸ்வரர் சிற்றாலயம் தனிச்சிறப்புடையது. இது மகாபலிபுரத்தில் உள்ளது போல் ஒற்றைக் கற்றளிக் கோவிலாகும். தூண் சிற்பங் களாகிய கண்ணப்பர், மீனாட்சி அம்மன் திருக் கலியாணம், குதிரை வீரர்களுடன் கூடிய இரண்டு குதிரைகள், தட்சணாமூர்த்தி சன்னதி ஆகியவை சிறந்த வேலைப்பாடுள்ள சிற்பங்களாகும். சண்டிகேஸ்வரர் சன்னதிக்கு அருகே ராமரும் ஆஞ்சநேயரும் தனித்தனியே சுவரில் புடைப்புச் சிற்பங்கள் உள்ளன. வைரவன் கோவில் நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கம் இக்கோவிலைச் சேர்ந்த நகரத்தார் மாணவர்களுக்குப் பள்ளி, கல்லூரிக் கட்டணம் கட்டுதல், பாடநூல்கள் வாங்கி நிதி உதவி செய்தல் ஆகியவற்றோடு விடுதியில் தங்கி உணவுண்டு படிப்பைத் தொடர வாய்ப்பளிக்கிறது.

இங்கு 28.7.13ல் அருசோ தலைமையில் நிகழ்ந்த திருவாசகம் முற்றோதல், வரவேற்புரை : நாகப்ப செட்டியார் செயலர், நன்றியுரை : விடுதி மேலாளர் முத்துக்கருப்பன் செட்டியார், கலந்து கொண்ட அன்பர்கள் : 80 பேர்கள்.

அருசோ வயிரவன் கோவில் பெரிய வகுப்பு – இக்கோவிலுக்கு அருசோ ஒரு பதிகம் பாடி உள்ளார். அப்பதிகம் அவரது 'அருசோ கவிதைகள்' என்னும் நூலில் உள்ளது. 'வயிரவர்' என்னும் நூலும் அருசோ எழுதி உள்ளார்.



# 68. நேமம் கோவில் - 11.8.2013

## ஸ்ரீசௌந்தர நாயகி சமேத
## ஸ்ரீ ஜெயங்கொண்ட சோழீசர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

கார்சூழ நீர்சூழக் கானகமாய் மரம்சூழக் காட்சி நல்கும்.
ஏர் சூழ நேமத்தில் எழுந்தருளி நகரத்தார் ஏற்றம் காக்கும்
பார்சூழும் சௌந்தரநா யகியோடு பாதங்கள் தந்து காக்கும்
ஊர்சூழும் ஜெயங்கொண்ட சோழீசா! உல கெல்லாம் காப்பாய் அப்பா.

## நேமம் கோவில் - 11.8.2013

(தெ.சொக்கலிங்கம்)

காரைக்குடியிலிரந்து 12 கி.மீ. தொலைவு, நியமம் என்னும் பெயரே நேமம் என மருவியது என்பர். நேமம் கோவில் நகரத்தார் மொத்தப் புள்ளிகள் 1900. இறைவன் பெயர்: ஜெயங்கொண்ட சோழீசர். இறைவி பெயர்: சௌந்தர நாயகி. நாராயண நடராசன் செட்டியார் எழுதிய 'நேமம் கோவில் வரலாறு' என்ற நூலும், பாடுவார் முத்தப்பர் பாடிய ஜெயங்கொண்டார் சதகமும் இக்கோவில் பற்றிய இலக்கியங்களாகும். இக்கோவிலின் பின்புறம் உருவமின்றி சக்திபீட வடிவில் நேமங்காளி வீற்றிருக்கிறாள். இக்கோவிலில் அரிய பல சிற்பங்கள் உள.

இங்கு திருவாசகம் முற்றோதல் அருசோ தலைமையில் 11.8.13ல் நிகழ்ந்தது, வரவேற்புரை : தேனப்ப செட்டியார், நன்றியுரை : PL. அண்ணாமலை செட்டியார், கலந்து கொண்டவர்கள் : 68 பேர்.

காரைக்குடியிலிருந்து நேமம் கோவிலுக்கு அருசோ வின் மகள் பொன்முடியும் மாப்பிள்ளை சி.இராம சாமியும் 10 ஆண்டுகளாக மாதம்தோறும் நடந்து சென்று வழிபட்டனர்.

## 69. பலவான்குடி - 25.08.2013

### ஸ்ரீமீனாட்சி சுந்தரேசர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

பண்பும் அன்பும் உடையார்கள் பலவான் குடியார் நகரத்தார்
கண்போல் போற்றும் மீனாட்சி சுந்த ரேசர் கோவிற்கு
விண்ணோர் வந்து தொழுகின்றார் வெற்றி தருவாய் மீனாட்சி.
பண்ணால் பாடிப் பரவுகிறோம் பலங்கள் தந்து காப்பாயே!

## பலவான்குடி - 25.08.2013

பதினாறூர் வட்டகை, காரைக்குடியிலிருந்து 10 கி.மீ. இளையாற்றங்குடி, மாத்தூர், வைரவன்கோவில், நேமங்கோவில், இரணிக்கோவில் ஆகிய ஐந்து கோவில்களைச் சேர்ந்த 360 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகிறார்கள். இங்கு மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோவில் என்ற நகரச் சிவன் கோவில் உள்ளது. செங்கமல நாயகி அம்மன் கோவில் நகரத்தார்களால் கட்டப்பட்டது. இவ்வூரில் ராம.கு. குடும்பத்தார் அமைத்துள்ள குமாரவிநாயகர், நடராசர் கோவில்களும் திருவாசக மடமும் சேங்கைத் திருக்குளமும் உள்ளன. தெ. குஞ்சான் செட்டியார் பங்காளிகள் அமைத்துள்ள குஞ்சர விநாயகர் கோவிலும் புதுஊரணியும் உள்ளன. இவ்வூரிலுள்ள குமார கணபதி கோவிலையும் செட்டியார் ஊரணியையும் புதுவயல் வைரவன் கோவில் பங்காளிகள் அமைத்துள்ளனர். க.ப. குடும்பத்தினர் அமைத்துள்ள இராயர் ஊரணியும் உள்ளது. இவ்வூர் இராம.கு. இராமசாமி செட்டியார் திருத்தென்குடித்திட்டையில் பசுபதீஸ்வரர் கோவில் திருப்பணி செய்துள்ளனர்.

இங்கு திருவாசகம் முற்றோதல் அருசோ தலைமையில் 25.8.13ல் நிகழ்ந்தது, வரவேற்பு மற்றும் நன்றியுரை : சு.கதிரேசன் செட்டியார், கலந்துகொண்ட அன்பர்கள் : 108 பேர்.

# 70. ஆத்தங்குடி முத்துப்பட்டணம் 01.09.2013

## ஸ்ரீலோக நாயகி அம்பாள்துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)

அடியார் செல்வர் நகரத்தார்
ஆத்தங் குடிசார் பட்டணத்தார்
முடிகள் சூடி வாழ்கின்றார்
முத்துப் பட்டணம் நகரத்தார்
படிகள் அளக்கும் ஸ்ரீலோக
நாயகி பாதம் பணிந்தோர்க்கு
விடியல் தருவாள்; வினைதீர்ப்பாள்
வெற்றி குவிப்பாள் காப்பாளே!

## ஆத்தங்குடி, முத்துப்பட்டணம் - 01.09.2013

(தெ. சொக்கலிங்கம்)

பதினாறு ஊர்வட்டகை; காரைக்குடியிலிருந்து 13 கி.மீ. தொலைவு; இளையாற்றங்குடி, மாத்தூர், வைரவன்கோவில், பிள்ளையார்பட்டி ஆகிய 4 கோவில்களைச் சேர்ந்த 277 புள்ளிகள் வாழ்ந்து வருகின்றனர். இவ்வூரில் நகரத்தாருக்குப் பொதுவான லோகநாயகி அம்மன் கோவில் உள்ளது. இளையாற்றங் குடி பெருமருதூர் உடையார் கோவில் பங்காளிகள் உடையாஞ்செட்டி பிள்ளையார் கோவிலையும், மாத்தூர் பங்காளிகள் சு.நா.வகையினர் ஐநூற்று விநாயகர் கோவிலையும் கட்டியுள்ளனர். இவ்வூர் அம்மன் கோவில் ஊரணி குடிநீர் ஊரணியாகும். இளையாற்றங்குடி, பெருமருதூர் உடையார் பங்காளிகள் உடையான் செட்டி ஊரணியையும் அமைத்துள்ளனர். இவ்வூர் மாத்தூர்

18

மணலூர் பங்காளிகள் வைகாசி மாதம் தெய்வானை ஆயா பொதுப் படைப்பையும், ஆத்தங்குடியிலும், இவ்வூரிலும் உள்ள பிள்ளையார்பட்டியினர் இணைந்து கண்டனூரில் அக்னி ஆத்தாள் படைப்பையும் படைத்து வருகின்றனர். இவ்வூரைச் சேர்ந்த பெ.மு. சுப்பையா செட்டியார், ராம.அழ. இராமசாமி செட்டியார், இராம. அழ அருணாசலம் செட்டியார் ஆகியோர் I.N.A.ல் பணியாற்றியவர்கள். இவ்வூர் சி.ராம.நா.நா. இராமநாதன் செட்டியார் குடும்பத்தார் ஒரு பசுமடத்தையும், சித.மு.நாரா. குடும்பத்தார் பிள்ளையார்பட்டியில் துவாதசி மடத்தையும் தண்ணீர்ப்பந்தலையும் நடத்தி வருகின்றனர். தலவிருட்சம் – வேம்பு.

01.09.2013ல் அருசோ தலைமையில் இங்கு நிகழ்ந்த திருவாசகம் முற்றோதல், வரவேற்புரை - நாரா. சிதம்பரம், நன்றியுரை - சுப. நாச்சியப்பன், நேரம் - காலை 9.20 முதல் மாலை 5.00 மணி வரை, கலந்து கொண்ட அன்பர்கள் - 106 பேர்.



## 71. ஆத்தங்குடி - 22.09.2013

**(பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)**

ஆத்தங் குடியில் நகரத்தார்
அருளும் பொருளும் பொலிந்தென்றும்
காத்தும் படைத்தும் மீனாட்சி
கல்லால் உயர்ந்த கலைக்கோவில்!
மூத்தோள் காரைக் காலம்மை
முன்னோர் அரும்பட் டினத்தாரும்
கூத்தன் சுந்த ரேஸ்வரரும்
குலத்தைக் காப்பர் வாழியவே.

## ஆத்தங்குடி - 22.09.2013

**(தெ. சொக்கலிங்கம்)**

பதினாறு ஊர் வட்டகை; காரைக்குடியில் இருந்து 12 கி.மீ. தொலைவு; இளையாற்றங்குடி, மாத்தூர், வயிரவன் கோவில், பிள்ளையார்பட்டி, 4 கோவில்களைச் சேர்ந்த 588 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகிறார்கள். பழைய ஓலைச் சுவடிகளில் அரண்மனைப் பட்டி என்ற ஆத்தங்குடி எனக் குறிப்பிடப்படுகிறது. ஆனால் நகரத்தார் வழக்கில் ஆத்தங்குடி என்றே வழங்கப்படு கிறது. இங்கு மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோவில் என்ற நகரச் சிவன் கோவில் உள்ளது. இக்கோவில் 1928–ல் திருப்பணி முடிந்து முதல் திருக்குட நன்னீராட்டு விழா செய்யப்பட்டது. இக்கோவிலில் சித்திரைத்திருவிழா மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

**இவ்வூர் நகரத்தார் திருப்பணிகள் மற்றும் அறப்பணிகள்:**

1. செ.கா. குடும்பத்தாரின் பிள்ளையார் கோவில்.

2. ப.சுப. குடும்பத்தாரின் பிள்ளையார் கோவில்.
3. சிவன்கோவில், பிள்ளையார் கோவில்கள் இரண்டு ஆகியவற்றிற்குரிய 3 ஊரணிகள்.
4. பெ.சு.பெ. செல்லப்ப செட்டியார், அ.சொ. சுப்பிரமணியன் செட்டியார் ஆகியோரால் தொடங்கப் பட்ட நேரு வித்தியாசாலை.
5. கா.அரு. பழநியப்ப செட்டியார் நிதி உதவியால் தொடங்கப்பட்ட மருத்துவமனை.
6. பெ.சு.சு. பெரிச்சியப்ப செட்டியார் குடும்பத்தார் வைத்தீஸ்வரன் கோவில் சம்பாதி நந்தவனம்.
7. ராம. கா. அரு. குடும்பத்தார் பில்லமங்கலத்தில் ஒரு சத்திரம்.
8. செ.கா. குடும்பத்தினர் குன்றக்குடியில் ஒரு மடம், ஊராரும் நகரத்தாரில் செ.கா. குடும்பத்தாரும் இணைந்து நிருவகித்துவரும் சுந்தர நாச்சியம்மன் கோவிலில் மாசி மாதம் மஞ்சுவிரட்டு சிறப்பாக நடத்தப்படுகிறது.
9. அறுபத்துமூவர் குருபூசை மடம் சிறப்பாகச் செயலாற்றி வருகிறது.
10. இந்தக் கோவிலில் தலவிருட்சம் வாழைமரம். அதையும் இராச கோபுரத்தின் உள்புறம் தென் புறமாக மேற்குப் பார்க்கச் செதுக்கி இருக்கிறார்கள். மேற்படி தலவிருட்சத்திற்கு வயிரவர் (அபிசேக) நன்னீராட்டுத் தண்ணீர் மட்டுமே பாயும்.
11. தமிழிசைச் சங்கம்: முதன் முதலாக ஆத்தங்குடியிலேயே தமிழிசைப் பள்ளி இராசர் அண்ணாமலை

*செட்டியாரவர்களால் துவக்கி வைக்கப்பெற்றது. 1920, 1930–களில் விவேக விளக்க வித்யாசாலை, நாவுக்கரசர் நற்சபை என்ற இலக்கிய அமைப்புகள் இவ்வூரில் சிறப்பாகத் தொண்டு புரிந்தன. விகடம் காசிச்செட்டியார் என அழைக்கப்பெறும் நா.ராமநாதன் செட்டியார் I.N.A.ல் பணிபுரிந்தவர். ராம.கா.அரு. அவர்கள் சஷ்டியப்தபூர்த்தி சுமார் 85 வருடம் முன்பு நடந்தபோது போட்ட தகரக் கொட்டகை இன்றுவரை செயல்பாட்டில் உள்ளது. மீனாட்சி ஆச்சி தர்ம வைத்தியசாலை சுமார் 5 வருடம் முன்பு வரை செயல்பட்டு வந்தது.*

ஆத்தங்குடி சிவன்கோவிலில் திருவாசகம் முற்றோதல், 22.9.2013–ல் அருசோ தலைமையில் நிகழ்ந்தது. வரவேற்புரை மற்றும் நன்றியுரை – எஸ்.பி. லெட்சுமணன், கலந்து கொண்ட அன்பர்கள் – 78 பேர்.

ஆத்தங்குடியில் அருசோ முன்பு பெரியபுராணம் தொடர் சொற்பொழிவு நிகழ்த்தினார். இப்பொழுது இராமாயணம் தொடர் சொற்பொழிவு நிகழ்த்துவது குறிப்பிடத்தக்கது.



## 72. கோனாபட்டு - 12.10.2013

### ஸ்ரீமீனாட்சி சுந்தரேஸ்வரர் துதி

(பொற்கிழிக் கவிஞர் .அரு. சோமசுந்தரன்)

கோனா பட்டில் சிவன்கோவில்
குடிநீர்க் குளமும் மரங்களுமாய்க்
கானார் எழிலும் செல்வமுமாய்க்
காட்சி கொடுக்கும் மீனாட்சி
வானார் சுந்த ரேசரொடு
வளங்கள் அருள வளர்ந்தோங்கிக்
கோனா பட்டு நகரத்தார்
கோடிக் காலம் வாழியவே!

## கோனாபட்டு - 12.10.2013

### (தெ. சொக்கலிங்கம்)

நீண்டகரைப் பிரிவைச் சேர்ந்த இவ்வூர் புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ளது. காரைக்குடியில் இருந்து 20 கி.மீ. இளையாற்றங்குடி, மாத்தூர், வைரவன்கோவில், இலுப்பக்குடி, இரணிக்கோவில், பிள்ளையார்பட்டி ஆகிய 6 கோவில்களைச் சேர்ந்த 652 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகிறார்கள். இங்கு மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோவில் என்ற நகரச் சிவன்கோவில் உள்ளது. 1888-ல் சொக்கப்ப செட்டியார் குடும்பத்தாரால் திருப்பணி செய்யப்பட்டது. இக்கோவிலில் பட்டினத்தார் வாழ்க்கையைச் சித்திரிக்கும் சிற்பங்கள் அமைந்திருப்பது சிறப்பாகும்.

**கோவில்கள்:**

1. ஐயப்ப சுவாமி கோவில், 2. கற்பக விநாயகர் கோவில், 3.தான்தோன்றியீசர் பிள்ளையார் கோவில் 4. ஐயனார் கோவில், 5. அம்மன் சேங்கை, 6. கள்ளண்ணன் கோவில், 7. அருள்மிகு சிதம்பர விநாயகர் கோவில்.

**திருப்பணிகள், அறப்பணிகள்:**

கற்பக விநாயகர் கலாசாலை, ஞானசம்பந்தர் நற்சபை, வாணி மந்திர புத்தகசாலை மூன்றும் இணைந்த பள்ளி ஒன்றைப் பண்டித மணி திறந்து வைத்தார். இப்பள்ளியே சரஸ்வதி உயர்நிலைப் பள்ளியாக ஆக்கப்பெற்று நடந்து வருகிறது.

கு.மெ. கோவில்வீடு, செ.சு. மடம், கஞ்சி மடம், துவாதசி மடம், சின்னியப்பத்தாள் படைப்பு வீடு, சுப.கு. குடும்பத்தாரால் திருக்கடவூரில் பசுமடம், நந்தவனம் நகரவிடுதி ஆகியவற்றை நடத்தி வருகின்றனர்.

பெங்களூருவில் பிள்ளையார் கோவில், ஊரணி, நகரவிடுதி, இச்சடியில் ஒரு பிள்ளையார் கோவில்.

ஊரார், நகரத்தாருக்குப் பொதுவான சுப்பிரமணியர் கோவில், கொப்புடையம்மன் கோவில் ஆகியன உள்ளன. கொப்புடையம்மன் கோவிலில் அம்மன் அருவநிலை யிலேயே வழிபடப் பெறுவது தனிச்சிறப்பு. இக்கோவிலில் நடைபெறும் தேர்திருவிழா ஊரார், நகரத்தாரின் சிறப்பான திருவிழாவாகும். சப்தாபரண மண்டகப்படி நகரத்தார் உபயமாகும். சேதுராமன் செட்டியார், விசுவநாதன் செட்டியார் I.N.A.ல் பணிபுரிந்தவர்கள்.

வைரவருக்கு அரு. அருணாசலம் செட்டியார் அவர் களால் உற்சவர் விக்ரகம் இந்த ஆண்டு செய்யப்பெற்று உள்பிரகாரத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. கொப்புடைஅம்மன் நாச்சிஅம்மனாக, அம்மனாடி, மாவிளக்கு வைக்கிற நகரத்தார் மற்றும் ஊர்மக்களுக்கு

அருள்பாலிக்க, தெரு நாச்சியப்பன், சின்னக்கருப்பனாடி, பெரிய கருப்பனாடியுடன், அனைவருக்கும் விபூதி கொடுப்பதும், மக்களின் குறைகளை நிவர்த்தி செய்வதும் சிறப்பு. இதற்கென தனிக் கூடமும், உபயமும் இலுப்பக்குடி நகரத்தார் க.பெ. கரையினரால் சுமார் 200 ஆண்டுகளாகத் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இந்த நிகழ்ச்சி ஞாயிற்றுக்கிழமை வைகாசித் திருவிழாவிற்கு மூன்று நாட்கள் முன்னதாக நடைபெறும்.

கோனாபட்டு கள்ளழகர் கோவிலில் பூமணப்பிச் சாத்தாள் ஐக்கியமாகி இருக்கிறாள். மேற்படி படைப்பும் நகரத்தார்களால் சிறப்பாக நடத்தப்பெற்று வருகிறது.

கொப்புடையம்மனுக்கு வேண்டுதல்கள் நிறைவேறி யதும் பால்சிறப்பும் குட்டிச் சிறப்பும் நகரத்தார்களால் மாதத்தின் பெரும்பாலான நாட்களில் நடத்தப்படுகிறது. மேற்படி அம்மனுக்கு சுமார் 19 நாட்கள் திருவிழா நடைபெறுகிறது.

வைரவன்கோவிலைச் சேர்ந்த கி.நா.குடும்பத்தார் களால் சுமார் 300 (முன்னூறு) ஆண்டுகளுக்கும் மேலாக வருடம் தோறும் 10 நாட்களுக்கு இராமாயணம் படித்து வருவதும் அன்னதானம் செய்வதும் சிறப்பு.

அழகப்பெருமான் குடிநீர் ஊரணி சுமார், 3 கி.மீ. தூரத்தில் காட்டுப் பகுதியிலிருந்து மடவாய் கட்டப் பெற்று பாதுகாப்பான மழைநீர் மூடப்பட்ட கால்வாய் மூலம் வருகிறது.

இங்கு அருசோ தலைமையில் 12.10.13ல் திருவாசம் முற்றோதல் நிகழ்ந்தது, வரவேற்புரை மற்றும் நன்றியுரை : லெட்சுமணன் செட்டியார், நேரம் : காலை 9.35 முதல் 5.00 மணி வரை, கலந்துகொண்டவர்கள் : 85 பேர்



## 73. வி.லெட்சுமிபுரம் - 22.10.2013

### மீனாட்சி சுந்தரேஸ்வரர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோமசுந்தரன்)

விரையாச் சிலையின் அருகினிலே வெற்றி லெட்சுமி புரத்தினிலே
முறையாய் நகரத் தார்கூடி முழுதாய் அமைத்தார் திருக்கோயில்!
குறையே இல்லா நகரத்தார் குணத்தால் உயர்ந்தார் கோபுரமாய்
இறைவா! மீனாள்! சுந்தரேசா! என்றும் காத்தே அருள்வாயே!

## வி.லெட்சுமிபுரம் - 27.10.13

(தெ.சொக்கலிங்கம்)

மேலப்பத்தூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 35 கி.மீ, இவ்வூர் விரையாச்சிலை லெட்சுமிபுரம் என்றும் நெய்க்கோணம் என்றும் வழங்கப்படுகிறது. இவ்வூரில் மாத்தூர், இலுப்பக்குடி, வைரவன் கோவில் ஆகிய மூன்று கோவில்களைச் சேர்ந்த நகரத்தார் 134 புள்ளிகள் வாழ்ந்து வருகிறார்கள். இங்குள்ள மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோவில் நகரச் சிவன் கோவிலாகும். வ.மு.ப.ராம. குடும்பத்தாருக்குச் சொந்தமான வெள்ளைப் பிள்ளையார் கோவிலும், பா.ராம.பழ. குடும்பத்தாருக்குச் சொந்தமான செல்வ விநாயகர் கோவிலும் உள்ளன. இவ்வூரில் வைரவன் கோவில் நகரத்தார்களுக்குப் பொதுவான படைப்பு வீட்டில் மூன்று ஆண்டுகட்கு ஒருமுறை புதுப்பட்டி, வலையபட்டி ஆகிய ஊர்ப் பங்காளிகளோடு சேர்ந்து பாட்டிமார் படைப்பைப் படைத்து வருகின்றனர். ப.செ.ராம. சிவகாமி குடும்பத்தார்க்கு சொந்தமான நினைத்ததை முடிக்கும் வலம்புரி விநாயகர் கோவிலும் உள்ளது.

இங்கு அருசோ தலைமையில் 22.10.13ல் நிகழ்ந்த திருவாசக முற்றோதல் 70 பேர் கலந்து கொண்டனர். வரவேற்புரை : A.N. வைரவன் செட்டியார், நன்றியுரை : R.M. ஜோதிலிங்கம் செட்டியார், கலந்துகொண்டவர்கள் : 70பேர்.

## 74. விரையாச்சிலை - 11.10.2013

### ஸ்ரீவள்ளி தேவசேனா சமேத ஸ்ரீகல்யாணசுப்பிரமணியர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)

விரையாச் சிலையின் வள்ளி தெய்வ
யானை யுடனாம் ஸ்ரீமுருகா!
மறைகள் பாட மயில்கள் ஆட
மாண்பாய் அமர்ந்த மயில் முருகா!
துறைகள் தோறும் நகரத் தார்கள்
தொண்டு செய்தே முன்னேற
விரைவாய் 'முருகா அருள்வாய் முருகா'
வெற்றி தருவாய் வேல்முருகா!

## 75. விரையாச்சிலை - 11.10.2013

(தெ. செக்கலிங்கம்)

மேலப்பத்தூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 40 கி.மீ., இளையாற்றங்குடி, மாத்தூர், வைரவன் கோயில், இலுப்பக்குடி, சூரக்குடி, வைரவன் கோவில் பிள்ளையார் பட்டி ஆகிய 7 கோவில்களைச் சேர்ந்த 360 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகிறார்கள். இங்கு சுப்ரமணிய சுவாமி கோவில் நகரத்தார்களின் பொதுக்கோயிலாகும். மு.ராம. முத்தையா செட்டியாரும், மு.பழ. முத்தப்ப செட்டியாரும் இக்கோவிலைக் கட்டி 1970-ல் குடமுழுக்கு நிகழ்த்தி, பின்னர் கோவிலை நகரத்தாரிடம் ஒப்படைத்தனர். 1992-ல் நகரத்தார் குடமுழுக்கு நிகழ்த்தி உள்ளனர்.

**நகரத்தார் செய்த திருப்பணி, அறப்பணிகள்:**

1. செட்டி ஊரணி பிள்ளையார் கோவில்.
2. லெட்சுமி விநாயகர் கோவில்.
3. சித்தி விநாயகர் கோவில்.

4. மாணிக்கம் செட்டியார் வகையினரின் பிள்ளையார் கோவில்.
5. இடும்பன் கோவில்.
6. அங்காள பரமேஸ்வரி அம்மன் கோவில்.
7. ஆட்கொண்டான் பிள்ளையார் கோவில்.
8. இவ்வூர் சிவன்கோயில் சுப்பிரமணியர் சன்னதி கோபுரம்.
9. மது அடைக்கலம் காத்த அம்பாள் கோவில் முன் மண்டபம்.
10. சிவன் கோவில் ஊரணி.
11. செட்டி ஊரணி.
12. பூசைக்குண்டு ஊரணி.
13. பெரி. மெ. நடுநிலைப்பள்ளி.
14. இவ்வூரிலிருந்து பனையபட்டி செல்லும் சாலை.
15. கோட்டூரில் சுந்தரலெட்சுமி விநாயகர் கோவில்.
16. மலையக்கோவில் அன்னதான மடம்.

புதுக்கோட்டை திருக்கோவில்கள் அறநிலையத்தைச் சேர்ந்த உய்யவந்த அம்பாள் உடனாய வில்வவனேஸ்வரர் என்ற சிவன்கோவில் இவ்வூரில் உள்ளது. மது அடைக்கலம் காத்த அம்பாள்கோவில் ஊர்ப்பொதுக் கோவிலாகும். சைவ சித்தாந்த வித்தகர் அமரர் முரு.பழ. இரத்தினம் செட்டியார் இவ்வூரைச் சேர்ந்தவர்.

இங்கு திருவாசக முற்றோதல் அருசோ தலைமையில் 11.10.13ல் நிகழ்ந்தது, வரவேற்புரை : வ. சுப்பையா செட்டியார், நன்றியுரை : கரு. வைரவன், கலந்துகொண்டவர்கள் : 83 பேர்.



## 75. பனையப்பட்டி - 25.11.2013

### பனையப்பட்டி ஸ்ரீ மீனாட்சி சொக்கலிங்கர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ.)

பனையப் பட்டி நகரத்தார் பரவிப் போற்றும் சொக்கேசர்
வினைகள் தீர்க்கும் மீனாட்சி வெற்றி கொடுக்கும் அருளாட்சி!
புனையும் வெள்ளி அங்கியிலே பொலியும் காட்சி பொருளாட்சி!
சுனைநீர்க் கங்கை சுரபி எனச் சொக்கர் மீனாள் அருளுகவே!

## பனையப்பட்டி - 25.11.2013

(தெ. சொக்கலிங்கம்)

மேலப்பத்தூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 43 கி.மீ. தொலைவு. இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன் கோயில், இலுப்பைக்குடி, சூரக்குடி, இரணிக்கோயில் ஆகிய ஆறு கோயில்களைச் சேர்ந்த 312 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர். மீனாட்சி சொக்கலிங்கம் கோவில் என்ற நகரச் சிவன் கோவில் உள்ளது. மாத்தூர்க் கோவில் உறையூர்ப் பிரிவு ஐந்து குடும்பத்தாருக்குப் பொதுவான சுப்பையா கோவிலும், சி.மு.மு. குடும்பத்தாருக்குரிய செட்டியூருணி முத்து விநாயகர் கோவிலும் உள்ளன.

சி.மு. முத்தையா செட்டியாரால் 1947-ல் தொடங்கப் பெற்ற சி.மு. முத்தையா செட்டியார் வித்யாலயம், 1987-ல் சி.மு.மு. அரு. அலமேலு அருணாசலம் நடுநிலைப் பள்ளி எனப் பெயர் மாற்றம் பெற்றது. 1988-ல் பனையப்பட்டி நகரத்தார் சங்கம் இப்பள்ளி நிருவாகத்தை ஏற்றது. அவ்வாண்டே இது உயர்நிலைப் பள்ளியாக உயர்த்தப்பெற்றது. தொடர்ந்து நகரத்தார் சங்க நிருவாகத்தில் நடந்து வருகிறது.

இவ்வூர் சுப்பையா சாமி கோவிலில், இங்கிருந்து 9 கி.மீ.தொலைவில் உள்ள வையாபுரி முருகன் கோவிலில் இருந்து வேல் கொண்டு வந்து வைத்து வழிபடுகின்றனர். ஆண்டுதோறும் பங்குனி உத்தரத்திற்கு இங்கிருந்து காவடி கட்டி வையாபுரிமலை சென்று காவடி செலுத்தி வருகின்றனர். மாசி மாதம் கார்த்திகை அன்று பூசை நடத்தி அன்னதானம் செய்கின்றனர்.

இவ்வூரிலுள்ள கா.சுப. குடும்பத்துக்குரிய துவாதசி மடத்தில் 1887ஆம் ஆண்டிலிருந்து தொடர்ந்து ஆண்டு தோறும் புரட்டாசி மாதம் இராமாயணம் படிக்கும் நிகழ்ச்சி நடைபெறுகிறது. மாத்தூர்க் கோவில் உறையூர்ப் பிரிவைச் சேர்ந்த காரியக்காரர் குடும்பத்தாருக்குரிய சாதுக்கள் மடம் திருமண மண்டபமாக ஆக்கப்பெற் றுள்ளது. இதில் ஒரு முருகன் கோவிலும் இருக்கிறது. இம்முருகனுக்கு இக்குடும்பத்தார் ஆண்டுதோறும் வைகாசி விசாகத்தன்று திருவிழா நடத்துகின்றனர். அருகில் உள்ள கொன்னையூர் மாரியம்மன் கோவில் பூச்சொரிதலை இவ்வூரினர் சிறப்பாகக் கொண்டாடு கின்றனர்.

இரணிக்கோயில் பங்காளிகள் ஏகம்மை ஆயாள் படைப்பினைத் தங்களுக்குரிய பொதுப் படைப்பாக் ஆண்டுதோறும் படைத்து வருகின்றனர். மாத்தூர் குளத்தூர்ப் பங்காளிகளில் ஒரு பிரிவினர் ஆண்டு தோறும் ஆடிக்கார்த்திகையன்று பூசை நடத்துகின்றனர். இவ்வூரைச் சேர்ந்த பழ. மனோகரன் I.N.A.ல் பணிபுரிந்தவராவார்.

இங்கு திருவாசக முற்றோதல் அருசோ தலைமையில் 25.11.13ல் நிகழ்ந்தது. வரவேற்புரை : தி. சிவனடியான், நன்றியுரை : புலவர் பழ.முத்து, கலந்துகொண்டவர்கள் : 86 பேர்.



## 76. குழிபிறை - 30.11.2013

### ஸ்ரீமீனாட்சி சுந்தரேசர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ.)

காற்று வெளிச்சம் பூரணமாய்க்
காட்சி அளிக்கும் மீனாட்சி!
நாற்றாய் வாழும் நகரத்தார்
நற்கோ புரமாய் உயர்ந்தோங்க
ஆற்றல் தந்தே பொருள் தந்தே
அருளும் குழிபிறை சுந்தரேசா!
ஊற்றாய் இருந்தே அருள்பொழிந்தே
உயர்விப் பாயே மீனாட்சி!

## குழிபிறை - 30.11.2013

(தெ. சொக்கலிங்கம்)

மேலப்பத்தூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 45 கி.மீ. தொலைவு; இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன் கோவில் இலுப்பக்குடி, இரணிக்கோவில், பிள்ளையார் பட்டி ஆகிய ஆறு கோவில்களைச் சேர்ந்த 843 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர்.

இவ்வூரில் மீனாட்சி சுந்தரேசுவரர் கோவில் என்ற நகரச்சிவன் கோவில் உள்ளது. இது 1905–ல் கட்டப் பட்டது.

**இவ்வூர் நகரத்தார்கள் செய்த திருப்பணி:**

1. சுப்பையா கோவில்
2. ஒரு குடிதண்ணீர் ஊரணி உள்ளிட்ட மூன்று ஊரணிகள்.
3. முத்து விநாயகர் கோவில்.
4. உலகுடை விநாயகர் கோவில்.
5. எம்.சி.டி.ஆர்.எம். தொடக்கப்பள்ளி.
7. வள்ளுவர் நடுநிலைப் பள்ளி.
8. மீனாட்சி மகப்பேறு மருத்துவமனை.

9. இராமர் நிலையம்.
10. இவ்வூரில் நகரத்தார் திருமண மண்டபம் ஒன்று உள்ளது.

ஆண்டுதோறும் புரட்டாசி மாதம் நகரப் பொதுவில் நகரத்தார் மன்றத்திலும், தனிப்பட்ட முறையிலும் மூன்று குடும்பத்தாரால் தத்தம் இல்லங்களிலும் இராமாயணம் படிக்கப் படுகிறது. இது கடந்த 100 ஆண்டுகட்கு மேலாகத் தொடர்ந்து வரும் மரபாகும். இவ்வூரில் மீனாட்சி இலக்கிய சங்கம், முத்தமிழ் மன்றம், கவின்கலை மன்றம் ஆகியவை இலக்கியப் பணி ஆற்றி வருகின்றன. இவ்வூரைச் சேர்ந்த நா.அரு.சின்னையா செட்டியார், கு.பெரி. மா. மாணிக்கம் செட்டியார் I.N.Aல் பணிபுரிந்தவர்கள்.

நகரச்சிவன் கோவில் நான்காவது திருக்குட நன்னீராட்டு விழா 16-9-2007-ல் நடைபெற்றது. கோவில் தோற்றம் 1892 மே மாதம். வையாபுரி அருள்மிகு பாலமுருகன் கோவிலில் ஒவ்வொரு மாதமும் கார்த்திகை அன்று குழிபிறை நகரத்தார் மண்டபத்தில் அன்னதானம் நடைபெறுகிறது. குழிபிறை சிவன் கோவில் நிர்வாகம் செய்வது நகரத்தார்களால் தேர்வு செய்யப்பட்ட 9 டிரஸ்டிகளும் 12 தர்மகர்த்தாக்களும்! வருடம் 3 முறை நகரத்தார் பொதுக்கூட்டம் சிறப்பாக நடைபெற்று வருகிறது. நகரத்தார் சார்பில் லாக்கர் யூனிட் ஏற்பாடு செய்து, நல்லமுறையில் நிர்வாகம் செய்யப்பட்டு நகரத்தார்கள் பயனடைந்து வருகிறார்கள்.

இங்கு திருவாசகம் முற்றோதல் 30.11.13ல் அருசோ தலைமையில் நிகழ்ந்தது, வரவேற்புரை : மு. சேக்கப்ப செட்டியார், நன்றியுரை : சுப்பையா செட்டியார், கலந்து கொண்டவர்கள் : 103 பேர்.



## 77. நற்சாந்துபட்டி - 22.12.2013

### சிவகாமி அம்மன் உடனாய சிதம்பரேசுவரர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ)

நச்சாந் துபட்டி நகரத்தார்
　　நாட்டுக் கோட்டை சிகரத்தார்
கச்சை கட்டிக் கற்கோவில்
　　காக்கும் அன்னை சிவகாமி
உச்சம் சிதம்ப ரேஸ் வரரும்
　　உயர்வாய்க் காக்கும் ஊர் என்றும்
இச்சை கிரியை ஞானத்தில்
　　என்றும் சிறக்க அருளுகவே!

## நற்சாந்துபட்டி - 22.12.2013

(தெ. சொக்கலிங்கம்)

மேலப்பத்தூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து திருமயம், விரையாச்சிலை வழியாக 40 கி.மீ. தொலைவு. இவ்வூருக்கு திருமலை சமுத்திரம் என்ற மற்றொரு பெயரும் உண்டு. இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன் கோவில், இலுப்பக்குடி, பிள்ளையார்பட்டி ஆகிய ஐந்து கோவில்களைச் சேர்ந்த 748 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர்.

இங்கு சிவகாமி அம்பாள் உடனாய சிதம்பரரேசுவரர் திருக்கோயில் என்ற நகரச்சிவன் கோவில் உள்ளது. இக்கோவில் 1928–இல் கட்டப்பட்டது. இங்கு வைரவன் கோவில் பெரிய வகுப்பைச் சேர்ந்த நகரத்தார்களுக்குப் பொதுவான பழநியாண்டவர் திருக்கோயிலும், இளையாத்தங்குடி நகரத்தார்களில் வீ.மு.வீ. வீரப்ப செட்டியார் குடும்பத்தினரால் கட்டி நிருவகிக்கப்படும் வீரராகவப் பெருமாள் கோவிலும் உள்ளன.

கோவில்களை ஒட்டி 3 ஊருணிகள் உள்ளன. நகரத்தார் பொதுவில் கட்டப்பட்ட கல்யாண மண்டபமும் உள்ளது. நகரச் சிவன் கோயிலுக்கு வேல் எடுத்து வந்து நகரத்தார் நடத்தும் மகேசுவர பூசையும் சிறப்பாக நடைபெறுகிறது.

இவ்வூர் K.M.RM.இராம குமரப்ப செட்டியார் 1954–ல் தம் தந்தையார் நினைவாகத் தொடங்கிய நடுநிலைப் பள்ளி, அவரது மகன் கும. இராமநாதன் செட்டியாரால் 1988–இல் இராமநாதன் செட்டியார் மேல்நிலைப்பள்ளி யாக உயர்த்தப்பட்டது. மேலும் நகரப் பொதுவில் ஸ்ரீ சண்முகவிலாச கலாசாலை என்ற தொடக்கப்பள்ளி ஒன்றும் நடத்தப்படுகிறது. கும.ராம.குமரப்ப செட்டியார் கொடுத்த நன்கொடையுடன் தொடங்கப்பெற்ற ஆரம்ப சுகாதார நிலையம் ஒன்றும் இயங்குகிறது.

இங்கு சாமியாடிச் செட்டியார் எனப் பெயர் பெற்ற ஆண்டியப்ப செட்டியார் வீடு, கம்பன் செட்டியார் வீடு, பெ.ராம. குடும்பத்தார் வீடு ஆகிய வீடுகளில் 100 ஆண்டுகளுக்கு மேலாக புரட்டாசி மாதத்தில் தொடர்ந்து இராமாயணம் படிக்கப்பட்டு வருகிறது.

**இங்கு நடைபெறும் படைப்புகள்:**

லெட்சுமி அப்பத்தாள் படைப்பு, உமையாள் ஆயாள் படைப்பு – இளையாத்தங்குடி பெருமருதூருடையார், நல்லி அப்பத்தாள் படைப்பு – நகரத்தார்கள் நடத்துவது, வள்ளி அப்பத்தாள் படைப்பு – மாத்தூர் உறையூர், சேவாத்தாள் படைப்பு – வைரவன் கோவில் நகரத்தாரில் கழனிவாசல் உடையார், அழகி அப்பத்தாள் படைப்பு – பிள்ளையார்பட்டி நகரத்தார்கள் வேகுப்பட்டி நகரத்தார்களுடன்,

மேலும் நற்சாந்துபட்டி மற்றும் 9 ஊர்களைச் சேர்ந்த இலுப்பக்குடி நகரத்தார்கள் இரண்டு ஆண்டுக்கு ஒரு முறை படைத்து வரும் அடைக்கம்மை அப்பத்தாள் படைப்புக்குரிய கோவில் நற்சாந்துபட்டியிலேயே அமைந்துள்ளது. வைரவன் கோவில் பெரிய வகுப்பு நகரத்தார் தங்கள் பழநி ஆண்டவர் கோவிலில் ஆடிப் பூசை நடத்துகின்றனர். இவ்வூரைச் சேர்ந்த வீர. மாணிக்கம் செட்டியார், சித. சிதம்பரம் செட்டியார் ஆகியோர் I.N.A.ல் பணிபுரிந்துள்ளனர். இவ்வூரைச் சேர்ந்த பெ.ராம.பெ. குடும்பத்தார் திருக்கொள்ளம்பூதூரி லும் திருப்பேரையூரிலும் திருப்பணி செய்துள்ளனர். வைரவன் கோவில் பெரிய வகுப்பைச் சார்ந்த நக.சுப. நல்ல கருப்பன் செட்டியார் குடும்பத்தினர் சிவன்கோவில் கட்டியதிலிருந்து பால் கட்டளை ஏற்படுத்தி நித்தியப்படி பால் அபிஷேகம் செய்து வருகிறார்கள். வீ.மு. குடும்பத்தின் வீரப்ப செட்டியார் நற்சாந்துபட்டிக்கு அருகில் உள்ள மலையக் கோவிலில் மலைமேல் அழகிய முருகன் கோவில் ஒன்றைக் கட்டியுள்ளார்கள். முத்துராம குருசாமி குழுவினரால் ஐயப்பசாமி கோவில் கட்டப் பட்டுள்ளது. நற்சாந்துபட்டி நகரத்தார்கள் முயற்சியால் சிவன்கோவிலுக்குச் சொந்த இடத்தில் பாதுகாப்புப் பெட்டகம் ஒன்று கட்டப்பட்டு இயங்கி வருகிறது. நகரச்சிவன் கோவிலில் ஆங்கில மாதம் 4வது ஞாயிறு மாலை அருசோ திருவிளையாடற்புராணம் தொடர் சொற்பொழிவு நிகழ்த்துகிறார். முருகப்பன், பழநியப்பன் ஏற்பாடு.

இங்கு அருசோ தலைமையில் 22.12.13ல் திருவாசகம் முற்றோதல் நிகழ்ந்தது: சிவனடியான் செட்டியார் வரவேற்றார். 96 பேர் கலந்து கொண்டனர்.



## 78. அரிமளம் - 05.01.2014

### அரிமளம் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ. பாடியது)

அருளா ளர்கள் நிறைந்துள்ள
அரிம ளத்தில் நகரத்தார்
அருளால் அமைத்த கற்கோவில்
அன்னை மீனாள் சுந்தரேசா!
பொருளும் அருளும் பொழிகின்றாய்
பொலிவும் வலிவும் தருகின்றாய்
இருளை நீக்கி ஒளியூட்டி
என்றும் காப்பாய் மீனாட்சி!

## அரிமளம் - 05.01.2014

(தெ. சொக்கலிங்கம்)

கீழப்பத்தூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து ராயவரம் வழியாக 44 கி.மீ. தொலைவு. இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன் கோவில், நேமங்கோயில், இலுப்பக்குடி, இரணிக்கோவில், பிள்ளையார்பட்டி ஆகிய ஏழு கோவில்களைச் சேர்ந்த 890 புள்ளிகள் வாழ்ந்து வருகின்றனர். அரி (சந்திரன்) மழவாகி (குழந்தையாகி) வந்து இவ்வூரில் சாபம் நீங்கப் பெற்றமையால் இப்பெயர் வந்தது எனத் தலபுராணம் கூறுகிறது. இவ்வூர் ஜெயவிளங்கியம்மன் கோயிலில் அரும்பழம் பழுக்கும் ஏறழிஞ்சில் மரம் உள்ளது. ஆகவே அரும்பழம் என்ற பெயர் அரிமழம் என மருவியதாகவும் கூறுகின்றனர். மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோவில் நகரச்சிவன் கோயில் ஆகும். 1870-ல் முதற் குடமுழுக்கு நடைபெற்றது. இங்கு சித்திரைத் திருவிழாவும் மகர் நோன்பும் சிறப்பாகக் கொண்டாடப்படும். சித்திரைத்

திருவிழாவில் தெப்ப உற்சவம் மிக விமரிசையாய் நடைபெறுகிறது. மகர் நோன்பில் 7 கோயில் சாமிகள் அம்பு போடும்.

**இவ்வூரில் நகரத்தார் செய்த திருப்பணி மற்றும் அறப்பணிகள்:**

1. சீனிவாசப் பெருமாள் கோவில் என்னும் வடகலைப் பெருமாள் கோவில்.
2. சௌந்தரராசப் பெருமாள் கோவில் என்னும் தென்கலைப் பெருமாள் கோவில்.
3. ஜெயவிளங்கியம்மன் கோவில்.
4. முருகன் கோவில்.
5. ஐயனார் கோவில்.
6. புது அரிமளம் செல்வ விநாயகர் கோவில். (இங்கு அருசோ ஒருவாரம் இராமாயணம் தொடர் சொற்பொழிவு நிகழ்த்தினார்.)
7. மீனாட்சிபுரம் பிள்ளையார் கோவில்.
8. செட்டியூரணி.
9. எட்டாம் மண்டகப்படி ஊரணி.
10. சிவன் கோவில் ஊரணி.
11. செல்வ விநாயகர் கோயில் ஊரணி.
12. மீனாட்சிபுரம் பிள்ளையார் கோவில் ஊரணி.
13. பெரிய பொற்குடையாண் ஊரணி.
14. சிறிய பொற்குடையான் ஊரணி.
15. அரசுமேல்நிலைப்பள்ளி.
16. அரசு பெண்கள் உயர்நிலைப் பள்ளி.
17. தொடக்கப் பள்ளி.
18. செல்லப்பா அரசினர் மருத்துவமனை.
19. குருபூசை மடம்

அரிமளம் நகரத்தார் வெளியூரில் செய்த திருப்பணிகள்:

1. கீழப்பனையூர் காமாட்சி அம்மன் கோவில்.
2. கீழப்பனையூர் பிள்ளையார் கோவில் ஊரணி.
3. திருப்பெருந்துறையில் திருவாசக மடம், நந்தவனம், குளம்.
4. திருநாகேஸ்வரத்தில் பசுமடம்.
5. காஞ்சிபுரத்தில் தேவாரப் பாடசாலை.
6. திருநீடூரில் சிவன்கோயில்.
7. திருவேற்காட்டில் நந்தவனம்.
8. திருமழபாடியில் பசுமடம்.
9. திருவெண்காட்டில் பசுமடம்.
10. கந்தர்வ கோட்டையில் சத்திரம்.
11. வடலூரில் விடுதி, அன்னதான விடுதி.
12. கோவிலூரில் வேதபாடசலை.
13. செல்லூரில் (மதுரை) பசுமடம்.

கண்ணதாசன் இலக்கியப் பேரவை பல ஆண்டுகளாக இவ்வூரில் தமிழை வளர்த்து வருகிறது. இவ்வூரில் குட்டையன் செட்டியார் வகையார் குருபூசை மடம் உள்ளது.

ப.செ.செ.கதி.செ. குடும்பத்தாரால் அப்பர் குருபூசை கீழமடத்தில் கொண்டாடப்படுகிறது. வைகாசி சுவாதியில் சாத்தப்ப சுவாமிகள் கோவிலிலும், சேவுக சுவாமி கோவிலிலும் நகரத்தார் குருபூசை செய்கின்றனர். அரிமளத்தில் தங்கி செட்டி நாட்டில் பக்தி வளர்த்த கோடக நல்லூர் சுந்தர சுவாமிகள் அதிட்டானத்தில் சோம.சிவ. குடும்பத்தார் ஐப்பசி மாதம் குருபூசை வழிபாடு செய்கின்றனர். அரசஞ் சண்முகனார், சே.ரா.சுப்பிரமணியக் கவிராயர், மு.ரா. கந்தசாமிக் கவிராயர் ஆகிய புலவர்களை அரிமளம் போற்றி

ஆதரித்தது. தொல்காப்பியம் பாயிர விருத்தி, அரிமளம் மீனாட்சி அம்மை பிள்ளைத்தமிழ், அரிமளத் தலபுராணம் ஆகியவை இங்கு தோன்றிய நூல்கள். சிவன் கோயிலில் ஞாயிறு தோறும் வார வழிபாடு 23 ஆண்டுகளாக நடைபெற்று வருகிறது. ஆண்டுதோறும் இதற்கான விழா ஒன்றும் நடைபெற்று வருகிறது.

இதனை நடத்துபவர் முத்து செல்லப்ப செட்டியார், முருகப்ப செட்டியார் ஆகியோர்.

இங்கு திருவாசகம் முற்றோதல் அருசோ தலைமையில் 05.01.2014ல் நிகழ்ந்தது, வரவேற்புரை - சுப்பிரமணியன் செட்டியார், கோயில் டிரஸ்டி., நன்றியுரை - சோமசுந்தரம் செட்டியார் (தஞ்சை), கலந்துகொண்டவர்கள் - 110 பேர்.

இங்குள்ள ஜெயவிளங்கி அம்மன் கோவில் கும்பாபி ஷேகத்தில் *02.11.11*ல் அருசோ பாடிய பாடல் வருமாறு,

விதை ஏறும் அழிஞ்சில் விருட்சத்து நிழலில்
வீற்றிருந்து காக்கும் அம்மா.
வெற்றிக்கு நீயே! விளங்கி எனும் தாயே!
வினைபோக்கி அருளு வாயே
சதைஏறி நின்ற சண்டாள மகிஷன்
தனை அன்று சம்ஹ ரித்தாய்
சாகாத அசுர சக்திகளை எல்லாம்
சக்கையாய் ஆக்கி விட்டாய்
கதையாக முன்பு கானத்தில் இங்கு
கனகமாய் அமர்ந்து விட்டாய்
கனலாக வந்து புனலாக நின்று
காப்பாற்று கின்ற அம்மா
புதையாத சின்னப் பொற்குடையான் குளமாம்
பொன்னான அரிம ளத்தில்
புகழோங்கும் அம்மா! ஜெயவிளங்கி அம்மா!
பொன்னடிகள் வணங்கி னோமே.



# 79. இராயவரம் - 26.02.2014

## ஸ்ரீமுத்துமாரி அம்மன் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ. பாடியது)

செல்வம் கல்வி செழித்தோங்கும்
சீர்சால் ராய வரம் ஆளும்
முல்லை முத்து மாரியம்மா!
முதியோர் இளையோர் அனைவோரும்
நல்லார் பக்தி நயமானார்
நாளும் காக்கும் நாயகியே!
எல்லோ ருக்கும் பேறெல்லாம்
என்றும் அருளிக் காப்பாயே!

## இராயவரம் - 26.02.2014

(தெ. சொக்கலிங்கம்)

*கிழப்பத்தூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 26 கி.மீ.* தொலைவு; இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன் கோவில், இரணிக்கோவில், பிள்ளையார்பட்டி ஆகிய 6 கோவில்களைச் சேர்ந்த 800 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர்.

**இவ்வூர் நகரத்தார்கள் செய்த திருப்பணிகள்:**

1. அருள்மிகு முத்துமாரியம்மன் கோவில்.
2. வெ.மு.வகையினரின் மீனாட்சி சொக்கலிங்கர் கோவில்.
3. இவ்வூரில் இருந்து 2 கி.மீ. தொலைவில் உள்ள மலைக்கொழுந்து ஈசர் கோவில் மற்றும் விடுதி.
4. இவ்வூரில் இருந்து 2 கி.மீ. தொலைவில் உள்ள செங்கீரை என்னும் ஊரில் சிவன் கோவில் மற்றும் விடுதி.

5. புது ஊருணி.
6. பழைய ஊருணி.
7. பொன்னாட்சி ஊருணி.
8. சிவன்கோவில் ஊருணி.
9. நாராயணன் செட்டி ஊருணி மற்றும் பிள்ளையார் கோவில்.
10. நல்லான்செட்டி ஊருணி.
11. இவ்வூரை அடுத்த ஆயிங்குடியில் உலகங்காத்தாள் ஊருணி மற்றும் விடுதி.
12. சு.க.தி.காந்தி உயர்நிலைப்பள்ளி.
13. சுப்பிரமணியன் பாலிடெக்னிக்.
14. சுப்பிரமணியன் செட்டியார் ஆரம்ப சுகாதார நிலையம்.

வெ.மு. வகைப் பங்காளிகள் அவர்களுக்குச் சொந்தமான வெ.மு. மடத்தில் நால்வர் குருபூசைகளை நடத்தி வருகின்றனர். வெ.மு. வகைப் பங்காளிகள் தனியாகவும், இளையாத்தங்குடி கிங்கிணிக் கூருடையார் பங்காளிகள் தனியாகவும் ஆண்டுதோறும் ஆடி மாதம் மகேசுவர பூசை நடத்தி வருகின்றனர். இவ்வூர் பி.எல். பெருமாள் என்பவர் I.N.A.ல் கேப்டனாகப் பணிபுரிந்தவர்.

**இவ்வூரில் நடைபெறும் படைப்புகள்:**

1. வைரவன் கோவில் நகரத்தார் நடத்தும் அடைக் காத்தாள் – கருப்பையா படைப்பு.
2. இளையாத்தங்குடி கழனிவாசல் குடிப்பிரிவினர் நடத்தும் நல்லாத்தாள் – கருப்பையா படைப்பு.
3. மாத்தூர் மணலூர்ப் பிரிவினர் நடத்தும் சேவியாரம்மன் படைப்பு.

4. மாத்தூர் கண்ணூர்ப் பிரிவினர் சிறுகூடல்பட்டி சென்று அங்கு நாராயணசாமி படைப்பு நடத்தி, மறுநாள் தங்கள் குலதெய்வமாகிய வைரவன்பட்டி மக்கமடை ஐயனார் கோவிலுக்குச் சென்று திரும்பி, மூன்றாம் நாள் இராயவரத்தில் முத்தாயிக்கிழவி படைப்பு நடத்துகின்றனர்.
5. இளையாத்தங்குடி கிங்கிணிக்கூருடையார் கல்லல், தேவகோட்டை, நெற்குப்பை, புதுவயல் பங்காளி களுடன் சேர்ந்து 3 ஆண்டுகட்கு ஒருமுறை தெய்வானை அம்மன் படைப்பு படைக்கின்றனர்.
6. இரணிக்கோவில் பங்காளிகளில் ஒரு பிரிவினர் இராங்கியம், உலகம்பட்டி, காரைக்குடி, குருவிக் கொண்டான்பட்டி, கொப்பனாபட்டி, செவ்வூர், மிதிலைப்பட்டி, வலையபட்டி பங்காளிகளுடன் சேர்ந்து இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை செங்கிடாய்க் கருப்பர் படைப்பு நடத்துகின்றனர்.
7. இரணிக்கோயில் பங்காளிகளில் மற்றொரு பிரிவினர் கண்டனூர், கானாடுகாத்தான், கொ.லெட்சுமிபுரம், கொத்தமங்கலம் பங்காளிகளுடன் சேர்ந்து ஆண்டு தோறும் காயாத்தாள் படைப்பு நடத்தி வருகின்றனர்.

இவ்வூர் அ.கு. பங்காளிகள் விரையாச்சிலையில் அடைக்கலம் காத்தாள் கோவிலுக்கு நந்தவனம், விடுதி ஏற்படுத்தி நிருவகித்து வருகின்றனர். குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா இவ்வூரைச் சேர்ந்தவர். குழந்தை இலக்கியத்தொண்டு செய்ததற்காக குடியரசுத் தலைவரிடம் வெள்ளிக் கேடயம் பரிசு பெற்றவர்; மத்திய மாநில அரசுகளிடமிருந்து பல பரிசுகள் பெற்றவர். இவரது மகள் தேவி நாச்சியப்பன் காரைக்குடியில் 'கவிமணி குழந்தைகள் சங்கம்' நிறுவித் தொண்டாற்றி

வருகிறார். மூ.வீ. அழ.நா. குடும்பத்தார் முயற்சியில் எல்லோரும் இணைந்து முத்துமாரி அம்மனுக்கு சொர்ண அங்கி செய்திருக்கிறார்கள். புலமை மிக்க இராயர் மரபைச் சேர்ந்த கவிராயர்கள் வாழ்ந்ததால் இராயவரம் என்று பெயர் வந்தது என்று சொல்லப்படு கிறது. மு.வீ. குடும்பத்தார், ப.வ. குடும்பத்தார், மு.த.மு. குடும்பத்தார் முயற்சியில் முதியோர் இல்லம் நடந்து வருகிறது. வள்ளியப்பன் என்பவர் ISRO-ல் விஞ்ஞானி யாக இருக்கிறார்.

சக்தி கோவிந்தனின் 'சக்தி' மாத இதழ் இவ்வூரிலிருந்து வெளிவந்தது. 'பழநியப்பா பிரதர்ஸ்' குடும்பத்தாரும் ஐந்திணை பதிப்பகம் உரிமையாளர் குழ. கதிரேசன் அவர்களும் இவ்வூரைச் சேர்ந்தவர்கள். ப.வ.ராம. பழநியப்ப செட்டியார் தமிழ்நாட்டில் முதல் சட்டசபை உறுப்பினராக (எம்.எல்.ஏ.) இருந்தவர்கள் (1952). தற்போது முதலமைச்சர் ஜெயலலிதாவால் கௌரவிக் கப்பட்டார். நூற்றாண்டு விழாக்கண்ட பெரியவர் M.A.M.SP. பழநியப்ப செட்டியார் நம் திருவாசக முற்றோதலில் கலந்து கொண்டார்; எல்லோருக்கும் ஆசி வழங்கினார். சு.கதி. கதிரேசன் செட்டியார் மணிவிழா செய்து கொள்ளாமல் அப்பணத்தைக் கொண்டு சு.கதி. பாடசாலை ஆரம்பித்தார். அதுவே பின்னர் சு.கதி. உயர்நிலைப்பள்ளி ஆகியது. M.A.M.குடும்பத்தினரால் நிருவகிக்கப்பட்டு வருகிறது.

திருவாசக முற்றோதல் இங்கு 26.02.14ல் அருசோ தலைமையில் நிகழ்ந்தது. வரவேற்புரையும் நன்றியுரையும் - மு. சபாரெத்தினம், கலந்துகொண்டவர்கள் - 102 பேர்



## 80. கடியாபட்டி - 07.02.2014

## ஸ்ரீபிரம்ம வித்யாம்பாள் சமேத ஸ்ரீபூமீஸ்வர சுவாமி துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ)

விண்ணோங்கு கோபுரமும்
விளைவோங்கு வயல்களுமாய்ப்
பண்ணோங்கு தமிழ்கடியா
பட்டியிலே வித்யாம்பாள்
மண்ணோங்கு பூமீசா!
மனைஓங்கு நகரத்தார்
பெண்ணோங்க வளமோங்கப்
பேர்ஓங்கக் காப்பாயே!

## கடியாபட்டி - 07.02.2014

(தெ. சொக்கலிங்கம்)

கீழ்ப்பத்தூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 24 கி.மீ. தொலைவு; இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன் கோவில், இலுப்பக்குடி, இரணிக்கோவில், பிள்ளையார்பட்டி ஆகிய 6 கோவில்களைச் சேர்ந்த 840 புள்ளிகள் வாழ்ந்து வருகின்றனர். இவ்வூர் மூன்று பகுதிகளாக அமைந்துள்ளது. அவை காடத்தான்பட்டி, விசுவநாதபுரம், இராமச்சந்திரபுரம். இவற்றுள் காடத்தான்பட்டி பழைமையானது. எனவே அப்பகுதி பழையூர் என்றே வழங்குகிறது. அஞ்சல்நிலையம் இராமச்சந்திரபுரம் என்ற பெயரால் அமைந்துள்ளது.

பிரம்மவித்யாம்பாள் உடனாய பூமீஸ்வரர் திருக்கோவில் இவ்வூர் நகரச் சிவன் கோவில் ஆகும். இதன் முதல் குடமுழுக்கு 1893ஆம் ஆண்டு

நடைபெற்றது. பிறகு பல குட முழுக்குகள் நடந்துள்ளன. சமீபத்தில் 04.05.2012–ல் குடமுழுக்கு நடைபெற்றது.

**இவ்வூர் நகரத்தார்கள் இவ்வூரில் செய்த திருப்பணி மற்றும் அறப்பணிகள்:**

1. முத்து விநாயகர் கோயில்.
2. சித்தி விநாயகர் கோவில்.
3. கூட்டப்புளிப் பிள்ளையார் கோவில்.
4. சுப்பையா கோவில் (மாமர வீதி) இது பெரிய அளவில் மணிவாசகர் பதிப்பகம் மீனாட்சி சோமசுந்தரத்தால் திருப்பணி செய்யப்பெற்றுள்ளது.
5. சிவன்கோவில் ஊருணி.
6. கும்பளாங்குண்டு ஊருணி.
7. கூட்டப்புளி ஊருணி.
8. உலகப்பர் மேல்நிலைப்பள்ளி.
9. கணேசர் நடுநிலைப்பள்ளி.
10. தொடக்கப்பள்ளி.
11. அரசு மருத்துவமனை கட்டடம்.
12. உ.மு.உ. அறுபத்து மூவர் குருபூசை மடம்.
13. கு.தெ. தெண்டாயுதபாணி திருக்கோயில்.

**இவ்வூர் நகரத்தார்கள் வெளியூர்களில் செய்த திருப்பணி மற்றும் அறப்பணிகள்:**

1. திருப்பாதிரிப்புலியூர் சிவன்கோவில் (தீ.சொ.முரு; தீ.நா.மு.; தீ.அ.சித)
2. குருபூசை மடம் (தீ.சொ)
3. தேவாரப் பாடசாலை (தீ.சொ.)
4. அன்னசத்திரம் (தீ.நா.மு.)

5. ஆரம்பப்பாடசாலை (தீ.நா.மு.)
6. திருவண்ணாமலை அண்ணாமலையார் கோவிலில் இராச மண்டபம் (தீ.சொ.நா. மற்றும் தீ.அ.)
7. கடியாபட்டியை அடுத்த உமையாள்புரம் சிவன்கோயில் (தீ.நா.மு.)
8. திருமயம் சத்யகிரிப் பெருமாள் கோவில் மற்றும் ஊருணி, சத்யமூர்த்தி உயர்நிலைப்பள்ளி (தீ.நா.மு.)
9. திருச்சாத்தமங்கை சிவன்கோவில் (பி.கு.நா.நா)
10. திருக்கண்ணபுரம் சிவன்கோவில் திருப்பணி செய்த நகரத்தார்களுள் இவ்வூர் அழ.அ.அழகப்ப செட்டியாரும் ஒருவர்.

பள்ளத்தூர் அழகஞ்செட்டியார் படைப்புப் பங்காளிகள் இவ்வூரில் மு.சி.அழ. அன்னசத்திரத்தை நிறுவி ஆடி மாதம் மூன்று நாட்கள் மகேசுவர பூசை நடத்தி அன்னதானம் செய்து வருகின்றனர். இவ்வூர் நகரத்தார்களும் மகேசுவர பூசைகள் நடத்தி அன்னதானம் செய்து வருகின்றனர். அ.அழ.இராம. இளையபெருமாள், பி.க.வ.சு. அண்ணாமலை ஆகியோர் I.N.A.ல் பணிபுரிந்தவர்கள். தீ.சொ.கி. வீடு, தீ. சொ. நா. வீடு, தீ. சொ. ராம. வீடு, தீ.நா.மு. வீடு, பி.கு.நா. வீடு ஆகியவை இவ்வூரிலுள்ள கலைநயம் சார்ந்த மிகப்பெரிய வீடுகள் ஆகும். இவ்வூர் ச. மெய்யப்பனாரின் மணிவாசகர் பதிப்பகம் நல்ல பல தமிழ் நூல்களை வெளியிட்டுத் தமிழ்த்தொண்டு ஆற்றி வருகிறது. ச.மெ.மகன் சோமுவின் பணியும் அளப்பரியது.

ஸ்ரீபூமீஸ்வர சுவாமி நகரத்தார் முதியோர் இல்லம் ஒன்று ஆரம்பிக்கப்பட்டு சிறந்த முறையில் நடைபெற்று வருகிறது. மகாகவி கண்ணதாசன் நடைபயின்ற ஊர்.

குன்றக்குடி அடிகளார் படித்த ஊர். காந்திஅடிகள் தரிசனம் தந்த ஊர். அருள்மிகு பூமீஸ்வர சுவாமி நகரச்சிவன் கோவில் திருவிழா 70 ஆண்டுகளுக்குப்பின் தற்போது 10 ஆண்டுகளாக சீரும் சிறப்புமாக நடைபெற்று வருகிறது.

இங்குள்ள திருத்தேர் மிகவும் விசேடமானது. சிற்ப வேலைக்கோர் சிகரமாக விளங்குகின்றது. இதில் இராமாயணக் கதை தத்ரூபமாகச் செதுக்கப்பட்டுள்ளது. 70 ஆண்டுகளாக ஓடாத தேரைத் தற்சமயம் ஓடச் செய்திருப்பது இவ்வூர் நகரத்தார்களின் தனிப்பெருமை ஆகும்.

நிறைய சிறுவர் பத்திரிகைகள் அச்சிட்டு வெளியிட்ட பெருமையும் இவ்வூர் நகரத்தார் பெருமக்களுக்கு உண்டு. மகாகவி சுத்தானந்த பாரதி விஜயம் செய்த ஊரும் கூட.

இங்குள்ள பூமீஸ்வர சுவாமி திருக்கோவில் மிகச் சிறந்த வாஸ்துஸ்தலம். இங்கு வாஸ்து பூஜை செய்து வீடு பேறு அடைந்தவர்கள் பலர். வாருங்கள்- வணங்குங்கள் பூமீஸ்வரரை - வீடு கட்டும்பேறு பெறுங்கள்.

70 ஆண்டுகளுக்குப்பின் திரு. V.E. லெட்சுமணன், N. ரெத்தினம், CT. சோலையன், AR. சிதம்பரம்- ஏ.ஆர். குழந்தையன் ஆகியோர் அடங்கிய திருவிழாக் குழுவின் மிகப்பெரும் முயற்சியால் திருவிழா சிறந்த முறையில் நடைபெற்று வருகிறது.

இங்கு திருவாசகம் முற்றோதல் - அருசோ தலைமையில் 07.02.14ல் வழக்கம் போல் சிறப்பாக நடைபெற்றது.



## 81. கொத்தமங்கலம் - 23.02.2014

### ஸ்ரீதிரிபுரசுந்தரி சமேத
### ஸ்ரீதிரிபுரேஸ்வரர் துதி
(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ.)

கொத்த மங்கல நகரத்தார்
கோலா கலமாய்க் கொண்டாடும்
அத்தன் திரிபுர ஈஸ்வரனும்
அன்னை திரிபுர ஈஸ்வரியும்
புத்தம் புதிதாம் கற்கோவில்
பொலிய எழுந்தே காக்கின்றார்
சித்தம் மகிழத் தொழுவோமே!
செல்வம் ஞானம் புகழ்சேரும்.

## கொத்தமங்கலம் - 23.02.2014

(தெ. சொக்கலிங்கம்)

*பதினாறூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 18 கி.மீ. தொலைவு. மாத்தூர், வைரவன் கோவில், இலுப்பக்குடி, இரணிக்கோவில், பிள்ளையார்பட்டி ஆகிய 5 கோயில்களைச் சேர்ந்த 335 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர்.*

**இவ்வூர் நகரத்தார்கள் செய்த திருப்பணி மற்றும் அறப்பணிகள்:**

1. *அருள்மிகு சௌந்தர நாயகி உடனாய மாங்காட்டீசர் கோவில் (சிவகங்கை அரச குடும்பத்துக்கு உரியது).*

2. அருள்மிகு திரிபுரேஸ்வரர் திரிபுரசுந்தரி ஆகாச பைரவர் உடனாய திருவீசர் கோவில் (புதுக்கோட்டை அரச குடும்பத்திலிருந்து லெ. குடும்பத்துக்கு ஒப்படைக்கப்பட்டது.)

3. அருள்மிகு வாசுதேவப் பெருமாள் கோவில் (சி.அ.சு.செ. குடும்பத்தினர் திருப்பணி)

4. இரணிக்கோயில் பங்காளிகளுக்குரிய பிள்ளையார் கோவில்.

5. மாத்தூர் அரும்பாக்கூர் பங்காளிகளுக்குரிய ஐந்நூற்றீஸ்வரர் பிள்ளையார் கோயில்.

6. நகரத்தார்களால் வெட்டப்பட்ட ஆறு ஊருணிகள்.

7. செல்வநாயகி நடுநிலைப்பள்ளி.

8. ஆர்.எம்.எஸ்.பி. உமையாள் ஆச்சி குடும்பத்தாரின் ஆங்கில வழித் தொடக்கப்பள்ளி.

9. எம்.ஆர். அறநிலையம் நடத்தும் ஒரு மருத்துவமனை மற்றும் பள்ளிக்கூடம்.

7 ஊர்களைச் சேர்ந்த மாத்தூர் அரும்பாக்கூர் பங்காளிகள் இணைந்து இவ்வூரில் ராயாத்தாள் படைப்பை ஆண்டுதோறும் படைத்து வருகின்றனர்.

இரணிக்கோவில் பங்காளிகளின் இருவகையாரும் தனித்தனியே ஆண்டுதோறும் சித்திரை மாதம் மகேஸ்வர பூசை நடத்தி அன்னதானம் செய்து வருகிறார்கள். இங்குள்ள சில நகரத்தாருக்குப் பொதுவான சித்தூரணி மடத்தில் புரட்டாசி மாதம் நகரத்தார் பொதுவில்

இராமாயணம் படிக்கப்பட்டு வருகிறது. இவ்வூர் இம்மடத்தில் அருசோ சில ஆண்டுகளாக இராமாயணம் தொடர் சொற்பொழிவு நிகழ்த்தி வருகிறார். இவ்வூர் மு.கி. குடும்பத்தைச் சேர்ந்த மு.கி. அறநிலையம் சுவாமி மலையில் பல அறப்பணிகளைச் செய்து வருகிறது.

**மேலும் சிறப்புகள்:**

1. நவராத்திரி சமயத்தில் விஜயதசமி அன்று இரண்டு சிவன்கோவில்கள், உலகநாயகி அம்மன், வர்சுதேவப் பெருமாள் ஆகிய நான்கு சுவாமிகள் அம்பு எய்தல் மிகவும் கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும்.
2. இரண்டு சிவன் கோவில்கள் சிறப்பு (மேலச்சிவன் கோவில், கீழச்சிவன் கோவில்)

இங்கு திருவாசகம் முற்றோதல் 23.02.14-ல் சிறப்பாக அருசோ தலைமையில் நிகழ்ந்தது.



20

## 82. கொ.இலட்சுமிபுரம் - 09.03.2014

### கொத்தமங்கலம் இலட்சுமிபுரம்
### ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ. பாடியது)

பொருளா ளர்கள் நிறை கொத்த
மங்க லத்து லெட்சுமிபுர
அருளா ளர்கள் தொழுகின்ற
அன்னை மீனாள் சுந்தரேசா!
இருளை ஓட்டி ஒளியேற்றி
இன்பம் செல்வம் தமைக்கூட்டிப்
பொருள் சேர் வாழ்வைத் தருவாயே!
புதுமை தந்து காப்பாயே!

## கொ.இலட்சுமிபுரம் - 09.03.2014

(தெ.சொக்கலிங்கம்)

பதினாறூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 16 கி.மீ. தொலைவு. செட்டி நாட்டில் இலட்சுமிபுரம் என்ற பெயரில் இரண்டு ஊர்கள் உள்ளன. அவற்றைப் பிரித்தறிவதற்கு அருகில் உள்ள ஊர்ப்பெயரை இணைத்து வழங்குவ்து மரபு. அம்மரபுப்படி இவ்வூர் கொத்தமங்கலம் இலட்சுமிபுரம் என்றும் கொ.இலட்சுமி புரம் என்றும் வழங்கப்படுகிறது. இவ்வூரில் மாத்தூர், இரணிக்கோவில், பிள்ளையார்பட்டி ஆகிய மூன்று கோவில்களைச் சேர்ந்த புள்ளிகள் வாழ்ந்து வருகின்றனர்.

இங்கு மீனாட்சி சொக்கலிங்கர் திருக்கோவில் நகரச்சிவன் கோவில் ஆகும். மேலும் நகரத்தார் பொதுவில் நிருவகிக்கப்பட்டு வரும் சிதம்பர விநாயகர்

கோவில், காளியம்மன் கோவில், முனீசுவரர் கோவில், அனுமார் கோவில் ஆகிய கோவில்களும் இவ்வூரில் உள்ளன. சு.ப.இராம.சித. குடும்பத்தாரால் நிருவகிக்கப் படும் பொன்னம்பல விநாயகர் கோவிலும், பி.ராம. குடும்பத்தாரால் நிருவகிக்கப்படும் கல்வி விநாயகர் கோவிலும் இவ்வூரில் உள்ளன. இவ்வூரில் சிவன் கோவில் ஊருணி குடிநீர் ஊருணியாகும். சிதம்பர விநாயகர் கோயில் ஊருணி, முனீசுவரர் கோவில் ஊருணி ஆகிய வேறு இரு ஊருணிகளும் உள்ளன.

இவ்வூர் ந.சொ. அரு. குடும்பத்தாரால் 1927–ல் தொடங்கப்பெற்ற சொக்கலிங்க வித்யாசாலை எனும் தொடக்கப்பள்ளி இப்போதும் அக்குடும்பத்தின் வழி முறையினரால் நடத்தப் பெறுகிறது. இவ்வூர் மாத்தூர் உறையூர்ப் பங்காளிகள் ஆலத்துப்பட்டிப் படைப்பை 3 ஆண்டுகட்கு ஒருமுறை படைத்து வருகின்றனர். இவ்வூர், கொத்தமங்கலம், பள்ளத்தூர் ஆகிய ஊர்களைச் சேர்ந்த மாத்தூர் கருப்பூர் பங்காளிகள் ஆண்டுதோறும் இவ்வூரில் வடுவியாத்தாள் – கருப்பையா படைப்பை படைத்து வருகின்றனர். இவ்வூரைச் சேர்ந்த சொ.மு. குடும்பத்தார் 160 ஆண்டுகட்கு முன் கானாடுகாத்தானில் சிவலோக நாதசாமி ஒப்பிலாள் திருக்கோவிலைக் கட்டி இன்றும் அதனை நிருவகித்து வருகின்றனர்.

அருசோ தலைமையில் 9.3.2014ல் இங்கு திருவாசக முற்றோதல் நிகழ்ந்தது, வரவேற்புரையும் நன்றியுரையும்– ஏ.ஆர். காளைராஜா, கலந்து கொண்ட அன்பர்கள் – 83 பேர்.



## 83. தேனிபட்டி - 23.03.2014

### அகத்தீஸ்வரர் அகிலாண்டேஸ்வரி கோவில் துதி

(பொற்கிழிக் கவிஞர் அருசோ)

சிற்றூராம் தேனிபட்டி, தர்மத் தாலே
சிறந்துள்ள பேரூராம்; நகரத் தார்கள்
கற்றோர்கள், சிவன்கோவில் கட்டி உள்ளார்.
கண்கண்ட அகஸ்தீசர் அகிலாண் டேஸ்வரி!
பற்றுள்ளோர், பற்றில்லார் அனைவ ருக்கும்
பழந்தமிழைப் போதித்த அகத்தி யர்க்கு
முற்றாக அருள்செய்த அகத்தீ சன்தாள்
முழங்கி திரு வாசகத்தால் போற்று வோமே!

## தேனிபட்டி - 23.03.2014

(தெ. சொக்கலிங்கம்)

கிழப்பத்தூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 27 கி.மீ. தொலைவு. இவ்வூருக்குக் கழனிவாசல் என்ற மற்றொரு பெயரும் உண்டு. இளையாத்தங்குடி, வைரவன் கோவில், சூரக்குடி, இரணிக்கோவில் ஆகிய 4 கோவில்களைச் சேர்ந்த 101 புள்ளிகள் வாழ்ந்து வருகின்றனர். அகத்திஸ்வரர் அகிலாண்டேஸ்வரி கோவில் நகரச் சிவன்கோவில் ஆகும். வைரவன் கோவில் செல்லப்ப செட்டியார் வகையறாவால் செல்வ விநாயகர் கோவிலும், இரணிக்கோவில் க.மு. வகையாரால் சிதம்பர விநாயகர் கோவிலும் கட்டப்பெற்றுள்ளன. இவ்வூரில் மூன்று ஊருணிகள் உள்ளன. இவ்வூரில் ஐந்து படைப்பு வீடுகள் உள்ளன. வைரவன் கோவில் செல்லஞ்செட்டி வகையினர் ஆண்டுதோறும் தைமாதத்தில் பொதுப் படைப்புப் படைக்கிறார்கள். வைரவன் கோவில்

முருகப்ப செட்டியார் வகையினரும் சூரக்குடிப் பங்காளிகளும் ஆண்டுதோறும் படைக்கிறார்கள். தேனிபட்டி, தேவகோட்டை நகரத்தார்கள் கலந்து கொள்ளும் இரணிக்கோவில் படைப்பு வீடு, தேனிபட்டி, புதுவயல், கோ.அளகாபுரி நகரத்தார்கள் கலந்து கொள்ளும் இரணிக்கோவில் படைப்பு வீடு ஆகிய வற்றிலும் ஆண்டுதோறும் பொதுப்படைப்பு நடை பெறும். இரணிக்கோவில் சி.செ. வகையினர் திருக்கழுக்குன்றத்தில் முன்பு பாடசாலை நடத்தி வந்தனர். இவ்வூர் இரணிக்கோவில் காடப்ப செட்டியார் வகை அண்ணாமலை சுவாமிகள் கோவிலூரில் ஆறாவது மடாதிபதியாக இருந்து அங்கு சமாதி அடைந் துள்ளார்கள். இவர்கள் காலத்தில் தான் சைவ சித்தாந்த ஆகம முறை நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டது.

இங்கு அருசோ தலைமையில் 23.03.14ல் திருவாசகம் முற்றோதல் நிகழ்ந்தது.



## 84. கானாடு காத்தான் - 11.04.2014

### கானாடு காத்தான் ஸ்ரீ சிதம்பர விநாயகர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ)

கானாடு காத்தான் காக்கும்
கற்பகமே! செட்டி நாட்டின்
கோனாகிக் குலங்கள் காக்கும்
குன்றமே! தில்லை போற்றும்
வானவா! நகரத் தாரின்
வம்சங்கள் காக்கும் தேவா!
கானமே கேட்கும் காத்தான்
கணபதி திருத்தாள் காப்பு!

## கானாடு காத்தான் - 11.04.14

(தெ. சொக்கலிங்கம்)

பதினாறூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 16 கி.மீ. தொலைவு. இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன் கோவில், நேமங்கோவில், இரணிக்கோவில் ஆகிய 5 கோவில்களைச் சேர்ந்த 530 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர். அருள்மிகு சிதம்பர விநாயகர் கோவில் நகரத்தார் பொதுக்கோவிலாகும். விநாயகர் சதுர்த்தி விழாவும் திருக்கார்த்திகையும் சிறப்பாகக் கொண்டாடப்பெறும். இவ்ஊர் அருகில் கானாடுகாத்தான், நேமத்தான்பட்டி, கொ.லெட்சுமிபுரம் ஊரினருக்குப் பொதுவான பெரிய கோவில் எனப்படும் சிவன்கோவில் உள்ளது.

**இவ்வூர் நகரத்தார் இவ்வூரிலும் பிற ஊர்களிலும் செய்த திருப்பணிகள்:**

1. மு. அண்ணாமலை செட்டியார் குடும்பத்தாரின் மீனாட்சி சொக்கலிங்கேசுவரர் கோயில், செட்டிநாடு.

2. சுந்தர மூர்த்திப் பிள்ளையார் கோவில்.
3. வைரவன் செட்டியார் ஊருணிப்பிள்ளையார் கோவில்.
4. எட்டு ஊருணிகள்.
5. எம்.சி.டி.எம். தொடக்கப்பள்ளி, கானாடுகாத்தான.
6. எம்.சி.டி.எம். உயர்நிலைப்பள்ளி, கானாடுகாத்தான்.
7. சி.வி.சிடி. அறநிலையின் மீனாட்சி ஆச்சி ஆங்கிலப்பள்ளி.
8. எம்.சி.டி.எம். உயர்நிலைப்பள்ளி, சென்னை.
9. ராமசாமி செட்டியார் உயர்நிலைப்பள்ளி, சிதம்பரம் (எம்.சிடி.எம்.)
10. கொழும்பு சுப. குடும்பத்தார் நாட்டரசன் கோட்டையில் நடத்தும் கானாடுகாத்தான் முத்தையா சுப்பையா செட்டியார் பெண்கள் மேல்நிலைப்பள்ளி.
11. இராஜா குடும்பத்தினரின் அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.
12. இராஜா குடும்பத்தினரின் முத்தையா பாலிடெக்னிக், சிதம்பரம்.
13. இராஜா குடும்பத்தினரின் சென்னை அடையாற்றில் சில பள்ளிகள்.
14. இராஜா குடும்பத்தினரின் அண்ணாமலை பாலிடெக்னிக், செட்டிநாடு.
15. சா.அ.மருத்துவமனை, கானாடுகாத்தான் (அரசு மருத்துவமனை.)
16. இராஜா குடும்பத்தினரின் லேடி பெண்ட்லண்ட் பெண்கள், குழந்தைகள் மருத்துவமனை, கானாடுகாத்தான்.

17. ஸ்பிக் அறக்கட்டளையின் நேமத்தான்பட்டி சூரக்குடி மருத்துவமனை.

18. வெங்கடேசப் பெருமாள் கோவில், கானாடுகாத்தான்.

19. மக்கான் அழகப்ப செட்டியார் குடும்பத்தார் கட்டியுள்ள சரஸ்வதி கோவில், குன்றக்குடி.

20. தூ.கரு. குடும்பத்தாரின் வைத்தீஸ்வரன் கோவில் சத்திரம்.

21. கா.அ.மு. குடும்பத்தார் குன்றக்குடியில் ஒரு மடம் நிறுவியுள்ளனர்.

22. இரணிக்கோவில் நகரத்தாரின் அரண்மனைப்பட்டி பிள்ளையார் கோவில்.

இவ்வூரினரான தெ.ச. சிதம்பரம் செட்டியார் I.N.A.யிலும், பாரதியாரின் புரவலரான வை.சு. சண்முகம் செட்டியார் சுயமரியாதை இயக்கத்திலும் பணி யாற்றினார்.

இவ்வூரைச் சேர்ந்த வெ.வீர. குடும்பத்தார் திருப்பராய்த் துறையிலும், சா.ராம. சித. குடும்பத்தார் திருவானைக் கோவிலிலும், தூ.கரு. குடும்பத்தார் திருப்புன்கூரிலும், க.வெ.ராம.குடும்பத்தார் பெரிய கோவிலிலும், கா.பெ.அ.பெ. குடும்பத்தார் திருவேட் களத்திலும், ஏ.சி. முத்தையா திருக்கடவூர் அபிராமி கோவிலிலும் திருப்பணி செய்துள்ளனர். ஸ்பிக் நிறுவனம் திருக்கடவூரில் பெரிய மண்டபம் அமைத்துள்ளது. நியூயார்க்கில் ஐ.நா.வில் பணியாற்றிய அழகப்பா அழகப்பன் அமெரிக்காவில் திருக்கோவில்கள் அமைக்கும் பணியில் முன் நின்றுள்ளார். தமிழகத்தின் கல்வி, தொழில் வளர்ச்சியில் இவ்வூரினர் மிக முக்கியப்

பங்கு வகிக்கின்றனர். ராஜா சர் வீடு, ஐலண்ட் வீடு, சி.வி.சி.டி. வீடு, எம்.சி.டி.எம் வீடு ஆகியவை கலைநயம்மிக்க அழகிய வீடுகளாகும். இவ்வூர் சுற்றுலா மையமாக உள்ளது. செட்டி நாடு மான்சன், விசாலம் ஹோட்டல் ஆகிய இரண்டும் ஸ்டார் ஹோட்டல்கள் ஆகும். தொடர்ந்து வெளிநாட்டினர் அதிகம் வருகின்றனர். இது தவிர செட்டிநாடு நாராயணா இன் என்ற ஹோட்டலும் உள்ளது. இவ்வூருக்கு மகாத்மா காந்தி, பாரதியார், பாரதிதாசன் ஆகியோர் வந்துள்ளனர். இவ்வூரில் சில செல்வர்கள் இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் தொழிற்சாலைகள் நிறுவி நிறையப் பேருக்கு வேலைவாய்ப்புக் கொடுத்துள்ளனர். இவ்வூரின் மாத்தூர், கருப்பூர் நகரத்தார் பாப்பாத்தாள் படைப்பை யும், இரணிக்கோவில் நகரத்தார்கள் ஆடி மாதம் நாச்சாத்தாள் படைப்பையும், மாத்தூர் அரும்பாக்கூர் நகரத்தார்கள் வெ.ப.படைப்பையும் படைத்து வருகின்றனர். இளையாத்தங்குடி பட்டினசாமி நகரத்தார் ஆடி மாதத்தில் அளகாபுரியிலும், நேமங்கோவில் நகரத்தார் மாசி மாதத்தில் பள்ளத்தூரிலும், மாத்தூர் அரும்பாக்கூர் நகரத்தார் க.பெ. வீட்டார் ஆடி மாதத்தில் உ.சிறுவயலிலும், பிற ஊர் நகரத்தார்களோடு சேர்ந்து பொதுப்படைப்பு படைத்து வருகின்றனர். மாத்தூர்க் கோவிலைச் சேர்ந்த அ.பழ. குடும்பத்தார், க.வெ. குடும்பத்தார் 100 ஆண்டுகளுக்கு மேல் புரட்டாசி மாதத்தில் இராமாயணம் படித்து வருகின்றனர்.

இங்கு 11.4.14ல் அருசோ தலைமையில் நிகழ்ந்த திருவாசக முற்றோதலில், வரவேற்புரை - தேனப்ப செட்டியார், நன்றியுரை - சந்திரமௌலி செட்டியார், கலந்து கொண்டவர்கள் - 91 பேர்.

## 85. நேமத்தான்பட்டி - 27.04.2014

### நேமத்தான்பட்டி நகர ஸ்ரீ கற்பக விநாயகர் ஸ்ரீபால தண்டாயுதபாணி துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ)

(இந்திரிய வயமயங்கி மெட்டு)

நேமத்தான் பட்டியிலே
நிலைபெற்ற நகரத்தார்
சாமத்தும் தேவர்கணம்
சாஸ்திரமாய்த் தொழுகின்ற
நாமத்தால் கற்பகமாம்
நாயகனும் முருகனுமாய்
சேமத்தைத் தந்தருளும்
க்ஷேத்திரமே தொழுவோமே!

### ஸ்ரீசெல்வசித்தி விநாயகர் கோவிலில் எழுந்தருளி உள்ள ஸ்ரீ செல்வ சித்தி விநாயகர் துதி

பாரே புகழும் நேமத்தான்
பட்டி நகரைக் காக்கின்ற
சீரும் செல்வம் தருகின்ற
சித்தி விநாயகர் பதம் போற்றி!
ஊரும் உலகும் செழித்தோங்க
உயர்வாய் மக்கள் தழைத்தோங்க
வேராய் இருந்து காப்பாயே
விநாயக! காத்து வளம் தருக!

*- அருசோ*

## நேமத்தான் பட்டி - 27.04.2014

(தெ.சொக்கலிங்கம்)

பதினாறூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 18 கி.மீ. தொலைவு. இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன்

கோவில், இலுப்பக்குடி, இரணிக்கோவில் ஆகிய ஐந்து கோவில்களைச் சேர்ந்த 364 புள்ளிகள் வாழ்ந்து வருகின்றனர். கானாடுகாத்தான் அருகில் நேமத்தான் பட்டி, கானாடுகாத்தான், கொ.லெட்சுமிபுரம் ஊர்களுக்குப் பொதுவான பெரிய கோவில் எனப்படும் சிவன்கோவில் உள்ளது. பிள்ளையார் கோவில் 1970–ல் நகரத்தார்களால் திருப்பணி செய்யப்பட்டு நகரப் பொதுக் கோவிலாக இருந்து வருகிறது.

**இவ்வூர் நகரத்தார் செய்த திருப்பணி மற்றம் அறப்பணிகள்:**

1. செ.பெ. ராமசாமி செட்டியார் கட்டிய கருத்தான் செட்டியார் பிள்ளையார் கோவில்.
2. வைரவன் கோவில் சி.மெ. நகரத்தார் பார்வையில் உள்ள புது ஊருணிப் பிள்ளையார் கோவில்.
3. சி.வீ.நா.பழ. குடும்பத்தார் கட்டிய விசாலாட்சி ஊருணிப் பிள்ளையார் கோவில்.
4. புது ஊருணி.
5. விசாலாட்சி ஊருணி.
6. சி.வீ.நா.பழ. வகையினரால் வேதாரண்யத்தில் தண்ணீர்ப் பந்தல் தர்மம்.
7. மு.பெ. வகையாரின் அவளிவள் நல்லூர் கோவில் திருப்பணி.
8. மு.பெ. வகையாரின் ஆவுடையார் கோவில் சத்திரம்.
9. தெ.மு.பழ. குடும்பத்தாரின் விராலிமலை திருப்பணி.
10. தெ.மு.பழ. குடும்பத்தாரின் அழகப்புத்தூர் எனப்படும் அரிசில்கரைப்புத்தூரில் படிக்காசு நாதர் கோவில் திருப்பணி.

**இவ்வூர் நகரத்தார் படைக்கும் படைப்புக்கள்:**

1. வைரவன் கோவில் சி.மெ. நகரத்தார்களால் ஆண்டு தோறும் ஆடி மாதம் படைக்கும் அடைக்காத்தாள் படைப்பு.
2. வைரவன் கோவில் மு.சி. வகையினரால் ஆண்டு தோறும் ஆடி மாதம் அருகில் உள்ள நெய்வாசல் கிராமத்தில் குலதெய்வமாகிய ஸ்ரீதிட்டாணிக் கருப்பரைக் கும்பிட்டு வந்து நேமத்தான்பட்டியில் படைக்கும் பெரியசாமிப் படைப்பு.
3. பதினெட்டாம்படிக் கருப்பர் படைப்பு ஆண்டுதோறும் ஆடிமாதம் இளையாத்தங்குடி கழனிவாசல்குடி நகரத்தாரால் படைக்கப்படுகிறது. அறுபத்து மூவர் குருபூசை மடத்தில் வைரவன் கோவில் நகரத்தாரால் நால்வர் குருபூசை சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

கருத்தான் செட்டியார் வீட்டில் க.பெ.சி.இராம. குடும்பத்தாரால் ஆண்டுதோறும் ஆவணி மாதம் விநாயக புராணமும், புரட்டாசி மாதம் இராமாயணமும், ஐப்பசி மாதம் கந்தபுராணமும் படிக்கப்படுகின்றன. சி.வீ.நா.பழநியப்ப செட்டியாரால் 20-09-1926-ல் தோற்றுவிக்கப்பெற்ற திருநாவுக்கரசு வித்யாசாலை அவரது பேரன்களால் இன்றும் சிறப்பாக நடத்தப்பட்டு வருகிறது. திருநாவுக்கரசர் நூல் நிலையம், மருணீக்கியார் இசையரங்கம் என இவ்வுயர்நிலைப்பள்ளி எங்கும் அப்பர் பெயரே இடம் பெற்றுள்ளது. இங்கு சைவமும் தமிழும் சிறப்பாகக் கற்பிக்கப்படுகின்றன. இவ்வூர் சோம. வீரப்பா I.N.A.ல் பணியாற்றியுள்ளார்.

ப. நீலகண்டனை ஆசிரியராகக் கொண்டு நேமத்தான் பட்டி இராம. பழநியப்ப செட்டியாரால் ‘இந்திரா’

என்னும் இதழ் செட்டி நாட்டிலிருந்து வெளிவந்தது. இவ்வூர் முத்து நாராயணனை ஆசிரியராகக் கொண்டு 'பாப்பாமலர்' (1942) என்னும் சிறுவர் மாத இதழ் இராயவரத்திலிருந்து வெளிவந்தது. இங்கிருந்து 'முத்தம்' என்னும் இதழ் பழ. பழநியப்பனை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்தது. இவ்வூரில் உள்ள மூன்று வீதிகளும் அப்பர், சுந்தரர், மணிவாசகர் ஆகியோர் பெயர்களைக் கொண்டிருப்பதும், இவ்வூர்ப் பள்ளி திருநாவுக்கரசு பள்ளி எனப் பெயர் பெற்றிருப்பதும் இவ்வூர் நகரத்தாரின் ஆழ்ந்த சைவப் பற்றினை எடுத்துக்காட்டுகின்றது. நேமத்தான்பட்டி நகரத்தார்கள் எல்லோரும் சேர்ந்து கடந்த 55 ஆண்டுகளாக பங்குனி உத்திரத் திருவிழாவில் 3 ஆம் திருநாளன்று நேமத்தான்பட்டியிலிருந்து குன்றக்குடிக்கு பால்குடம், பன்னீர், சந்தனம், விபூதிக்குடங்களுடன் காவடி எடுத்து, சிறந்த முறையில் கொண்டாடுகிறார்கள். ஆரம்ப காலத்தில் இருந்தே கண்டனூர் அருளாடியார் வந்து துவங்கி வைத்து ஆசீர்வதிக்கிறார்கள். நேமத்தான்பட்டி இராம. சிதம்பரம் செட்டியார் நடத்திய 'திருமகள்' என்னும் பத்திரிகையில் கவியரசர் கண்ணதாசன் பணிபுரிந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

அருசோ அவர்கள் தலைமையில் இவ்வூர் லெ.சுப்பையா செட்டியார் ஆறுபடை வீடுகட்கும் பாதயாத்திரை சென்று வந்தார். அருசோ குழுவினர் இவ்வூர் வழியாக எந்த ஊருக்குப். பாதயாத்திரை சென்றாலும் இவ்வூரினர் வரவேற்று உபசரித்தனர். இங்கு 27.4.14ல் அருசோ தலைமையில் திருவாசகம் முற்றோதல் சிறப்பாக நிகழ்ந்தது.



## 86. பள்ளத்தூர் - 04.05.2014

### பள்ளத்தூர் ஸ்ரீமீனாட்சி சுந்தரேசர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ)

உள்ளத் தாலே தொண்டாற்றி
உயர்வாய் வாழும் நகரத்தார்
பள்ளத் தூரின் சிவன் கோவில்
பலமாய் அமைந்த கற்கோவில்
வெள்ளம் போலச் செல்வங்கள்
வெற்றி கொடுக்கும் மீனாட்சி
அள்ளிக் கொடுக்கும் அருள் ஈசா!
அடிகள் தொழுதோம் காப்பாயே.

## பள்ளத்தூர் - 04.05.2014

(தெ.சொக்கலிங்கம்)

பதினாறூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 15 கி.மீ. தொலைவு. இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன் கோவில், நேமங்கோவில், இலுப்பக்குடி, சூரக்குடி, இரணிக்கோவில் ஆகிய ஏழு கோவில்களைச் சேர்ந்த 1270 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர். இவ்வூரின் ஒவ்வொரு தெருவும் வடக்கே மேடாகவும் தெற்கே பள்ளமாகவும் அமைந்திருக்கிறது. பள்ளமான பகுதியில் இவ்வூர் அமைந்திருப்பதால் இதற்குப் பள்ளத்தூர் எனப் பெயர் வந்ததாகக் கூறுவர்.

இங்கு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் என்ற நகரச் சிவன் கோவிலும், நகரத்தார் கட்டி நிருவகித்து வரும் சௌந்தரராசப் பெருமாள் கோவிலும் அமைந் துள்ளன. 1913-ல் கட்டிய நகரச் சிவன் கோவிலுக்கு 2013-ம் ஆண்டு, நூற்றாண்டு விழாக் கொண்டாடப் பட்டது. தனிப்பட்ட நகரத்தார் குடும்பங்களால் அமைக்கப்பெற்ற கைலாசவிநாயகர் கோவில், சத்திரத்துப் பிள்ளையார் கோவில், கந்தன் குளத்து விநாயகர்

கோவில், கிழவன் செட்டி ஊருணிப் பிள்ளையார் கோவில் ஆகியவையும் இவ்வூரில் அமைந்துள்ளன. நகரச் சிவன் கோவில் ஊருணி குடிதண்ணீர் ஊருணியாக அமைந்திருக்க வேறு 4 ஊருணிகளும் இவ்வூரில் நகரத்தார்களால் அமைக்கப்பட்டன.

சொ.மா.கரு. அண.கரு. குடும்பத்தாரால் கடந்த 100 ஆண்டுகளுக்கு மேலாக நடத்தப்பெற்று வரும் அழகம்மை ஆச்சி தொடக்கப்பள்ளி, சொ.மு. குடும்பத் தாரால் நடத்தப்பெறும் சீதை ஆச்சி நடுநிலைப்பள்ளி, சீதை ஆச்சி பெண்கள் உயர்நிலைப்பள்ளி, உ.அ.பெரி.மு. அருணாசலம் செட்டியாரால் 1925–ல் தொடங்கப்பெற்று அவரது வழிமுறையினரால் நிருவகிக்கப்பெற்று வரும் அருணாசலம் செட்டியார் மேல்நிலைப்பள்ளி, அன்னாரால் 1962ல் தொடங்கப்பெற்று அவரது வழி முறையினரால் நிருவகிக்கப்பெற்று வரும் சீதாலெட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரி ஆகியவை இவ்வூரின் கல்வி நிறுவனங்களாகும்.

சிவகங்கை மாவட்டத்தில் உள்ள நகரத்தார் மகளிர் கல்லூரிகளில் சீதாலெட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரிதான் முதன் முதல் துவக்கப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. ஆர்.எம்.எம்.பெண்கள் மேல்நிலைப் பள்ளியும் நடைபெற்று வருகிறது.

அ.மு.மு. குடும்பத்தினரால் கட்டி நிருவகிக்கப்பட்டு வரும் அனைத்து வசதிகளும் உள்ள அ.மு.மு. மருத்துவ மனை இவ்வூரில் இயங்கி வருகிறது. இரணிக்கோவிலைச் சேர்ந்த முத்து வீரப்ப செட்டியார், நல்லழகப்ப செட்டியார் குடும்பத்தினரால் கட்டப்பட்ட அழ. இராம. சத்திரம் 180 ஆண்டுகளாக நாள்தோறும் அன்னதானம் செய்து வருகிறது.

இவ்வூர் வைரவன் கோவில் தெய்வநாயகர் வகுப்புப் பங்காளிகள் நாச்சாத்தாள் படைப்பையும், நேமங்கோவில்

பங்காளிகள் ஒருபொதுப் படைப்பையும் படைத்து வருகின்றனர். இவ்வூர் மற்றும் ஏழு ஊர்களைச் சேர்ந்த இரணிக்கோவில் பங்காளிகள் 3 ஆண்டுகட்கு ஒருமுறை இவ்வூரில் கூடி அழகஞ்செட்டி படைப்பைப் படைத்து வருகின்றனர். ப.ராம.ப. குடும்பத்தார் ஒரு பூசையையும், வைரவன் கோவில் பங்காளிகள் ஒரு பூசையையும், இரணிக்கோவில் நல்லழகன் செட்டி வகையினர் ஒரு பூசையையும் ஆண்டுதோறும் தத்தமக்குச் சொந்தமான பூசைமடம் அல்லது சத்திரத்தில் நடத்தி அன்னதானம் செய்து வருகின்றனர்.

இவ்வூர் சொ.மு.அ.மெ. அருணாசலம் செட்டியார் திருவிற்குடிச் சிவன்கோவிலில் திருப்பணி செய்துள்ளார். திருவாரூர் சென்றபொழுது நாங்கள் அனைவரும் திருவிற்குடி சென்று தரிசித்து வந்தோம்.

பள்ளத்தூரில் 90 ஆண்டு முன்பு வக்கீல் ராமநாதன் செட்டியார் அவர்களால் சைவ சித்தாந்த மாநாடு நடத்தப்பெற்றது. அவர் சென்னை சைவ சித்தாந்தக் கழகத் தலைவராகவும், மலேசியா சைவ சித்தாந்த கழகத்தோற்றுநராகவும் உள்ளார்.

தியாகி சிதம்பரம் செட்டியார் பள்ளத்தூர், I.N.A. படையில் பணியாற்றியவர். கம்பன் அடிப்பொடி சா.கணேசனின் சீடர். அழகஞ் செட்டியார் படைப்பு வீட்டில் புலால் மறுத்தவர். மாமிசப் படைப்பை சைவப் படைப்பாக மாற்றியவர்.

திரு. எம்.வி. சுப்பையா அவர்கள் ஏ.எம்.எம். முருகப்பா குரூப் நிறுவனத்தின் தொழில் நிபுணர். பத்மபூஷன் விருது பெற்றவர்.

பள்ளத்தூர் சிவன்கோவிலில் 4.5.2014ல் அருசோ தலைமையில் திருவாசகம் முற்றோதல் நிகழ்ந்தது.



## 87. கண்டனூர் - 26.05.14

### ஸ்ரீமீனாட்சி சுந்தரேசுவரர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அருசோ. பாடியது)

கண்ட னூரில் மீனாட்சி!
காக்கும் சுந்த ரேஸ்வரரே!
அண்டம் எல்லாம் உன் ஆட்சி!
அகிலம் எல்லாம் உன் மாட்சி!
கண்டம் ஏதும் வாராமல்
காப்பாய் நாட்டை நகரத்தை!
தொண்டு செய்யும் நகரத்தார்
தொழிலும் வளமும் காப்பாயே!

## கண்டனூர் - 26.05.2014

(தெ. சொக்கலிங்கம்)

பதினாறூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 11 கி.மீ. தொலைவு. இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன் கோவில், நேமங்கோயில், இலுப்பக்குடி, இரணிக்கோவில், சூரக்குடி, பிள்ளையார்பட்டி ஆகிய 8 கோவில்களைச் சேர்ந்த 910 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர்.

இங்கு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் என்ற நகரச் சிவன் கோவில் உள்ளது. இக்கோவில் 1892ஆம் ஆண்டு கட்டப்பட்டது. நாட்டாருக்கும் நகரத்தாருக்கும் பொதுவான செல்லாயி அம்மன் கோவில், பிள்ளையார் பட்டி நகரத்தாருக்குப் பொதுவான கற்பக விநாயகர் கோவில், சி.நெ.வீர. குடும்பத்தாரால் கட்டி நிருவகிக்கப் படும் சீனிவாசப் பெருமாள் கோவில், மெ.ப.வெ. அழகப்ப செட்டியார், வி.பி. தியாகராசன் செட்டியார், வெ.சித.சுப.லெ. சுப்பிரமணியன் செட்டியார், ப.கு. அரு. லெட்சுமணன் செட்டியார் ஆகியோர் சேர்ந்து கட்டிய

21

சண்முகநாதன் கோவில், பெத்தபெருமாள் செட்டியார் சமீபத்தில் கட்டிய சிவா விஷ்ணு ஆலயம் ஆகியவை இவ்வூரில் உள்ளன. இவ்வூரில் மூன்று ஊருணிகள் உள்ளன.

இவ்வூர் வள்ளல் வீ.தெ.வீரப்ப செட்டியாரால் 1942–இல் தொடங்கப்பெற்ற சிட்டாள் ஆச்சி நினைவு தொடக்கப் பள்ளியும், சிட்டாள் ஆச்சி நினைவு உயர்நிலைப் பள்ளியும் இப்போது அவர் வழிமுறையின ரால் நிருவகிக்கப்பட்டு வருகின்றன. இப்பள்ளியில் அருசோ படித்தது குறிப்பிடத்தக்கது.

இவ்வூரில் லெ.சித.லெ.பழ. குடும்பத்தினர் 'காந்திமதி மருத்துவமனை' என்ற பெயரில் ஒரு மருத்துவமனை நடத்தி வருகின்றனர். இவ்வூரில் உள்ள அரசினர் மருத்துவ மனைக்கு இடம், கட்டடம் முதலியவற்றை நன்கொடையாக வழங்கியவர்கள் சித.அரு., சித.பழ. இராம., அ.சி.நா.சி.சித. ஆகியோராவார்.

நகரச்சிவன் கோவிலுக்கு அருகில் இவ்வூர் பிள்ளையார்பட்டி நகரத்தார்களுக்குரிய மடம் ஒன்று உள்ளது. இங்கிருந்துதான் வெளியூர் மாப்பிள்ளைகள் அழைக்கப்படுவது இவ்வூர் வழக்கம். இரணிக்கோவில் நகரத்தார்களுக்குச் சொந்தமான மடம் அருணாசலய்யா மடம். இம்மடத்தில் ஆண்டுதோறும் குருபூசை நடத்தி அன்னதானம் வழங்குகின்றனர். லெ.சுப. வகையினர் முத்து ராமையா குருபூசையையும், கு.ப.சுப.சு.சுப. குடும்பத்தார் மாசி மாதத்தில் மகேசுவர பூசையையும், சி.ராம. குடும்பத்தார் ஆடி மாதத்தில் மகேசுவர பூசையையும் நடத்துகின்றனர்.

கண்டனூர் தென்பகுதியில் அமைந்திருக்கும் வையைக் கரையில் ஆண்டுதோறும் வைகாசி மாதம் பெரிய அளவில் கருப்பர் பூசை நடத்தப்படுகிறது.

கண்டனூர் நாட்டாரும் பல ஊர் நகரத்தாரும் சேர்ந்து இப்பூசையை நடத்தி வருகின்றனர்.

ஆத்தங்குடி, கண்டனூர், கோட்டையூர் ஆகிய ஊர்களைச் சேர்ந்த பிள்ளையார்பட்டிப் பங்காளிகள் இவ்வூரில் ஆண்டுதோறும் ஆடிமாதம் அக்கினியாத்தாள் படைப்பையும் படைத்து வருகின்றனர். வைரவன் கோவில் தெய்வ நாயகர் வகுப்பு வடகாட்டுப் பட்டியார் வகையினர் ஆண்டுதோறும் கருப்பர் படைப்பையும், இலுப்பக் குடியினர் ஆண்டுதோறும் முத்தழகி ஆயா படைப்பையும், நேமங்கோவிலார் இரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை ஒரு பொதுப் படைப்பையும் படைத்து வருகின்றனர்.

**இவ்வூர் நகரத்தார்கள் வெளியூர்களில் செய்த திருப்பணி மற்றும் அறப்பணிகள்:**

1. பெ.அழ. குடும்பத்தார் திருத்துறைப்பூண்டி திருத்தெங்கூர் ஆகிய ஊர்களில் சிவன்கோவில் திருப்பணிகள் செய்துள்ளனர்.
2. வயி.ராம. குடும்பத்தார் காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர்கோயில் மற்றும் குமரகோட்டக் கோவில் திருப்பணிகள் செய்ததோடு காஞ்சிபுரத்தில் வேதபாட சாலை ஒன்றையும் நடத்தினர்.
3. மு.நா. குடும்பத்தார் குன்றக்குடியில் ஒரு பிள்ளையார் கோவில் கட்டியுள்ளனர். வேத பாட சாலை ஒன்றையும் நடத்தினர்.
4. தெ.அரு.சித. அருணாசலம் செட்டியார், அ.சி.நாசி. நாச்சியப்ப செட்டியார், சிதம்பரம் செட்டியார் ஆகியோர் இணைந்து திருக்கண்ணார் கோவில், சிவன்கோவில் திருப்பணிகளைச் செய்துள்ளனர்.

5. சி.ராம.சொ. குடும்பத்தார் இராமேசுவரத்தில் சதாவிருத்திச் சத்திரத்தை நடத்தி வருகின்றனர்.

6. லெ.சித. குடும்பத்தார் திருநெல்வேலியில் ஒரு சத்திரத்தை நடத்தி வருகின்றனர்.

7. அ.நா. குடும்பத்தார் மயிலாடுதுறையில் 100 ஆண்டுகட்கு மேலாக அ.நா. அன்ன சத்திரத்தையும், அ.சி.நா. குடும்பத்தார் மயிலாடுதுறையில் அ.சி. வேத பாடசாலையையும் நடத்தி வருகின்றனர்.

8. பெ.அள.வகையினர் புதுவயலில் ஒரு பிள்ளையார் கோவில் கட்டியுள்ளனர்.

9. கு.ம. வகையினர் சாக்கோட்டையில் ஒரு சத்திரத்தை நடத்தி வருகின்றனர்.

நகரத்தார் நானூறு ஆண்டுகளாக நடத்தி வரும் பழநி நடைப்பயணத்தில் வேல் தாங்கிச் செல்லும் அருளாடியார் கண்டனூரைச் சேர்ந்தவரே. முதன் முதலில் இப்பணியைச் செய்தவர் நகரத்தார் அறப்பட்டயத்தில் இடம்பெறும் குட்டை ஐயா ஆவார். அவர் வழிமரபில் ஒன்பதாவது தலைமுறையினரான பழநியப்ப செட்டியார் இப்போது இப்பணியைச் செய்து வருகிறார்.

ஒன்பது நகரக் கோவில்களுள் ஏழு நகரக் கோவில் அறங்காவலர் குழுவில் இடம்பெறும் பரம்பரை உறுப்பினர்கள் கண்டனூரில் உள்ளனர் என்பது இவ்வூருக்குள்ள சிறப்பு.

நா.அரு.கா. அருணாசலம் செட்டியார் குடும்பத்தார் காவிரிப்பூம்பட்டினம் பட்டினத்தார் திருவிழாவை 80 ஆண்டுகளாக நடத்தி வருகின்றனர்.

காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம் பழ. சுப. சண்முகம் செட்டியார் டிரஸ்டியாக 10 ஆண்டுகளுக்கு மேல் சிறப்பாகப் பணி செய்தார்கள்.

இவ்வூரில் வெள்ளிப்பட்டறை இராமநாதன் செட்டியார் இல்லத்திலும், துவாதசி மடத்திலும் அருசோ பல ஆண்டுகளாகப் புரட்டாசி மாதத்தில் இராமாயணம் தொடர் சொற்பொழிவு செய்து வருகிறார். அருசோவின் ஆயா வீடு கண்டனூர். அவரைப் படிக்க வைத்தவர் வள்ளல் வீ.தெ.வீரப்ப செட்டியார்.

இங்கு திருவாசகம் முற்றோதல் 26.05.14ல் அருசோ தலைமையில் நிகழ்ந்தது, வரவேற்புரை - கவிஞர் சொக்கு சுப்பிரமணியம், வாழ்த்துரை - கவிஞர் அரசி, நன்றியுரை - மு. அருணாசலம்.

கவிஞர் அரசி (அ) சிங்கார வடிவேலனால் கண்டனூருக்குப் புகழ் அதிகம். அரசியும் அருசோவும் கண்டனூர்ப் பள்ளியில் ஒன்றாகப் படித்தவர்கள். இருவரும் பெரும் கவிஞர்கள். தமிழுலகம் அவர்களை 'இரட்டைப் புலவர்கள்' என்று கொண்டாடியது. இருவரையும் படிக்க வைத்து ஆளாக்கியவர் வள்ளர் வீ.தெ. வீரப்பசெட்டியார்.



## 88. புதுவயல் - 07.06.14

### புதுவயல் ஸ்ரீ கைலாசு விநாயகர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ. பாடியது)

புலவோர் பாடும் புதுவயலில்
பொன்னார் கயிலை விநாயகனே!
நலமே வளமே நாற்புறமும்
நதிபோல் நீரும் செய்களுமாய்ப்
பலமாய்த் தொழில்கள் பலதோன்றப்
பண்பாய் மக்கள் வளர்ந்தோங்கத்
தலமாய்த் திகழும் கைலாயத்
தலைவா! காப்பாய் விநாயகனே!

*பல்லாண்டுகட்கு முன்பே அருசோ பாடி இக்கோவிலில் எழுதி வைக்கப்பட்டுள்ள பாடல்.*

கல்வியுடன் செல்வமெலாம் தந்து காக்கும்
கைலாச விநாயகனே! கரங்கள் கூப்பி
நில்லாத உலகத்தில் நிலைத்தி ருக்கும்
நெடுந்தமிழால் நினைப்பாடிப் பரவு கின்றோம்
இல்லாமை அறியாமை இகலை நீக்கி
இன்பமெலாம் எந்நாளும் ஈந்து காப்பாய்
வல்லானே! புதுவயலில் வாழ்கை லாச
வரதுங்க விநாயகனே! வணக்கம் காப்பு!

*- அருசோ*

## புதுவயல் - 07.06.14

(தெ.சொக்கலிங்கம்)

*பதினாறூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 12 கி.மீ. தொலைவு. இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன்*

கோவில், இலுப்பைக்குடி, சூரக்குடி, இரணிக்கோவில் ஆகிய ஆறு கோவில்களைச் சேர்ந்த 800 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர்.

கைலாச விநாயகர் கோவில் இவ்வூர் நகரத்தார் பொதுக்கோவிலாக அமைந்துள்ளது. இளையாத்தங்குடி பட்டினசாமி பெ.ப.வி. குடும்பம், வைரவன் கோவில் யெ.மு. குடும்பம் இரண்டும் சேர்ந்து அரங்கநாதப் பெருமாள் கோவிலைக் கட்டி நிருவகித்து வருகின்றனர். அ.சு. பழ.வீர. இராம. குடும்பத்தார் சுந்தரராஜப் பெருமாள்கோவிலைக் கட்டி நிருவகித்து வருகின்றனர். நித்திய கல்யாணிஉடனாய கைலாச நாதர் கோவில் காட்டுச் சிவன் கோயில் என்று அழைக்கப் பெறுவது கதி. வீர.ராம மற்றும் அரு. நிர்வகித்து வருகின்றனர்.

இவ்வூர் நகரத்தார் 24.7.1922–ல் ஸ்ரீ சரஸ்வதி சங்கம் என்ற அமைப்பைத் தொடங்கினர். அதன் சார்பாக 1933–ல் சாக்கோட்டை உமையவள் உடனாய வீரசேகரர் சிவன்கோவில் புதுவயல் நகரத்தார் மேலாண்மையில் திருக்குட நீராட்டு விழா செய்யப்பெற்றது.

ஸ்ரீசரஸ்வதி வித்யாசாலை என்னும் பெண்கள் நடுநிலைப்பள்ளி தொடங்கப் பெற்றது. இப்போது அது பெண்கள் மேல்நிலைப் பள்ளியாக நகரத்தார் நிர்வாகத்தில் இயங்கி வருகிறது. வடு.மு.இராம. குடும்பத்தினர் முத்தையா மீனாட்சி ஆங்கில வழித் தொடக்கப் பள்ளியையும் வடு.மு.இராமநாதன் தொடக்கப்பள்ளி, மேல்நிலைப் பள்ளிகளையும் தொடங்கி நிருவகித்து வருகின்றனர்.

இளையாத்தங்குடி பெருமருதூருடையார்ப் பங்காளிகள் காரைக்குடிப் பங்காளிகளோடு இணைந்து ஒரு பொதுப்படைப்பு படைத்து வருகின்றனர்.

வைரவன்கோயில் பெரிய வகுப்புப் பங்காளிகள், வைரவன்கோவில் தெய்வநாயகர் வகுப்புப் பங்காளிகள், சூரக்குடிப் பங்காளிகள் ஆகியோர் தனித்தனியே தங்கள் பொதுப் படைப்பைப் படைத்து வருகின்றனர்.

இவ்வூரில் நகரத்தார் பொதுவில் யெ.மு.சொ. மன்றம் அமைக்கப் பெற்றுள்ளது. இவ்வூர் நகரத்தாருக்கு சாக்கோட்டையில் இரண்டு மடங்கள் இருக்கின்றன.

அறுபத்து மூவர் குருபூசை மடத்தில் நால்வர் குருபூசையும், வேதாந்த மடத்தில் வைகாசி அனுஷத்தன்று புதுவயல் வீரப்ப சுவாமி குருபூசையும் நடைபெறுகின்றன.

கவிஞர் அருசோ இவ்வூரில் பிறந்து, படித்து, தன் 16ஆம் வயதில் தேவகோட்டைக்குப் பிள்ளை போனது குறிப்பிடத்தக்கது.

இங்கு திருவாசகம் முற்றோதல் அருசோ தலைமையில் 07.06.14ல் கைலாச விநாயகர் கோவிலில் நிகழ்ந்தது. வரவேற்புரை – அருசோவின் தம்பி, ஆண்டான் செட்டியார், டிரஸ்டி., தொடக்கவுரை – மீனாட்சி சுந்தரம், நன்றியுரை – திருநாவுக்கரசு செட்டியார், பங்குபெற்றோர் – 100 பேர்.



# 89. கோ.அழகாபுரி - 22.06.2014

## கோ. அழகாபுரி ஸ்ரீ அழகியநாச்சியம்மன் துதி

(பொற்கிழிக் கவிஞர் அருசோ)

அழகிய தேவி! அருள்புரி தாயே!
அழகா புரி அம்மா!
பழகிய தமிழால் பணிந்துனைப் பாடிப்
பரவு கிறோம் அம்மா!
குழந்தைகள் பெரியவர் அனைவரும் கூடிக்
கும்பிடு றோம் அம்மா!
உழவுடன் தொழிலும் வளமெலாம் உயர
உதவுக சரண் அம்மா!

*(இப்பாடல் கோவிலில் எழுதப்பட்டுள்ளது.)*

## கோ. அழகாபுரி

(தெ.சொக்கலிங்கம்)

பதினாறூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 10 கி.மீ. தொலைவு. அழகாபுரி என்ற பெயரில் செட்டிநாட்டில் மூன்று ஊர்கள் உள்ளன. அவற்றைப் பிரித்தறிய அருகே உள்ள ஊர்ப் பெயரை இணைத்து வழங்குவது மரபு. இவ்வூர் கோட்டையூருக்கு அருகில் இருப்பதால் கோட்டையூர் அழகாபுரி என்றும் கோ.அழகாபுரி என்றும் வழங்கப்படுகிறது.

இளையாத்தங்குடி, வைரவன் கோவில், இரணிக் கோவில், பிள்ளையார்பட்டி ஆகிய நான்கு கோவில் களைச் சேர்ந்த 160 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர்.

நகரத்தாருக்குப் பொதுவாக இவ்வூரில் அழகு விநாயகர் கோவில் அமைந்துள்ளது. தொடக்கத்தில் இக்கோவிலையும் இதற்கு எதிரே உள்ள ஊருணியையும்

அமைத்தவர்கள் இவ்வூர் இளையாத்தங்குடி பட்டின சாமிப் பங்காளிகள் ஆவர். பின்னர் இது நகரப் பொதுக் கோவில் ஆயிற்று. பிள்ளையார்பட்டிக் கோவிலைச் சேர்ந்த இவ்வூர் அழ.அரு. அழகப்ப செட்டியார் மீனாட்சி சுந்தரேசுவரர் கோவில் என்ற பெயரோடு கூடிய சிவன் கோவில் ஒன்றை இவ்வூரில் கட்டி 7-5-1954 அன்று குடமுழுக்குச் செய்தார். இன்றும் இக்கோயில் இவர் தம் வழிமுறையினரால் நிருவகிக்கப்பெற்று வருகிறது. இவரது பேரன் அழகப்ப செட்டியார் இக்கோவிலுக்கு அருகே ஒரு பிள்ளையார் கோயிலையும் கட்டியுள்ளார்.

சிவகங்கை அரச குடும்பத்துக்குரிய அழகிய நாச்சி யம்மன் கோவிலும் இவ்வூரில் உள்ளது. இக்கோவிலில் ஆண்டுதோறும் பங்குனி உத்தரம் முடிந்ததும் வரும் திங்களன்று காப்புக் கட்டி 10 நாள் திருவிழாவினை இவ்வூர் 'நகரத்தார்களே தங்கள் பொருட் செலவில் நடத்துகின்றனர். இக்கோவிலின் நவராத்திரி விழாவை சித.அ.சித. நாச்சியப்ப செட்டியார் குடும்பத்தினர் நடத்தி வருகின்றனர்.

சித.அ.சித. நாச்சியப்ப செட்டியாரால் 1938-ல் தொடங்கப் பெற்ற ஸ்ரீ அழகிய தேவி வித்யாசாலை இவ்வூரின் தொடக்கப் பள்ளியாகும். 1938-லேயே இப்பள்ளியில் பயிலும் மாணவர்கட்கு இக்குடும்பத்தார் மதிய உணவு அளித்து வந்தனர் என்பது குறிப்பிடத் தக்கது. அரசு சத்தணவுத் திட்டம் கொண்டு வந்து, மதிய உணவு அளிக்கத் தொடங்கிய நாள் வரை ஏறத்தாழ 40 ஆண்டுகள் இலவச மதிய உணவுடன் ஒரு தொடக்கப் பள்ளியை இக்குடும்பத்தார் நடத்தியுள்ளனர். இப்போதும் இப்பள்ளி இக்குடும்பத்தார் நிர்வாகத் திலேயே உள்ளது. சித.அ.சித. நாச்சியப்ப செட்டியார் வேறு சிலருடன் சேர்ந்து இவ்வூரில் நடராஜர் மடத்தைக் கட்டினார். இப்போது அம்மடத்தின் நிர்வாகம் இவரது வழிமுறையினரிடம் உள்ளது.

அரிமழம், கோ. அழகாபுரி, கானாடுகாத்தான் தேவகோட்டை, தேனிபட்டி, பலவான்குடி, பள்ளத்தூர் ஆகிய 7 ஊர்களைச் சேர்ந்த இளையாத்தங்குடி பட்டினசாமிப் பிரிவினர் இவ்வூரில் ஆண்டுதோறும் ஆடிமாதம் நாச்சாத்தாள் படைப்புப் படைக்கின்றனர். கோ.அழகாபுரி, காரைக்குடி, புதுவயல் ஆகிய 3 ஊர்களைச் சேர்ந்த இளையாத்தங்குடி பட்டினசாமிப் பிரிவினர் இவ்வூரில் ஆண்டுதோறும் ஆடிமாதம் கருப்பர் படைப்புப் படைக்கின்றனர்.

அமராவதிபுதூர், கோ.அழகாபுரி ஆகிய இரு ஊர்ப் பிள்ளையார்பட்டி நகரத்தார் இவ்வூரில் அக்கினியாத் தாள் படைப்புப் படைக்கின்றனர். கோ. அழகாபுரி, புதுவயல் ஆகிய இரு ஊர் வைரவன் கோவில் பெரிய வகுப்பு நகரத்தார்கள் இவ்வூரில் ஆண்டுதோறும் வைகாசி மாதம் ஆண்டாத்தாள் படைப்புப் படைக்கின்றனர்.

இவ்வூருக்கு வடக்கே ஒரு கி.மீ. தொலைவில் அமைந் திருக்கும் கல்லாங்குடியில் திருப்பாதீஸ்வரர் சிவன் கோவிலுக்கு வடகிழக்குத் திசையில் உள்ள விநாயகர் கோவிலை இவ்வூர் சித. அ.சித. குடும்பத்தின் முன்னோர் கட்டினர். அக்கோவிலின் நிர்வாகம் இப்போது இக்குடும்பத்தின் வழிமுறையினரிடம் உள்ளது. இவ்வூர் கா.இராம.ப.குடும்பத்தினர் சீர்காழியில் சம்பந்தர் மடம் கட்டியுள்ளனர். நகரத்தாருக்குப் பொதுவான மேல விநாயகர் கோவில் உள்ளது. அம்மன் கோவில் தேரும் எதிரே உள்ள குளத்திற்குப் படித்துறையும் அ.சித.நாகப்ப செட்டியார் உபயம்.

கோ.அழகாபுரி அழகிய தேவி அம்மன் கோவிலில் அருசோ தலைமையில் 22.06.14ல் திருவாசகம் முற்றோதல் நிகழ்ந்தது.



## 90. கோட்டையூர் - 13.07.2014

### ஸ்ரீமீனாட்சி சுந்தரேசர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ.)

முத்து முத்தாய் அழகங்கி
முழுதும் அணிந்தே முறுவலித்துச்
சித்தம் ஈர்க்கும் மீனாட்சி
சிவனே! சுந்த ரேசாஉன்
புத்தம் புதிய கற்கோவில்
போற்றும் கோட்டை யூரார்கள்
நித்தம் தொழுதே உயர்வுற்றார்
நிமலா! என்றும் காப்பாயே!

## கோட்டையூர் - 13.07.2014

(தெ.சொக்கலிங்கம்)

பதினாறூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 7 கி.மீ. தொலைவு. இளையாத்தங்குடி, மாத்தூர், நேமங்கோவில், இரணிக்கோவில், பிள்ளையார்பட்டி ஆகிய 5 கோவில்களைச் சேர்ந்த 701 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகிறார்கள். அருள்மிகு மீனாட்சி சோமசுந்தரர் திருக்கோவில் என்ற நகரச் சிவன்கோவில் இவ்வூரில் உள்ளது. இக்கோவிலின் தென்புறம் உள்ள ஜெயங் கொண்ட விநாயகர் கோவிலும் ஊருணியும் இவ்வூர் நேமங்கோவில் நகரத்தார்களால் அமைக்கப்பெற்று இப்போது, நகரச் சிவன்கோவில் நிர்வாகத்தில் இருக்கின்றன.

**கோட்டையூர் நகரத்தார்கள் கோட்டையூரிலும் பிற ஊர்களிலும் செய்த திருப்பணிகள்:**

1. கோடி கொடுத்த கொடைஞன் குடியிருந்த வீடும் கொடுத்த விழுத்தெய்வம் வள்ளல் அழகப்ப

செட்டியார் செய்திருக்கும் கல்வி அறப்பணிகள் வரலாற்றுச் சிறப்பு உடையவை.

2. மெ.க. குடும்பத்தார் ஒரு பிள்ளையார் கோவிலும் ஊருணியும் அமைத்துள்ளனர்.

3. க.பெ. குடும்பத்தார் மரகத விநாயகர் கோவிலையும் ஊருணியையும் அமைத்துள்ளனர்.

4. இராம. பெ. இராம. அழகப்ப செட்டியார், உ.லெ. அண்ணாமலை செட்டியார், உ.லெ. உ.அழகப்ப செட்டியார், உ.ராம. அண்ணாமலை செட்டியார் ஆகிய நால்வரும் சேர்ந்து அழகப்பா உடற்பயிற்சிக் கல்லூரிக்கு அருகே சுந்தர விநாயகர் கோவிலை அமைத்தனர்.

5. க.வீ.சொ. அழகப்ப ஐயா சனாதனதரும வித்தியாலயம் என்ற பெயரில் ஒரு தொடக்கப் பள்ளியை 1940–ல் நிறுவினார்.

6. வெ.சி.அரு. அழ.அரு. அழ. அருணாசலம் செட்டியார் நன்கொடையால் தஞ்சாவூர் அருணாசலம் செட்டியார் அரசினர் உயர்நிலைப்பள்ளி 1958–ல் தொடங்கப் பெற்று நடந்து வருகிறது.

7. அ.க.அ.சித. அழ. சிதம்பரம் செட்டியார் 1965–ல் சிதம்பரம் செட்டியார் பெண்கள் மேல் நிலைப் பள்ளியைத் தொடங்கினார். தேவகோட்டை கல்வி மாவட்டத்தில் சிறந்த பள்ளிகளில் ஒன்றாக இப்பள்ளி இயங்கி வருகிறது.

8. க.வீ.அழ. மு. அழ. முத்தையாசெட்டியார். 1974–ல் முத்தையா அழகப்பா மெட்ரிக்குலேசன் மேல்நிலைப் பள்ளியைத் தொடங்கினார். இதுவும் தேவகோட்டை கல்வி மாவட்டத்தில் சிறந்த பள்ளிகளில் ஒன்றாகத் திகழ்கிறது.

9. அ.ச. நாராயணன் செட்டியார் 1969–ல் மேநாடு மெமோரியல் ஆயத்தப் பள்ளியை நிறுவினார். 5ஆம் வகுப்பு வரை உள்ள இப்பள்ளி அரசு உதவி பெறாத தனியார் பள்ளியாகும்.

10. க.வீ.அழ. இராம.மு. இராமநாதன் செட்டியார் 1928–ல் தம் தந்தையார் நினைவாக க.வீ.அழ.மு. இலவச மருத்துவமனையைத் தொடங்கினார். இப்போதும் அவரது குடும்பத்தாரால் சிறப்பாக நடத்தப்பட்டு வருகிறது.

11. இராம.பெ.நா. குடும்பத்தார் கர்நாடகத்தில் குடகு மாவட்டத்தில் குட்டா என்னும் ஊரில் விஜய கணபதி, கோவில் கட்டி நடத்தி வருகிறார்கள்.

15. த.வீ.சொ. அழகப்ப ஐயா களத்தூர் சிவன் கோவில் திருப்பணி செய்துள்ளார். கல்லாங்குடி சிவன் கோயில் திருப்பணியைச் செய்து அக்கோயிலுக்கு இரண்டாவது குடமுழுக்கைச் செய்தார். வேறு சிலருடன் சேர்ந்து திருநெல்வாயில், திருநாரையூர், திருஅவள் இவள் நல்லூர் ஆகிய பாடல்பெற்ற தலங்களில் சிவாலயத் திருப்பணி செய்துள்ளார்.

16. வெ.சி.அ.ராம.குடும்பத்தினரான அணவள்ளியம்மை ஆச்சி, சொ.காவேரி ஆச்சி இருவரும் சேர்ந்து கச் சணம் பெருமாள் கோவிலைப் புதுப்பித்துள்ளனர்.

17. பெ.மு.அ.குடும்பத்தார் திருவாலங்காட்டுச் சிவன் கோவிலையும் நடராசர் கோவிலையும் புதுப்பித் துள்ளனர்.

18. வெ.சி.அ.ராம. அலமேலு ஆச்சி இராமேசுவரத்தில் துவாதசி மடம் ஏற்படுத்தி நடத்தி வருகிறார்.

19. வெ. சி.அ.ராம. இராமசாமி செட்டியார் குடும்பத் தார் சிதம்பரம் அனந்தீசுவரர் கோவில் திருப்பணி செய்து குடமுழுக்கும் நடத்தியுள்ளனர்.

20. இவ்வூர் அண்ணாமலை செட்டியார் திருவெண் காட்டில் பசுமடம் கட்டியிருக்கிறார்.

21. திருவண்ணாமலையில் கோட்டையூர் நகரத்தார்கள் பல்வேறு அறப்பணிகள் செய்துள்ளனர்.

22. மெ.க. குடும்பத்தார் திருவண்ணாமலையில் மெ.க. அன்னசத்திரத்தை 1872–முதல் தொடர்ந்து நடத்தி வருகின்றனர். இதன் 125ஆம் ஆண்டுவிழாவில் அருசோ சிறப்புரை ஆற்றினார். 1903இலும் 1944இலும் மெ.க. குடும்பத்தாரே அண்ணாமலையார் கோவில் குடமுழுக்கு விழாக்களை நடத்தியிருக்கிறார்கள்.

இவ்வூரில் வீர.வீர.இராம.வீரப்ப செட்டியார், அ.லெ.அண.லெ.அங்கப்ப செட்டியார், மு.வெ.சா. இராம ஆகிய மூவர் இல்லங்களிலும் புரட்டாசி மாதம் இராமாயணம் படிக்கப் பெறுகிறது. இவ்வூர் இளையாத்தங்குடி, கழனிவாசல் குடிப் பங்காளிகள், ஆத்தங்குடி, காரைக்குடி, கோனாபட்டு, நேமத்தான்பட்டி, பள்ளத்தூர் ஆகிய ஊர்களைச் சேர்ந்த தங்கள் பங்காளிகளுடன் இணைந்து ஆண்டுதோறும் ஆடிமாதம் இரண்டாவது வெள்ளி அன்று பூமணப்பிச்சாத்தாள் படைப்பை படைத்து வருகின்றனர். மெ.க. குடும்பத்தார் ஒரு மடத்தையும், க.பெ. குடும்பத்தார் ஒரு மடத்தையும் இவ்வூரில் நடத்தி வருகின்றனர். இவ்வூர் இளையாத் தங்குடி பெருமருதூருடையார்ப் பங்காளிகள் ஆண்டு தோறும் ஆடிமாதம் தெண்டாயுதபாணி பூசையும் அன்னதானமும் செய்து வருகின்றனர். கோட்டையூர் நகரத்தார்கள் கல்விக் கண் திறந்தவர்கள். கலைக்கோயில் கண்டவர்கள். செல்வத்தில் மிக்கவர்கள். திருப்பணிகள் செய்தவர்கள்; சிறந்தோங்கி வாழ்பவர்கள்.

அருசோ தலைமையில் கோட்டையூர்ச் சிவன் கோவிலில் 13.07.14ல் திருவாசகம் முற்றோதல் நிகழ்ந்தது. வரவேற்புரை மற்றும் நன்றியுரை – ஆர்.எம். முத்தையா செட்டியார்.

## 91. வேலங்குடி - 27.07.2014

### ஸ்ரீகாமாட்சி உடனாய ஸ்ரீ கண்டீஸ்வரர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அருசோ)

வெள்ளைக் கல்லின் திருப்பணியில்
வேலங் குடியில் வீற்றிருந்தே
அள்ளிக் கொடுக்கும் காமாட்சி
அம்மை உடனாய்க் கண்டீசா!
புள்ளி எல்லாம் பெருகிடவும்
புகழும் பொருளும் பொலிந்திடவும்
வெள்ளிக் கவசக் காமாட்சி!
வெற்றி கொடுப்பாய் அருளாட்சி!

## 91. வேலங்குடி - 27.07.2014

இது ஒன்பது நகரக்கோவில்களில் ஒன்று. காரைக் குடியிலிருந்து 9 கி.மீ. தொலைவு. இக்கோவிலைச் சேர்ந்த நகரத்தார்கள் 1. கருங்குளம், 2. காரைக்குடி, 3. தேவ கோட்டை, 4. பட்டமங்கலம் ஆகிய ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர். மொத்தப் புள்ளிகள் 52.

இக்கோவிலில் அமர்ந்து அருள் செய்யும் இறைவன் – கண்டீசுவரர், இறைவி – காமாட்சி அம்மை.

வேல மரங்கள் மிகுதியாக இருந்ததனால் இப்பெயர் பெற்றது. இக்கோவிலைப் பாண்டிய மன்னன் நகரத்தார் களுக்கு கி.பி. 718–ல் அளித்தான். இக்கோவிலுக்கு 18.6.1937ல் திருக்குட நன்னீராட்டு விழா நடந்துள்ளது. கோவிலுக்குத் தென்புறம் ஊருணியும் ஊருணியின் மேல்கரையில் தேசிக நாராயணப் பெருமாள் கோவிலும்

தட்சிணாமூர்த்தி கோவிலும், சொற்கேட்ட விநாயகர் கோவிலும் அமைந்துள்ளன.

இக்கோவில் சார்ந்த புள்ளிகள் எண்ணிக்கையில் குறைவாக இருப்பதற்குக் குருவின் சாபமே காரணம் என்று ஒரு கர்ண பரம்பரைக் கதை நிலவுகிறது. அச்சாபத்திலிருந்து விடுபடும் வழியாகத் தட்சிணா மூர்த்திக்கு ஒரு தனிக்கோவில் எழுப்புமாறு காஞ்சி சங்கராச்சாரியார் கூறியதன் அடிப்படையில் இங்கு தட்சிணாமூர்த்திக்குத் தனிக்கோயில் கட்டியுள்ளனர். நடராச சபையில் நடராசருக்கு அருகே உபதேச குரு கையில் வைத்திருந்த தண்டம் ஒன்றும் வைத்து வழிபடப் பெறுகிறது. இக்கோயிலின் தளம் சாலையிலிருந்து மிகவும் உயர்வாக உள்ளது.

இங்கு திருவாசகம் முற்றோதல் வழக்கம் போல் அருசோ தலைமையில் 27.07.2004ல் 100 பேர் பங்கு பெற்றனர். சிறப்பாக நடைபெற்றது.



22

## 92. சூரக்குடி - 10.08.2014

### ஸ்ரீஆவுடைய நாயகி உடனாய ஸ்ரீ தேசிக நாதர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அருசோ.)

பேணிச் சூரக் குடியார்கள்
பெட்டகம் போலக் கட்டியுள்ள
ஆணிப் பொன்னாம் ஆவுடைய
நாயகி ஆளும் திருக்கோவில்!
பேணும் தேசிக நாதரையும்
பிணிதீர் வைரவ நாதரையும்
காணில், வணங்கில்,, தரிசித்தால்
கனகம், வளங்கள் பொலியும்மே!

## சூரக்குடி - 10.08.2014

(தெ. சொக்கலிங்கம்)

ஒன்பது நகரக்கோயில்களில் ஒன்று. காரைக்குடியிலிருந்து 13 கி.மீ. தொலைவு. இக்கோவிலைச் சேர்ந்த நகரத்தார்கள் 25 ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர். மொத்தப் புள்ளிகள் 1850. சூரை மரங்கள் நிறைந்திருந்ததால் இவ்வூர் இப்பெயர் பெற்றது. இக்கோவில் கி.பி.718–ல் பாண்டிய மன்னனால் நகரத்தாருக்கு அளிக்கப் பெற்றது. இக்கோயில் அமர்ந்தருள் செய்யும் இறைவன் –தேசிகநாதர், இறைவி –ஆவுடை நாயகி.

இக்கோயிலுக்கு 26.6.1898–ல் குடமுழுக்கு விழா நடைபெற்றது. அதன் பின்னர் ஐந்து குடமுழுக்குகள் நடைபெற்றுள்ளன. ஊருணியும் நகரவிடுதியும் இங்கு உள்ளன.

ஒன்பது நகரக்கோவில்களில் இக்கோயிலில் மட்டுமே அம்மன் நான்கு திருக்கைகளுடனும் மூன்று கண் களுடனும் காட்சி தருகிறார் என்பது குறிப்பிடத்தக்கது. இக்கோவில் தட்சணாமூர்த்தி சிற்பமும் பிற கோவில்களிலிருந்து வேறுபட்டுள்ளது.

பொதுவாகத் தட்சணாமூர்த்தியின் முதுகுப் பகுதியும் ஆலமரத்தின் தண்டுப் பகுதியும் சேர்ந்தே அமைந்திருக்கும். ஆனால் இங்கு மட்டும் அவ்விரண்டும் தனித்தனியே தோன்றும் வண்ணம் ஒரே கல்லில் செதுக்கப்பட்டுள்ளது. தேய்பிறை அஷ்டமியன்று வைரவருக்குச் சிறப்பாகப் பூசை நடைபெறுகிறது. இக்கோவில் நகரத்தார்களின் தலைவராகப் பல ஆண்டுகள் அரும்பணி ஆற்றிய பெரியவர் காரைக்குடி உடையப்பசெட்டியார் 99 ஆண்டுகள் வாழ்ந்த பேரறிஞர். “நகரத்தார்களின் கலைக்களஞ்சியம்” என்று அருசோ அவரைப் போற்றுவார். இக்கோவிலுக்கு அருசோ ஒரு பதிகம் பாடியுள்ளார். வேகுப்பட்டி கவிஞர் இராம. ஆண்டியப்பன் இக்கோவில் புள்ளிகளில் ஒரு ஆர்வமான கவிஞர், செயல் வீரர். காரைக்குடி பட்டுவேட்டி இராமநாதன் செட்டியார் ஒரு புதிய ஆய்வாளர். கண்டரமாணிக்கம் வி.கே.என். கண்ணப்ப செட்டியார் பல ஊர்களில் மாளிகை கட்டி மக்கள் பயன்படுத்த உதவும் சான்றோர். மத்திய மந்திரி ப. சிதம்பரம் இக்கோவிலைச் சார்ந்தவர்.

இங்கு அருசோ தலைமையில் 10.08.14ல் திருவாசகம் முற்றோதல் நிகழ்ந்தது.



## 93. சொக்கலிங்கம் புதூர் - 30.08.2014

### சொக்கனேந்தல் என்னும் சொக்கலிங்கம் புதூர் ஸ்ரீ மீனாட்சி சொக்கலிங்கர் துதி.

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ)

நீருண்ட மேகம் நிலைகொண்டு பெய்ய
நிதிகொண்ட சொக்க னேந்தல்
காருண்ட செல்வக் கைகொண்ட மாந்தர்
கவிகொண்ட சொக்க லிங்கர்
வார்கொண்ட மீனா வளம்கொண்ட சிற்றூர்
வழிகாட்டி உய்யு மாறு
வேர் கொண்ட வேதம் மணிவாச கங்கள்
விளைவாகப் பாடுவோமே.

## சொக்கலிங்கம் புதூர் - 30.08.2014

(தெ.சொக்கலிங்கம்)

பதினாறூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து நகர சூரக்குடி வழியாக 10 கி.மீ. தொலைவு. மாத்தூர், வைரவன் கோவில் ஆகிய இரு கோவில்களைச் சேர்ந்த 209 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர்.

நகரத்தார் பேச்சுவழக்கில் இவ்வூர் 'சொக்கனேந்தல்' என்று வழங்கப்படுகிறது. இங்கு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோவில் என்ற நகரச் சிவன் கோவில் உள்ளது. 1918–ல் திருப்பணி செய்யப்பட்ட கோவில். இக்கோவிலில் இவ்வூர் சு.கரு. சுப்பிரமணியன் செட்டியாரால் அமைக்கப்பெற்ற கல்யாண சுந்தரராசப் பெருமாள் – ஸ்ரீதேவி – பூதேவி சன்னதி அமைந்துள்ளது. 1918 அளவில் நகரப் பொதுவில் மாணிக்கவாசக வித்தியாசாலை என்ற பெயரில் ஒரு பள்ளி நிறுவப் பெற்று 20 ஆண்டுகளுக்கு

மேல் நகரத்தார் நிருவாகத்தில் நடைபெற்றது. பின்னர் இது அரசிடம் ஒப்படைக்கப்பெற்று இப்போது கல்யாண மண்டபமாக நடைபெற்று வருகிறது.

வைரவன் கோவில் நகரத்தார் தை மாதம் அடைக்காத்தாள் படைப்பையும், மாத்தூர் நகரத்தார் உ.சிறுவயல் பங்காளிகளுடன் சேர்ந்து உ.சிறுவயலில் ஆடி மாதம் அழகாத்தாள் படைப்பையும் படைத்து வருகின்றனர்.

சொ.புதூர் நற்பணி மன்றம் என்ற நகரத்தார் அமைப்பு உருவாக்கப்பட்டுச் சிறப்பாகப் பணியாற்றி வருகிறது. சக்தி என அழைக்கப்படும் இராம. முத்தையா I.N.A.ல் பணியாற்றியவர்.

பொற்றாலி வழங்குதல் எனும் விழா இவ்வூரில் சிறப்பாக நடந்து வரும் நிகழ்ச்சியாகும். ஆண்டுதோறும் ஆனி மாதத்தில் வளர்ப்பிறைச் சுவாதி நட்சத்திரத்தன்று அரு. முருகப்பன், மு. சுபாஷ் குடும்பத்தாரால் சிவன் கோவிலில் மீனாட்சி திருக்கல்யாணம் நிகழும். அப்போது அம்மனுக்குச் சாத்தப்படும் தாலியைத் தங்கள் செலவில் சாத்தி, திருக்கல்யாணம் முடிந்ததும் பெற்றுக் கொள்வதை இப்பகுதி மக்கள் பிரார்த்தனையாகச் செய்து கொள்கின்றனர். இவ்வூர் நகரத்தார் பிரார்த்தனை யாளர்களிடம் தாலிக்குரிய விலையை மட்டும் பெற்றுக் கொண்டு விழாவை நடத்தி அவர்களுக்குப் பொற்றாலியை வழங்குகின்றனர்.

தங்கள் பிள்ளைகளுக்குத் திருமணம் நடக்க வேண்டிப் பிரார்த்தனை செய்யும் இப்பிரார்த்தனையாளர்கள், திருமணம் நிச்சயிக்கப்பட்டபின், திருமணத்தன்று, மணமகன் – மணமகள் கழுத்தில் இப்பொற்றாலியை

அணிவிப்பார். ஒவ்வொரு ஆண்டும் சித்திரை மாதம் முதல் வாரத்தில் வைத்தீஸ்வரன் கோவில் பாத யாத்திரைக் குழுவினரால் சுவாமி அம்பாளுக்கு லெட்சார்ச்சனை நடைபெறுகிறது. இவ்வூர் அக்ரஹார இடத்தில் இருபத்தேழு நட்சத்திரங்களுக்குரிய பன்னிரண்டு ராசிகளுக்குரிய மரங்கள் வைக்கப்பெற்றுப் பொன் முத்துராமன் அவர்களால் பராமரிக்கப்படு கின்றது. இவ்வூரின் காவல் தெய்வமாக காமன் ராஜா கோவில் உள்ளது. இவ்வூரில் பெரியவர் அரு. முருகப்ப செட்டியார், ரவிவீரப்பன், திருமணச் சேவை பழனியப்ப செட்டியார் குடும்பத்தினர் ஆகிய பலரின் சேவை போற்றுதற்குரியது. இவ்வூர்க் கோவிலில் அருசோ இரண்டு முறை இராமாயணம் தொடர் சொற்பொழிவு நிகழ்த்தி உள்ளார்.

இங்கு 30.08.14ல் அருசோ தலைமையில் திருவாசகம் முற்றோதல் நிகழ்ந்தது.



## 94. உ. சிறுவயல் - 14.09.2014

### ஸ்ரீபொன்னழகி அம்மன் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ. பாடியது)

நீரின் வளமும் நிலவளமும்
நிறைந்த செல்வத் தொழில் வளமும்
பாரில் வழங்கி சிறுவயலில்
பாது காக்கும் பொன்னழகி!
ஊரில் உள்ளோர் அனைவரையும்
ஓங்கி வளரச் செய்பவளே!
சீரில் பாடிப் பரவுகிறோம்
திருவா சகம்போல் சிறப்பருள்க!

## உ. சிறுவயல் - 14.09.2014

பதினாறூர் வட்டகை; காரைக்குடியிலிருந்து 8 கி.மீ. தொலைவு. இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன்கோவில், இலுப்பக்குடி ஆகிய நான்கு கோவில்களைச் சேர்ந்த 670 புள்ளிகள் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர். இவ்வூர் இருபகுதிகளாக அமைந்துள்ளது. வடக்குப் பகுதி உய்யக்கொண்டான் என்றும் தெற்குப் பகுதி சிறுவயல் என்றும் வழங்கப்படுகிறது. பொதுவாகப் பேச்சு வழக்கில் உய்யக் கொண்டான் சிறுவயல் என்று அழைக்கப்படுகிறது.

இவ்வூரில் நகரத்தாருக்குரிய பொதுக் கோவிலாகப் பொன்னழகி அம்மன் கோவில் அமைந்துள்ளது. சவுந்தரநாயகி அம்பாள் உடனாய ஐராவதீச்சுரர் என்ற சிவன்கோவில் இளையாத்தங்குடி ஒக்கூர் பிரிவைச் சேர்ந்த சா.மெ. ராம. பழனியப்ப செட்டியார் குடும்பத் தாரால் கட்டப்பெற்று அவர் தம் வழிமுறையினரால் நிருவகிக்கப்பெற்று வருகிறது. மாத்தூர் மணலூர்,

பங்காளிகளால் திருப்பணி செய்யப்பெற்று, நிருவகிக்கப்பெற்று வரும் காளப் பிள்ளையார் என்னும் ஐநூற்று விநாயகர் கோவிலும், வைரவன் கோவில் நகரத்தாரால் நிருவகிக்கப்பெற்றுவரும் பக்த கணபதி கோவிலும், இலுப்பக்குடி நகரத்தாரால் திருப்பணி செய்யப்பெற்ற ஐயனார் கோவிலும் இவ்வூரில் உள்ளன. அம்மன் கோவில் ஊருணி வைரவன் கோவிலைச் சேர்ந்த பெரியணன் செட்டியார் குடும்பத்தாலும், சிவன்கோவில் ஊருணி இலுப்பக்குடி நகரத்தாராலும் அமைக்கப்பெற்றவை ஆகும்.

சிவன் கோவிலால் இடம் நன்கொடையாக வழங்கப் பெற்று, தொடக்கநிலைச் செலவுகள் நகரத்தாரால் செய்யப்பெற்று, இப்போது அரசினரால் நடத்தப்பெறும் உயர்நிலைப் பள்ளி இவ்வூரில் இயங்கி வருகிறது. அம்மன்கோவில், சிவன்கோவில் ஆகியவற்றால் இடம் நன்கொடையாகக் கொடுக்கப்பட்டு, சொ.லெ.லெட் சுமணன் செட்டியாரால் கட்டப்பெற்று, இப்போது அரசு நிர்வாகத்தில் இயங்கும் மருத்துவமனை ஒன்றும் உள்ளது.

இவ்வூர் இலுப்பக்குடிப் பங்காளிகள் ஆண்டுதோறும் ஆடிமாதம் ஒரு பொதுப் படைப்பைப் படைத்து வருகின்றனர். இவ்வூர் மாத்தூர் அரும்பாக்கூர் பங்காளிகள், கானாடுகாத்தான், க.வெ. குடும்பத்தாருடன் சேர்ந்து இவ்வூரில் ஆண்டுதோறும் ஆடிமாதம் மாங்கல்யாத்தாள் படைப்பைப் படைத்து வருகின்றனர். ஆத்தங்குடி, உ.சிறுவயல், சொக்கலிங்கம்புதூர், ஆ. முத்துப்பட்டணம் ஆகிய ஊர்களைச் சேர்ந்த மாத்தூர் மணலூர்ப் பங்காளிகள் இவ்வூரில் ஆண்டுதோறும் ஆடிமாதம் அழகாத்தாள் படைப்பைப் படைத்து வருகின்றனர். காரைக்குடி, சண்முகநாதபுரம் உ.சிறுவயல், விராமதி ஆகிய ஊர்களைச் சேர்ந்த இளையாத்தங்குடி

ஒக்கூர்ப் பங்காளிகள் ஆண்டுதோறும் மாசி மாதம் முதல் புதன்கிழமை காரைக்குடியில் திருமாத்தாள் படைப்பைப் படைத்து வருகின்றனர்.

இளையாத்தங்குடி ஒக்கூர் பிரிவைச் சேர்ந்த மெ.சு. வகையார் தங்கள் மடத்தில் ஆண்டுதோறும் சமயக் குரவர் நால்வர், சேக்கிழார் ஆகிய ஐவருக்கும் குருபூசையும், வைகாசி விசாகத்தன்று மகேசுவர பூசையும் நடத்தி வருகின்றனர். இதே பிரிவைச் சேர்ந்த சா.ராம.ப.குடும்பத்தார் ஆண்டுதோறும் ஆடிமாதம் திங்கட்கிழமை மகேசுவர பூசையும் செவ்வாய்க்கிழமை பொதுப்படைப்பும் நடத்தி வருகின்றனர்.

இவ்வூர் மாத்தூர் அரும்பாக்கூர் பங்காளிகள் இணைந்து குன்றக்குடி கீழரத வீதியில் செ.கு. நகரத்தார் மடத்தை நடத்தி வருகின்றனர். இவ்வூர்த் தொழிலதிபர் சபாரத்தினம் செட்டியாரால் இவ்வூரில் இலக்கிய ஆன்மிகப் பணிகள் செழித்துள்ளன.

இவ்வூர்ச் சிவன் கோவிலில் 14.09.14ல் அருசோ தலைமையில் திருவாசகம் முற்றோதல் நிகழ்ந்தது.



## 95. திருப்பெருந்துறை (எ) ஆவுடையார் கோவில் - 01.11.2014

### ஆவுடையார் கோவில் ஸ்ரீ ஆத்மநாத சுவாமி துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ. பாடியது.

குருந்த மரத்தின் கீழமர்ந்து
குதிரை வாங்க வந்தவனைக்
குருவாய் உபதே சம்செய்து
குணமாய்த் திருவா சகம்பாட
அருவாய் ஆத்ம நாதர் அருள்
ஆவுடை யார்தலம் அருளாலே
பெருமான் மணிவா சகர் அடிகள்
பேணித் துதிப்போம் வாழியவே!

## திருப்பெருந்துறை (எ) ஆவுடையார் கோவில் - 01.11.2014

திருப்பெருந்துறை (எ) ஆவுடையார் கோவில் புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ளது. அறந்தாங்கி யிலிருந்து 13 கி.மீ. தொலைவு. இக்கோவில் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானது. பாண்டிய மன்னனிடம் அமைச்சராக இருந்த மணிவாசகப் பெருமான் மன்னனின் ஆணைப்படி குதிரைகள் வாங்க ஆவுடையார் கோவில் வழியாகச் சென்றார். அவ்வேளையில் இறைவன் அவரை ஆட்கொண்டு அருள்பாலித்த தலம் இது. அவர் இத்தலத்தில் இருந்த பழைய ஆலயத்தைப் புதுப்பித்து அனேக திருப்பணிகளைச் செய்து பூஜை முறைகளையும் வகுத்தார். அவர் செம்மை மனத்தால் திருப்பணிகள்

செய்வோனுக்கு (திருவாசகம்) என்று கூறுவது காண்க. இங்கு வீற்றிருந்து ஞானநிலையில் நினைத்து 'திருவாசகம்' என்ற நூலைப் பாடி அருளினார். சிவ மகாபுராணத்தில் ஷட்விதார்த்தம் என்ற தலைப்பில் ஆறு பொருட்கள் கூறப்பட்டுள்ளன. இவை மந்திரம், யந்திரம், தேவதை, பிரபஞ்சம், குரு, சீடன் என்பனவாகும்.

இவற்றை அறிவதே முத்தி இன்பம். இந்த ஆறு வடிவிலும் இறைவன் ஆவுடையார்கோவிலில் வீற்றிருக் கிறான். ஆத்மநாதர் மந்திரவடிவமாக இருக்கிறார். முச்சதுரம், மூன்று மலர் வட்டங்களுடன் 43 கோணங் களைக் கொண்ட யந்திரம் அம்பிகை சந்நிதியில் அமைந்துள்ளது. இங்கு மந்திரம் யந்திரம் ஆகியவற்றின் தேவதைகளாக தட்சணாமூர்த்தி விளங்குகிறார். பிரபஞ்ச தத்துவமான ஆறு அத்துவாக்களும் இங்கு விதானச் சிற்பங்களாகவும் தீபங்களாகவும் உள்ளன. குரு பிரானாக சிவபெருமான் குருந்த மரத்தடியில் வீற்றிருக்கிறார். சீடர்களின் சிரோன்மணியாக மாணிக்கவாசகர் உள்ளார். இந்த ஆறு பொருட்களையும் ஆன்ம ஞானிகளுக்கு உணர்த்தும் மூர்த்தியாக முருகப் பெருமான் விளங்குகிறார். இத்தகைய ஆறு பொருட்களையும் விளக்கி நிற்கும் தலம் வேறு எதுவும் இல்லை.

திருப்பெருந்துறை இறைவன் அருவத் திருமேனி கொண்டுள்ள தலம். இத்தலத்தில் இறைவன் அருவமானதால் நந்தி, கொடிமரம் என்பன இல்லை. உற்சவமும் மாணிக்கவாசகருக்கே. ஆவுடையார் கோவிலில் மாணிக்கவாசகருக்கு மூன்று சந்நிதிகள்

உள்ளன. முதல் சந்நிதி கோபுரத்திற்கு முன்புறமுள்ள ரகுநாத பூபாள மண்டபத்தில் அமைந்துள்ளது. இங்குள்ள மாணிக்கவாசகர் நந்திகேச மாணிக்கவாசகர் என்று அழைக்கப்படுகிறார். முதல் பிரகாரத்தில் அமைந்துள்ள கனகசபைக்கு மேற்கில் கிழக்கு நோக்கியவாறு இரண்டாவது மாணிக்கவாசகர் சந்நிதி உள்ளது. இங்குள்ள மாணிக்கவாசகர் சிவானந்த மாணிக்கவாசகர் என்று அழைக்கப்படுகிறார். முதற் பிரகாரத்தில் அம்பிகை சன்னிதிக்கு நேர் எதிரிலுள்ள தனிச் சன்னிதியில் உருத்திராட்ச மண்டபத்தில் உலோக உலாத் திருமேனியாக மாணிக்க வாசகர் எழுந்தருளி உள்ளார். இது மூன்றாவது சந்நிதி. இந்த இடம் அருள் மூலஸ்தானம் என்று அழைக்கப்படுகிறது.

முதல் இரண்டில் கல்திருமேனியாகவும் மூன்றாவதில் உலோகத் திருமேனியாகவும் மாணிக்கவாசகர் காட்சியளித்துக் கொண்டிருக்கிறார். ஆவுடையார் கோவிலில் கால சந்தியில் இறைவனுக்குப் புட்டுடன் தேன்குழல், அதிரசம், வடை, அப்பம், தோசை ஆகியவை நிவேதிக்கப்படுகின்றன. இதனைப் புட்டுக்கூடை நிவேதனம் என்பர். மதுரையில் புட்டு வாணிச்சி வந்தி அம்மை அளித்த புட்டை சுவாமி விருப்பமுடன் உண்டதால் புட்டு சிறப்பு நிவேதனமாகும். "மண்பால் மதுரையில் பிட்டமுது செய்தருளி" (திருப்பூவல்லி) என்று திருவாசகத்தில் குறிக்கப்பட்டுள்ளது. தினந்தோறும் நடைபெறும் ஆறு வேளை பூசையிலும் புழுங்கல் அரிசி சாதமும், உப்பிடாது சுண்ட வைத்த

தூதுவளை அல்லது முளைக்கீரையும், புளி சேர்த்த பாகற்காய்க் குழம்பும் நிவேதிக்கப்படுகின்றன. அம்பிகைக்கு பாயசம் நிவேதனம். வீரபத்திரருக்கு வெண்ணெய்க்காப்பு செய்து வடைமாலைகள் சாற்றி வடை நிவேதனம் செய்கின்றனர்.

இங்கு திருவாசகம் முற்றோதல் *1.11.14*–ல் அருசோ தலைமையில் நிகழ்ந்தது. நேமத்தான்பட்டி மு.பெ. குடும்பத்தார் திருப்பணியாளர் – சத்திரம் நடத்துவோர் உணவளித்தனர்.

வரவேற்று நன்றி கூறியவர்: ஆர்.எம். சிதம்பரம், நேமத்தான்பட்டி டிரஸ்டிகள் பாராட்டிப்பேசினர்.



## 96. திருஉத்தரகோசமங்கை - 25.12.2014

## திருஉத்தரகோசமங்கை நடராசர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ.)

ஆடல் வல்லான் மரகதமே!
    ஆளும் உத்தர கோசமங்கை
பாடல் வேதம் வாசகத்தைப்
    பாடும் வாத வூரரது
தேடல் தொடர்ந்த திருத்தலமாம்
    திருவார் கமிலை மங்களேசா!
வாடல் நீக்கி வளங்களெலாம்
    வழங்கி அருள்வாய் காப்பாயே!

## திருஉத்தரகோசமங்கை - 25.12.2014

(தெ. சொக்கலிங்கம்)

திரு உத்தர கோசமங்கை இராமநாதபுர மாவட்டத்தைச் சேர்ந்தது. காரைக்குடியிலிருந்து 90 கி.மீ. தொலைவு. இவ்வூரில் மங்களேசுவரர் திருக்கோயில் உள்ளது. மங்களேஸ்வரி உடனுறை மங்களநாதர், மரகத நடராஜர், இரத்தின சபாபதி மற்றும் ஆதி சிதம்பரேசர் ஆகியவை இங்குள்ள தெய்வங்கள். இக்கோவில் இராமநாதபுரம் அரச குடும்பத்திற்குச் சொந்தமானது. இது மாணிக்கவாசகர் பாடிய தலம். இங்குள்ள நடராஜர் மரகதக் கல்லினால் ஆனது; ஐந்தரை அடி உயரமுள்ளது; ஆண்டுக்கு ஒருமுறை ஆருத்ரா தரிசனத்தின்போது (மார்கழி மாதம்) அபிஷேகம் நடைபெறும். மரகத நடராஜர் ஆண்டு முழுவதும் சந்தனக் காப்பிலேயே இருப்பார். மரகத நடராஜர்கோவிலில் தினசரி ஸ்படிக லிங்க பூசை நடைபெறும். உச்சிக்கால வேளையில்

ஸ்படிக மற்றும் மரகத லிங்கத்திற்கு நடைபெறும் அபிஷேகம் மாணிக்கவாசகரே செய்வதாக ஐதீகம்; இவர் சடையுடன் தனிச்சன்னதியில் காட்சி தருகிறார்.

சிவபெருமான் பார்வதிக்கு வேதமந்திரத்தை உபதேசித்து விட்டுத் திருப்பிக் கேட்கும்போது தன்னை மறந்ததால் மண்ணுலகில் புகலூரில் பிறந்து பின் அந்தணராக சிவன் மணந்தார். மணந்தபின் மீண்டும் வேதமந்திரத்தை உபதேசித்தாராம். உத்திரம் = பதில்; கோசம் = வேதம் என்ற பொருளில் ஊரின் பெயர். வெளிப்பிரகாரத்தில் ஆதி சிதம்பரம் என்ற தனிக்கோவிலில் பதஞ்சலிக்கும் வியாக்ர பாதருக்கும் காரைக்கால் அம்மையாருக்கும் காட்சி கொடுத்தார். இங்கிருந்துதான் நடராஜர் சிதம்பரத்தில் ஆடச் சென்றதாகக் கூறுவர். பிருகு, சாண்டில்யர், அக்கினி வழிபட்ட தலம். பல்லாயிரம் ஆண்டுகள் பழைமை உள்ள இலந்தை மரம் உள்ளது. தேவார ஆசிரியர்கள் இத்தலத்தைப் பாடவில்லை; ஆனால் மாணிக்கவாசகரின் பாடல் பெற்ற தலம் இது. மாணிக்கவாசகரது திருவாசகத்தில் நீத்தல் விண்ணப்பம், திருப்பொன்னூசல் ஆகிய பதிகங்கள் இத்தலத்து இறைவனைப் போற்றி செய்து பாடப்பட்டவை ஆகும். திருவாசகத்தில் பல இடங்களில் ‘உத்தரகோசமங்கை’ என்ற இத்தலத்தின் பெயர் காணப்படுகிறது. மங்களேஸ்வரர் திருக்கோவில் பெரும் நிலப்பரப்பில் அமைந்துள்ளது.

இங்கு *25.12.14*–ல் திருவாசகம் முற்றோதல் அருசோ தலைமையில் சிறப்பாக நிகழ்ந்தது. இராமநாதபுரம் சமஸ்தான திவான் மகேந்திரன் தொடங்கி வைத்தார். திருப்புனவாசல் குருக்கள் இராமநாதன் காலை உணவு வழங்கினார். கோவிலில் மதிய உணவு வழங்கினர்.



## 97. திருக்கழுக்குன்றம் 17.12.14

### வேதகிரீஸ்வரர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ.)

நால்வர் பாடும் கழுக்குன்றம்
நாத வேத கிரீஸ்வரரே!
சால்பாய் வீசம் காசிக்கு!
சான்றோர் போற்றும் வேதகிரி!
பால்போல் நீரும் திருவனமும்
பாடும் மணிவா சகர் அடிகள்
ஆல்போல் நீழல் இணையடிகள்
ஆவுடை யார்கழல் அடித்தலமே!

### கயிலைப் புனிதர் தாமோதரன்

வான முகில்போல் குரலாலே
வற்றாத் தமிழை வாசகத்தை
ஞானத் தமிழைத் தினம்பாடி
நாடே போற்றும் திருக்கயிலைக்
கானக் குயிலே! தாமோதர!
கயிலைப் புனித! கழுக்குன்றின்
ஞானத் திருவே! சம்பந்த!
நாளும் ஓங்கி வாழியவே!

- *அருசோ*

## திருக்கழுக்குன்றம் 17.12.14

(தெ. சொக்கலிங்கம்)

திருக்கழுக்குன்றம் செங்கற்பட்டிலிருந்து 14 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. காஞ்சிபுரம் மாவட்டத்தைச் சேர்ந்தது. வேதமே மலையாக உள்ள

ஊர். இறைவன் திருநாமம் வேதகிரீஸ்வரர். தலவிருட்சம் வாழை; சங்கு தீர்த்தம். உச்சிப் பொழுதில் கழுகு வந்து உணவு பெறுவதால் பட்சி தீர்த்தம். இறைவன் சுயம்புவாக இருக்கிறார். மார்க்கண்டேயர் இறைவனை வழிபடப் பாத்திரமின்றித் தவிக்க இறைவன் சங்கை உண்டு பண்ணிய தலம். இங்குள்ள தீர்த்தத்தில் 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை சங்கு பிறப்பதாக ஐதீகம். அம்பாளுக்கு மார்பில் ஸ்ரீ சக்கர பதக்கம்! தட்சண கைலாயம் என்றும் இது போற்றப்படுகிறது. மலைக்கோவிலை கிரிவலம் வர பலன் கிட்டும். கீழே தாழக்கோயிலில் உள்ள ருத்திர கோடீஸ்வரர் சுயம்பு. இது தேவார வைப்புத் தலம். ஈஸ்வர்னுக்குத் தனியான சகஸ்ரநாமம் உண்டு. தினமும் பாத அபிஷேகம் மட்டும்தான். குறிப்பிட்ட நாட்களில் முழு அபிஷேகம். ஆடிப்பூரம், நவராத்திரி, பங்குனி உத்திரம் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. சுந்தரர் பொன் பெற்ற தலம்.

மாணிக்க வாசகப் பெருமான் இத்தலத்தில் திருக்கழுக் குன்றப் பதிகம் பாடியருளினார். மாணிக்கவாசக சுவாமிகள் திருக்கழுக்குன்றத்தினை அடைந்து அங்கு எழுந்தருளியுள்ள சிவபெருமானை வணங்கி 'திருப்பெருந்துறையில் குருந்த மர நிழலில் குருவாக எழுந்தருளியிருந்து மெய்ப்பொருளை உபதேசித்தருளிய ஆசிரிய திருக்கோலத்தை (குருவடிவை) அடியேற்குக் காட்டியருள வேண்டும்' என வேண்டி நின்றார். மணிவாசகப் பெருமான் தமக்கு அருள் சுரந்த குருவின் திருக்கோலத்தைக் கண்ட நிலையில் பாடிய பதிகமாதலின் இதனை 'சற்குரு தரிசனம்' என முன்னோர் கருத்துரைத்தனர். இப்பதிகத்தைப் பாடினால்

23

குருவருளைப் பெற்று நலம் பெறலாம். கயிலைப் புனிதர், திருவாசகச் சித்தர், சிவ.தாமோதரன் ஐயா இவ்வூரைச் சேர்ந்தவர்; திருவாசக முற்றோதல்களை நாடெங்கும் நடத்தி வருகிறார்; ஆயிரக் கணக்கில் மக்கள் வருகிறார்கள்; சைவத்திற்கும் தமிழுக்கும் இவர் ஆற்றிவரும் தொண்டு போற்றுதற்கு உரியது. இங்கு நாங்கள் திருவாசகம் முற்றோதல் செய்த பொழுது தாமோதரன் அவர்கள் எங்களுடன் சேர்ந்து பாடி ஒருநாள் முழுதும் தங்குமிடமும் அளித்து, உணவும் வழங்கினார். அந்நாள் மறக்க முடியாத அனுபவம் ஆகும்.

இங்கு சிவத்திரு தாமோதரன் ஐயா தலைமையில் *17.12.14*ல் திருவாசகம் முற்றோதல் நிகழ்ந்தது. அருசோ தொடக்க உரை ஆற்றினார். செயலர் காசிஸ்ரீ பழ. மாணிக்கம் நன்றி கூறினார்.



## 98. திருவண்ணாமலை - 16.12.14

### திருஅண்ணாமலையார் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ.)

அயனும் மாலும் தொழுதேத்த
அண்ணா மலையாய் ஒளிமயமாய்த்
தயவாய் வந்த தாழ் சடையாய்!
தன்னே ரில்லா ரிஷிகளெலாம்
இயல்பாய் வந்தே தொழுதிடவே
எழுந்தே அருளும் பெருமானே!
வயலாய் வந்தோம்; தண்ணீராய்
வந்தே காப்பாய் எந்நாளும்

### கோட்டையூர் மெ.க. சத்திரம்

கோட்டை யூரின் மெய்யப்பர்
பெற்ற கருப்பன் செட்டியவர்
பாட்டை போடத் திருவண்ணா
மலையில் பதமாய்த் திருப்பணிகள்!
கோட்டை போலச் சத்திரமும்
கோலா கலமாய் வாகனங்கள்!
நாட்டை ஈர்க்கும் அவர் வம்சம்!
நாளும் வளர்ந்தே ஓங்குகவே!

*- அருசோ*

## திருவண்ணாமலை - 16.12.2014

(தெ. சொக்கலிங்கம்)

அண்ணாமலையானே! எங்கள் அன்பில் கலந்தோனே! பிறக்க முக்தி தருவது திருவாரூர்; இறக்க முக்தி தருவது காசி; வசிக்க முக்தி தருவது காஞ்சி; நினைக்க முக்தி தருவது திருவண்ணாமலை. தீர்த்தம்,

மூர்த்தி, தலம் என்ற மூன்றாலும் சிறப்பு மிக்க திருவண்ணாமலை. பஞ்சபூதத் தலங்களில் இது நெருப்பு ஆகும். ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதியாக சிவபெருமான் இங்கே இருக்கிறார்.

"ஆதி நடம் ஆடுமலை; அன்று இருவர் தேடுமலை;
சோதி மதி ஆபரவம் சூடுமலை - நீதி
தழைக்கு மலை ஞானத் தபோதனரை வாவென்று
அழைக்கு மலை அண்ணா மலை"

"கண்டம் கரியமலை; கண் மூன்று உடையமலை
அண்டரெலாம் போற்றற்கு அரியமலை - தொண்டருக்கு
தோற்றுமலை; நாளும் தொழுவோர் எழுபிறப்பை
மாற்றுமலை அண்ணாமலை."

என்று திருவண்ணாமலையின் சிறப்பைப் போற்றுகிறது குருநமச்சிவாயரின் அண்ணாமலை வெண்பா.

ஏராளமான ஞானிகளும் ரிஷிகளும் முனிவர்களும் வாழ்ந்த, வாழுகின்ற திருவண்ணாமலை.

ஞானத் தபோதனரை யெல்லாம் ஈர்க்கும் மலை அண்ணாமலை. சிவபெருமான் மலை வடிவில் இருக்கிறார். அருள்மிகு உண்ணாமுலை அம்மை உடனாய அண்ணாமலையார் திருக்கோவில் இங்குள்ளது. மிகவும் பிரசித்தி பெற்ற திருக்கோவில். இக்கோவிலுக்கு நகரத்தார்கள் நிறைய திருப்பணிகள் செய்துள்ளார்கள். ஏராளமான நகைகள், வாகனங்கள் நகரத்தார்கள் செய்து கொடுத்திருக்கிறார்கள். ஸ்ரீ அண்ணாமலையார் திருவிழாவில் பத்து மண்டகப் படிகளில் ஏழு மண்டகப்படிகள் நகரத்தாருக்கு உரியவை. கோவிலூர் ஆதீனத்திற்குச் சொந்தமான ஈசானிய மடம்

இங்குள்ளது. கோட்டையூர் நகரத்தார்களின் 137 ஆண்டுகள் பழைமை வாய்ந்த மெ.க. அன்னசத்திரம், அ.க.சத்திரம், காரைக்குடி மேலக்கொரட்டியார் வீட்டாருக்குச் சொந்தமான சாதுக்கள் சத்திரம், மற்றும் ஓயாமடம் ஆகியவை இங்குள்ளன. ரமணாஸ்ரமம், சேஷாத்திரி சுவாமிகளின் ஆஸ்ரமம், யோகிராம் சுரத்குமார் ஆஸ்ரமம் முதலியவை இங்குள்ளன. திருவண்ணாமலை கார்த்திகை தீபம் உலகப் பிரசித்தி பெற்றது. ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி அன்று ஏராளமான பக்தர்கள் கிரிவலம் வருகின்றனர். கிரிவலப் பாதை 14 கி.மீ. தொலைவு.

நகரத்தார்கள் கடிதம் எழுதும்போது கடித விபரங் களை எழுதி முடித்தபின் இறுதியில் கையெழுத்துக்குப் பதிலாக 'ஸ்ரீ அண்ணாமலையார் துணை' என்று எழுதுவார்கள். வள்ளல் அழகப்ப செட்டியார் தம் கடிதங்களில் அண்ணாமலையார் துணை என்று எழுதி இருப்பதைக் காணலாம். ஸ்ரீரமண மகரிஷி சிறுவனாக இருந்தபோது அவர் மனதில் பல கேள்விகள் அலைகளாக எழும்பிக் கொண்டே இருந்தன. அவை; மனிதன் ஏன் பிறக்கிறான்? அவனுக்கு ஏன் மரணம்? மரணம் என்றால் என்ன? நான் யார்? எங்கிருந்து வந்தேன்? இறுதியில் எங்கே செல்லப்போகிறேன்? இவற்றிற்கு எல்லாம் விடை கிடைத்த இடம் திருவண்ணாமலை. மாணிக்கவாசகர் திருவாசகத்தில் திருவெம்பாவை, திருவம்மானைஆகிய பதிகங்களை இத்தலத்தில்தான் பாடினார். வடலூர் இராமலிங்க வள்ளலார், மாணிக்க வாசகரை மானசீக குருவாக ஏற்றுக் கொண்டவர். திருவெம்பாவையில் வரும் 'கேழில் பரஞ்சோதி – கேழில் பரங்கருணை' என்ற வரிகள்தான் வள்ளலாரின் சன்மார்க்க சங்கத்திற்குத் தாரக மந்திரமாக

விளங்கும் 'அருட்பெருஞ்சோதி – தனிப்பெருங் கருணை' ஆகும்.

"ஆடிப்பாடி அண்ணாமலை கைதொழ
ஓடிப்போம் நமதுள்ள வினைகளே"

என்பது அப்பர் வாக்கு.

"அருணாசல சிவ அருணாசல சிவ
அருணாசலசிவ அருணாசலா!"

"அண்ணாமலையானே! எங்கள் அன்பில் கலந்தோனே!
உண்ணாமுலை நாதா! எங்கள் உள்ளம் நிறைந்தோனே!"

என்று போற்றி செய்து அண்ணாமலையார் அருள் பெறுவோம்.

இங்கு திருவாசகம் முற்றோதல் கோட்டையூர் மெ.க. அன்னசத்திரத்தில் தங்கி இருந்து 16.12.14ஆம் தேதி 100 பக்தர்கள் பங்கு கொண்டு திருவண்ணாமலையார் கோவிலில் அருசோ தலைமையில் திருவாசகம் முற்றோதல் செய்தோம். சத்திர நிர்வாகி வரவேற்றார். நாட்டரசன்கோட்டை மாதவிஆச்சி மதிய உணவு வழங்கினார்கள். சேலம் நகரத்தார், சங்கத் தலைவர் மோகன் நன்றி கூறினார். செயலர் மாணிக்கம் நன்றி கூறினார்.



## 99. திருவாரூர் - 23.11.2014

### திருவாரூர் ஸ்ரீ கமலாம்பிகை உடனாய ஸ்ரீ தியாகராசர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ.)

பஞ்ச பூதத் தலங்களிலே
பார்க்கே திலகம் திருவாரூர்
கஞ்ச மலராள் கமலாம்பாள்
காக்கும் ஆரூர்த் தியாகேசா!
விஞ்சும் நீதி மனுநீதி
வேந்தன் ஆண்ட திருவாரூர்
தஞ்சம் அடைந்தால் பிறப்பில்லை
தலைவா! காப்பாய் ஆரூரா!

### திருவாரூர் நகரத்தார் சங்கத்திற்கு வாழ்த்து

நீரின் வளமும் நிலவளமும்
நிறைந்த பேரூர் திருவாரூர்
சேரின் செல்வம் வளம் சேரும்
சிறந்த நகரத் தார் சங்கம்
ஊரும் புகழ ஒற்றுமையாய்
உயர்வாய்க் கண்ட மாளிகையில்
பேரும் புகழும் பெருகட்டும்
பெருமை யாக வாழியவே!

- அருசோ

## திருவாரூர் - 23.11.2014

(தெ. சொக்கலிங்கம்)

திருவாரூர் அருள்மிகு தியாகராஜ சுவாமி கோவில் மிகப் பழைமை வாய்ந்தது. சப்தவிடங்கத் தலங்களில்

தலைமையானதாய்ப் பஞ்சபூதத் தலங்களுள் பிருதிவித் தலமாய், முக்தித் தலங்களுள் பிறக்க முக்தி தரும் பெருமை பெற்றது. சங்க கால சோழ மன்னர்கள் முடி சூட்டிக் கொள்ளும் எழில் நகரமாகவும் விளங்கும் திருவாரூர் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றாலும் சிறப்பு மிக்கது. மனுநீதிச் சோழனின் அருள் வரலாறு நிகழ்ந்தேறிய திருவாரூர், நால்வரால் பாடப் பெற்றது. முசுகுந்த சோழச் சக்கரவர்த்தி ஆட்சி செய்த ஊர்; திருமகள், இராமர், மன்மதன் வழிபட்ட இடம்; பரவையார் அவதரித்த பதி. சுந்தரர் அருள் வாழ்வு மலர்ந்த திருவாரூரில்தான் சேக்கிழாரின் பெரிய புராண ஆக்கத்திற்குக் காரணமான திருத்தொண்டத்தொகையும் பிறந்தது. "திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லோர்க்கும் அடியேன்" என்று சுந்தரரால் பாடப்பட்ட சிறப்புப் பெற்றது. சுந்தரருக்காகச் சிவபெருமான் பரவையார் வீட்டுக்குத் தூது சென்றார்.

திருவாரூர் வீதிகள் சிவபெருமானின் பாதங்கள் பட்ட சிறப்புப் பெற்றவை. "பரவை மனை மீதில் அன்று ஒருபொழுது தூது சென்ற பரமன் அருளால் வளர்ந்த குமரேசா" என்று பாடுவார் அருணகிரிநாதர். கோவில் 5 வேலி, குளம் 5 வேலி, செங்கழுநீர் ஓடை (நந்தவனம்) 5 வேலி (இறைவனுக்குரிய செங்கழுநீர்ப் பூவிளையும் இடம்) என இங்கு வழங்கப்படுகிறது. திருக்குளம் கமலாலயம் என அழைக்கப்படுகிறது. கமலாலயம் 64 கட்டங்கள் உள்ளது. சக்கந்தியைச் சேர்ந்த உல.க.கண. குடும்பத்தார் திருவாரூர் கமலாலயத் தெப்பக்குளத்தில் மைய மண்டபத்தைக் கட்டியவர்களாவர்.

தேவர்களும் அடியார்களும் சிவானந்தப் பெருங் கடலில் திளைத்திருக்கும் இடம் தேவாசிரிய மண்டபம். சுந்தரர் திருத்தொண்டத்தொகை பாடக் காரணமாக

இருந்த இம்மண்டபத்தை இராஜதானி மண்டபம் அல்லது ஆயிரங்கால் மண்டபம் என்பர். கருணையே வடிவமான வன்மீகநாதர் புற்றிடத்தே தோன்றினார்; மூன்று நந்தி பலிபீடத்துடன் அருள்பாலிக்கிறார்.

வன்மீகநாதர் ஆலயத்தின் வடகிழக்கே ஈசான்ய திசையை நோக்கி உள்ளது கமலாம்பாள் கோவில். கமலாம்பாள் ஞான சக்தியாகத் திகழ்கிறாள். அம்பாளை வணங்கினால் ஞானம் கிட்டும். தியாகராஜர் சோமாஸ்கந்தர் மூர்த்தம். தியாகராஜப் பெருமானின் இடப்பக்கம் கொண்டியம்மை (இச்சாசக்தி) வீற்றிருக்கிறார். பெருமானுக்கும் அம்மைக்கும் இடையே முருகப் பெருமான் வீற்றிருக்கிறார். சாயரட்சை தேவேந்திரன் பூசிப்பதாக ஐதீகமாதலால் அர்ச்சகர் நீண்ட அங்கியுடன் பூஜை செய்வார்.

திருவாரூர் மடப்புரம் ஸ்ரீகுரு தட்சிணாமூர்த்தி மடம் (ஜீவ சமாதி) மிகவும் பிரசித்தி பெற்றது. தெய்வீக அற்புதங்கள் செய்த மகனாகிய தெட்சிணாமூர்த்தியை வழிபட்டால் சகல நலன்களும் பெறலாம். 'ஆரூரைப் புகழ்ந்த வாயால் வேறூரைப் புகழமாட்டேன்' என்பது பழமொழி. திருமாலும் நான்முகனும் சிவபெருமானின் அடி முடியைக் காண்பதற்குப் பரவை வீட்டு வாசற்படியாக இருந்தாலே போதும் என்ற கருத்தில் கவிராஜர் காளமேகம் கீழ்க்கண்ட பாடலைப் பாடுகிறார்.

> "ஆனார் இலையே அயனும் திருமாலும்
> கானார் அடி முன் காண்பதற்கு - மேனாள்
> இரவு திருவாரூரில் எந்தை பிரான் சென்ற
> பரவை திரு வாயிற் படி."

சங்கீத மும்மூர்த்திகளும் அவதரித்த தலம் திருவாரூர். அவர்களுள் தியாகையர் திருவாரூரில் பிறந்து

திருவையாற்றில் சமாதி கூடியவர். திருவாரூரில் பிறந்தவர் தண்டியடிகள். பிறவியிலேயே கண்ஒளி இழந்தவர். திருவாரூர்க் கோயிலின் திருக்குளத்தைத் திருப்பணி செய்தவர். சமணர்களுடன் வாதிட்டு, ஆரூர் அண்ணலார் திருவருளால் கண் பார்வையைப் பெற்றார் என்பது வரலாறு. சென்னை இராஜதானியில் உயர்நீதிமன்றத்தில் பிரதம நீதிபதியாகப் பணியாற்றிய சர்.டி. முத்துசாமி அய்யர் திருவாரூரில் பிறந்தவர். தமிழ்த் தென்றல் திரு.வி.க. இவ்வூரில் பிறந்தவர். திருவாரூர் வி.கல்யாண சுந்தரனார் என்பதன் சுருக்கம் திரு.வி.க.

திருவாரூர்க் கோயிலில் வணங்கித் திருவாரூர் நகரத்தார் சங்கப் புதிய கட்டடத்தில் 23.11.2014-ல் திருவாசகம் முற்றோதல் செய்தோம். நகரத்தார் சங்கத் தலைவர் சுந்தரம் ரெட்டியார் வரவேற்றார். அருசோ தலைமை தாங்கினார். சங்கச் செயலர் ராஜேந்திரன் நன்றி கூறினார்.



# 100. சீர்காழி - 09.03.15

## சீர்காழி ஸ்ரீ திருநிலை நாயகி உடனாய ஸ்ரீ பிரம்மபுரீசர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ.)

சீர்காழித் திருத்தலத்தில் இந்திரன் செய்த
திருத்தவத்தால் அன்றைக்குப் பொன்னி வந்தாள்
சீர்காழித் திருக்குளத்தில் ஞானப் பிள்ளை
திருவாய்மலர்ந் தழுததனால் தேவி வந்தாள்
சீர்காழிக் கோவிலுக்குள் பிரம்மன் வந்து
செய்தவத்தால் திருநிலையும் ஈசன் வந்தான்!
சீர்காழிப் பெருமானே! பிரம்ம புரீசா!
திருவாசகப் பிரியோனே! காப்பாய் அப்பா!

## சீர்காழி - 09.03.15

(தெ. சொக்கலிங்கம்)

சீர்காழி நாகை மாவட்டத்தைச் சேர்ந்தது. சிதம்பரத்தி லிருந்து சுமார் 20 கி.மீ. தொலைவில் உள்ளது. தருமபுர ஆதீனத்திற்குச் சொந்தமான ஸ்ரீ பிரம்மபுரீஸ்வரர் திருக்கோவில் இங்குள்ளது. இதை சட்டைநாத சுவாமி தேவஸ்தானம் என்றும் அழைப்பார்கள். ஸ்ரீதிருநிலை நாயகி என்பது அம்பாள் திருநாமம். இக்கோயிலில் உச்சியில் சட்டைநாதர் சந்நிதி, உமாமகேஸ்வரர் சந்நிதி ஆகியவை உள்ளன. திருஞான சம்பந்தருக்கு ஞானப்பால் கொடுத்த தலம்.

**இத்தலத்திற்குப் பன்னிரண்டு பெயர்கள் உண்டு. அவை.**

1. சீர்காழி, 2. கழுமலம், 3. கொச்சைவயம், 4. சிரபுரம், 5. தோணிபுரம், 6. பிரம்மபுரம், 7. புகலி, 8. புறவம், 9. பூந்தராய், 10. வெங்குரு, 11. வேணுபுரம், 12. சண்பைநகர். பிரமன், குரு, ராகு, கண்ணபிரான், ஸ்ரீகாளி, பராசரர், உரோமச முனிவர் வழிபட்ட தலம்.

தெற்குக் கோபுர வாசல் அருகே அஷ்ட யோக பைரவர்கள் உள்ளனர். வெள்ளிக்கிழமை மாலை மற்றும் அஷ்டமி நாட்களில் விசேஷ பூஜைகள் நடைபெறும். திருமுலைப்பால் திருவிழா விசேடம். தமிழ் மூவராகிய முத்துத்தாண்டவர், மாரி முத்தாபிள்ளை, சீர்காழி அருணாசலக் கவிராயர் ஆகியோர் வாழ்ந்த பதி. இராம நாடகக் கீர்த்தனைகள் பாடிய சீர்காழி அருணாசலக் கவிராயர் தில்லையாடியில் பிறந்து இவ்வூரில் வாழ்ந்தவர். 'தோடுடைய செவியன்' என்று தொடங்கும் திருஞான சம்பந்தரின் தேவாரப் பாடல் இத்தலத்தில் பாடியது; ஞானசம்பந்தரது முதல் பாட்டாகும். சம்பந்தப் பெருமான் பாடிய 'மண்ணில் நல்ல வண்ணம்' என்று தொடங்கும் பாடல் மங்கலப் பாடலாகத் திகழ்கிறது. 'பால் நினைந்து ஊட்டும் தாயினும்' என்று தொடங்கும் திருவாசகப் பாடல் உலகப் புகழ்பெற்றது. அப்பாடலை மாணிக்க வாசகப் பெருமான் இத்தலத்தில் தான் பாடினார். சீர்காழி எல்லையில் அமைந்துள்ள திருக்கோலக்கா என்ற தலத்தில் இறைவன் திருஞானசம்பந்தருக்கு பொற்றாளம் அளித்தார். பக்திப் பாடல்கள் மற்றும் திரைப்படப்பாடல்களைப் பாடி, தன் வெண்கலக் குரலால் அனைவர் கவனத்தையும் ஈர்த்த சீர்காழி கோவிந்தராஜன் இவ்வூரைச் சேர்ந்தவர்.

சீர்காழிக் கோவிலில் 9.3.15–ல் தரிசித்து 200 பேர் திருவாசகம் முற்றோதல் நிகழ்த்தினோம். சீர்காழி பக்தர்கள் சிலரும் எம்முடன் பாடினர். காசி ஸ்ரீ இராகவேந்திரன் ஏற்பாடு – அருசோ தலைமை தாங்கிச் சிறப்புரை ஆற்றினார்.



# 101. சிதம்பரம் - 10.03.2015

## சிதம்பரம் ஸ்ரீ நடராஜர் துதி

(பொற்கிழிக் கவிஞர் அரு.சோ.)

தில்லை அம்பல நடராஜா!
திருவே! எங்கள் சிவகாமி!
இல்லை என்றே சொல்லாமல்
எல்லாம் தந்தாய் நடராஜா!
கல்லாய் இருந்தோம்; உன்முன்னே
கனிவாய் வாசகம் பாடியதால்
சொல்லால் உயர்ந்தோம்; தேவசபை
ஜோதீ! காப்பாய் நடராஜா!

## சிதம்பர - 10.03.15

(தெ. சொக்கலிங்கம்)

சிதம்பரம் கடலூர் மாவட்டத்தில் உள்ளது. கோயில் என்றாலே சிதம்பரம் தான்; திருமுறை ஆசிரியர்கள் சிதம்பரம் தலத்தைக் கோயில் என்றே குறிப்பிடுகிறார்கள். பெரும்பற்றப்புலியூர் என்ற பெயரும் உண்டு. தில்லை என்று கூறுவார்கள். பஞ்சபூதத் தலங்களில் ஆகாயத் தலமாக சிதம்பரம் திகழ்கிறது. உலகமே போற்றி வியக்கும் நடராஜப் பெருமான் இத்தலத்தில் எழுந்தருளி உள்ளார். ஐந்து தலங்களில் உறையும் சிவபெருமானுக்கு ஐந்து சபைகள் உண்டு. அவை திருவாலங் காட்டில் ரத்ன சபையும், சிதம்பரத்தில் கனகசபையும், மதுரையில் வெள்ளி சபையும், திருநெல்வேலியில் தாமிரசபையும், குற்றாலத்தில் சித்திர சபையும் ஆகும். இந்த ஐந்து சபைகளில் நடனமாடிய ஈசன் ஐந்து வகையான நடனங்களை ஆடியுள்ளார். அதில் சிதம்பரத்தில் ஆடியது ஆனந்தத் தாண்டவம் ஆகும். சிதம்பரம்

நடராஜர் கோயிலிலே ஐந்து சபைகள் உண்டு. அவை சிற்சபை, கனகசபை, நடனசபை, தேவசபை, ராஜசபை ஆகும். ஆனித்திருமஞ்சனமும் ஆருத்ரா தரிசனமும் சிறப்பான விழாக்கள் ஆகும். நான்கு ராஜ கோபுரங்கள் வழியாக சமயக் குரவர் நால்வரும் வந்து நடராஜப் பெருமானை வணங்கினார்கள். நடராஜருக்கு வருடத் திற்கு 6 நாட்கள் புனித அபிடேகம் நடைபெறுகிறது. ஸ்படிக லிங்கமும் ரத்தின சபாபதியும் இக்கோயிலில் உள்ள அரிய விக்கிரகங்களாகும். சிதம்பர ரகசியம் நடராசருக்கு அடுத்தபடியாகக் கோயிலில் காண வேண்டிய ஒன்று.

வியாக்ரபாதர் பூசித்ததால் சித்–அம்பரம்– அறிவு வெட்ட வெளி என்று பொருள். மாணிக்கவாசகர் முக்தி பெற்ற தலம். வியாக்ரபாதர், பதஞ்சலி, உபமன்யு, வியாசர், சுகர், நீலகண்டர், திருநாளைப்போவார், கூற்றுவ நாயனார், கணம்புல்ல நாயனார், சந்தனாசாரியார்கள் முக்திபெற்ற தலம். தில்லை மூவாயிரவருள் ஒருவரே நடராஜர் என்றும் சொல்லுவார்கள்.

கோவிலில் உள்ள ஆயிரக்கால் மண்டபத்தில் பெரிய புராணம் அரங்கேற்றம் செய்யப்பெற்றது. சிதம்பரம் மெய்யப்பன் தமிழ் ஆய்வகத்தின் சார்பாக பேராசிரியர் பதிப்புச் செம்மல் ச. மெய்யப்பன் ஏற்பாட்டில் சிதம்பரம் ஆயிரக்கால் மண்டபத்தில் அருசோ இராமாயணம் 2001–ல் ஒருவாரம் தொடர்சொற்பொழிவு நிகழ்த்தினார். மெய்ப்பன் தமிழ் ஆய்வகம் சார்பில் அருசோவுக்கு 'பல்துறைச் செம்மல்' பட்டம் வழங்கப் பெற்றது. கோவில் தீட்சதர்கள் முதல் மரியாதை செய்தனர்.

சிதம்பரத்தில் மாணிக்கவாசகர் தங்கியிருந்த இடம் மாணிக்கவாசகர் பர்ணசாலை என்று அழைக்கப்

படுகிறது; இன்றும் இருக்கிறது. "தில்லைபாதி வாசகத்தில்; பிள்ளைபாதி புராணத்தில்" என்ற பழமொழி உண்டு. மாணிக்கவாசகர் பாடிய திருவாசகம் பதிகங்கள் 51–ல் பாதி தில்லையில் பாடியது. அதுபோல் பெரிய புராணத்தில் திருஞான சம்பந்தர் வரலாறு 1000 பாடல் களுக்கு மேல். மாணிக்கவாசகர் பாடிய திருவாசகம், திருக்கோவையார் பாடல்களை இறைவனே பிரதி எடுத்திருக்கிறார். சிதம்பரம் நடராஜர் கோவிலை தில்லைவாழ் அந்தணர்களாகிய தீட்சதர்கள் நிருவகித்து வருகின்றனர். நடராஜர் கோவிலில் இருந்துதான் தேவாரப் பாடல்கள் அனைத்தும் கிடைத்தன.

இராஜராஜ சோழ மன்னன் அவற்றைத் தேடிக் கொடுத்தான். அவன்தான் தேவாரம் பாடும் முறையை வகுத்துத் தந்தான்.

சிதம்பரம் கோவிலில் தேவசபை முன் 10.03.15ல் 300 பேர் திருவாசகம் முற்றோதல் செய்தோம். பிறகு சிதம்பரம் நகரத்தார் சங்கத்தலைவர் தலைமையில் காரைக்குடி மெ.செ.மெ. மண்டபத்தில் நிறைவு விழா நிகழ்ந்தது. அனைவர்க்கும் அருசோ தலைமை தாங்கிப் பட்டங்கள் வழங்கி ஆசி கூறினார். காசிஸ்ரீ இராகவேந்திரன் தக்க ஏற்பாடுகள் செய்து நன்றி கூறினார்.



## 102. திருவாசகம் முற்றோதல் ஓர் கண்ணோட்டம்

(திருவாசக மணி பள்ளத்தூர் சோலை இராமசாமி செட்டியார்)

திருவாசகம் முற்றோதல், தலைவராகவும் குருவாகவும் திரு.அரு.சோ. ஐயா இருந்து வருகிறார்கள், இதன் முக்கியஸ்தர்களாக ஈப்போ.நா, சொக்கலிங்க செட்டியார்; மாணிக்கம் செட்டியார்; முத்தையாசெட்டியார், ஆகியவர்கள் இருந்து வருகிறார்கள், 96 ஊருக்கும் நான்கு ஆண்டுக்கு முன் திட்டமிட்டு எல்லா ஊர்களுக்கும் சென்று முற்றோதல் நடத்தி உள்ளது பெருமைக்குரிய விசயம். எல்லா ஊரிலும் நல்ல வரவேற்பு செய்து, உணவு ஏற்பாடு செய்துள்ளார்கள். நிறைவாக விடைபெறும் போது நினைவுப்பொருள் வழங்கியுள்ளார்கள். அது தவிர 9 நகரக் கோவில்கள், கோவிலூர் மடம், குன்றக்குடி, துலாவூர் ஆகிய இடங்களிலும் முற்றோதல் நடை பெற்றது. திருவாரூர், சீர்காழி, சிதம்பரம், உத்தர கோசமங்கை, ஆவுடையார் கோவில், திருக்கழுக்குன்றம், திருவண்ணாமலை போன்ற பாடல்பெற்ற ஸ்தலங்களில் முற்றோதல் சிறப்பாய் நடைபெற்றது. நிறைவாக சிதம்பரத்தில் நடராஜர் சந்நிதியில் முற்றோதல் நடைபெற்றது, பெரும் பாக்கியமாக கருத வேண்டும். அன்று மாலை மெ.செ. மடத்தில் சிதம்பரம் நகரத்தார் உணவு ஏற்பாடு செய்திருந்தார்கள். மாலையில் முற்றோதலில் கலந்துகொண்டவர்களைப் பாராட்டி, பாராட்டுப் பத்திரம் வழங்கப்பட்டது. ஊர் திரும்புகையில் சிதம்பரம் நகரத்தார் உணவு கட்டிக் கொடுத்து வழி அனுப்பியது மிகவும் சவுகரியமாக

இருந்தது. திருவண்ணாமலையில் மெ.க.சத்திரத்தார் தங்கும் வசதி செய்து உணவு ஏற்பாடு செய்திருந்தார்கள். திருவாரூரில் நகரத்தார் சங்கத்தார் உணவு ஏற்பாடு செய்திருந்தார்கள். ஆவுடையார் கோவிலில் நேமத்தான் பட்டி சத்திரம் நகரத்தார் உணவு ஏற்பாடு செய்து பொன்னாடையும் அணிவித்தார்கள்.

முற்றோதல் செய்வதால், இல்லங்களில் வேள்வி, அலைபாய்ந்து வீடு புனிதமாகிறது. பாடுவோருக்கும் கேட்போருக்கும் மனது உற்சாகம் ஏற்பட்டுத் துன்பங்கள் அகலும். பொருள் உணர்ந்து இசையுடன் முற்றோதல் செய்யலாம். இசை இல்லாமலும் வாய்விட்டுப் படிக்கலாம். கேட்பவர்களுக்கு மனம் மகிழ்ச்சி அடையும்; முற்றோதல், திருமணம், புதுமனை புகுவிழா, மணிவிழா, 80ஆம் ஆண்டு நிறைவு விழா, பிறந்த நாள் விழா ஆகியவற்றிற்கு ஏற்பாடு செய்து வருகிறார்கள். நாட்டார் வீடுக்ளிலும் ஏற்பாடு செய்கிறார்கள். தேவகோட்டையில் ஞானதான சபை, காரைக்குடியில் திருநாவுக்கரசர் மன்றம், பள்ளத்தூரில் மாணிக்கவாசகர் மன்றம், சென்னை திருவொற்றியூரில் திலகவதியார் திருவாசகக் குழு மூலமாக முற்றோதல் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

இராமாயணத்தில் குகன் சந்திப்பு போல எங்களுக்குத் திருச்சி தாயுமானவர் ஐயா, திருக்கழுக்குன்றம் தாமோதர ஐயா அவர்களின் சந்திப்பு எல்லோரின் உள்ளத்தையும் கவர்ந்தது. இவர்களுடைய பாடல் இனிமையாகவும் இருக்கும். எல்லோரையும் உணர்ச்சிப்பட வைத்துவிடும். நம் மனம் இறைவனிடமே சென்றுவிடும்; கவலைகள் தீரும், துன்பம் அகலும். இன்பம் கிட்டும், சுபிட்சமாக

24

வாழலாம். மேற்படி குடும்பத்தார், சுற்றத்தார், எல்லா நலமும் வளமும் பெறுவர். திரு.அரு.சோ.ஐயா அவர்கள் பல்வேறு நடைப்பயணம் மேற்கொண்டவர்கள். இராமேஸ்வரம், காசி நடைப்பயணம் சிறப்பான ஒன்று. கடல் கடந்து ஆன்மீகத்தையும், சைவத்தையும் பரப்பியவர்கள். இராமாயணம், மகாபாரதம், கந்தபுராணம், பெரியபுராணம், திருவிளையாடல் புராணம், பாகவதம், சிவமகாபுராணம் பற்றிப் பல்வேறு இடங்களில் தொடர் சொற்பொழிவு செய்துள்ளார்கள். இவர்கள் சிறந்த அனுபவ ஆன்மிக வாதி, மாமனிதரும் ஆவார்கள். எல்லோரையும் அன்பாகவும் கோபம் இல்லாமலும் உற்சாகப்படுத்துவதிலும் அரவணைப்பதி லும் மிகத் தேர்ந்தவர்கள்; காரியங்களை நல்லமுறையில் நிறைவேற்றுபவர்கள். ஆகவே 96 ஊர் திருவாசக முற்றோதல் வேள்வி 4 ஆண்டுகளில் சிறப்பாக நிறைவேறியது.



# 103. நன்றி உரை

## (திருவாசக மணி கா. சீதாலெட்சுமி)

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் - உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு."

'திருநாவுக்கரசர் இறைபணி மன்றத்தின்' சார்பாக எங்களை 96 ஊர்களுக்கும் முற்றோதல் நடத்த அழைத்துச் சென்ற அண்ணன்களுக்கும் நன்றி தெரிவிக்கும் மடல். 96 ஊரின் பெயரோ, எது எத்திசை என்றோ எங்களுக்குத் தெரியாது. ஒருசில ஊர்களுக்கு விசேஷங்களுக்குச் சென்றிருக்கிறோம். அவ்வளவுதான். நாளை என்ன நடக்கப் போகிறது என்றே தெரியாத இந்தக் காலத்தில் 96 ஊர்களுக்கும் 4 வருட பயணத் திட்டமாய் அழகாய் வகுத்துக் கொடுத்த தலைவர் பொற்கிழிக் கவிஞர் அய்யா அருசோ அவர்களுக்கு எங்கள் முதல் நன்றி. இப்படி ஒரு திட்டத்தில் அவர்களோடு நாங்களும் இருந்தோம் என்பதில் எங்களுக்கு மிகப் பெருமையாக இருக்கிறது..

அவர்கள் வகுத்துக் கொடுத்த திட்டத்தின்படி சொன்ன தேதியில் அழகாய் நடத்திக் காட்டிய அமைப்பாளர் மாணிக்கம் அய்யாவுக்கு அடுத்த நன்றி. யாரை – எவ்விதம் தொடர்பு கொள்வார்? எப்படி ஏற்பாடு செய்வார்? – யாருக்கும் தெரியாது. சொன்ன தேதியில் போய் நின்றால் எல்லாம் தயாராக இருக்கும். இப்படிப்பட்ட அருமையான – யாருக்கும் எவ்வித இடைஞ்சலும் இல்லாமல் செய்த அண்ணன் அமைப்பாளராய் கிடைத்ததற்கு இறைவனுக்கு நன்றி.

எங்கள் மன்றத்தின் தலைவராக இருந்து, எங்களை ஒரு குழுவாக ஆக்கி, இத்திட்டத்தின் தொடக்கத்தில் இருந்து எங்களை வழி நடத்திச் சென்ற ஈப்போ நாராயணஅய்யா இப்போது இல்லாதது எங்களுக்கு மாபெரும் இழப்பு – சோகம். ‘ஆத்தா’ என்ற வார்த்தைக்கு அடுத்த வார்த்தை சொல்லாத அமரரான எங்கள் நாராயண அய்யாவுக்கும் நன்றி.

அய்யாவுக்கு ஏற்ற மனைவியாய் இருந்து, ஞானசூன்யமான எங்களுக்கு ராகம், தாளம் எல்லாம் சொல்லிக் கொடுத்து வழிப்படுத்திக் கொண்டிருக்கும் பாலாம்பாள் ஆச்சிக்கும் நன்றி.

96 ஊர்களுக்கும் தவறாமல் கலந்து கொண்ட எங்கள் தலைமைப் பாடகர் சொக்கலிங்க அண்ணனுக்கும் நன்றி. தேதிகளை – இடங்களை தவறாமல் தொலைபேசியில் தெரியப்படுத்துவார்கள்.

‘காசிஸ்ரீ’ ‘அருசோ’ அய்யாவின் தொடர்பு எங்களுக்குக் கிடைத்ததின் காரணமாகத் திருவாசகத்தின் பெருமையை உணர்ந்தோம். நாங்கள் எப்படிப் பாடினாலும் அய்யா சொல்லுவார்கள். ‘அருமையாப் பாடுறீங்க. ஆண்கள் – பெண்கள்லாம் எப்படித் தெரியுமா பாடுறீங்க. இந்த – இந்தப் பதிகம் பாடும்போது நான் என்னையே மறந்தேன்’. என்று; ‘நல்லாருக்குன்னு சொன்னா ஏறிக்கும். நாம ஏன் சொல்லணும்’ என்று நினைப்பவர்கள் மத்தியில் பாராட்டை ஒளித்து வைக்கத் தெரியாத பண்பாளர் எங்கள் அய்யா அருசோ. ஒவ்வொரு கோயிலின் பெருமையை – வரலாற்றை – சிறப்பை எடுத்துச் சொல்லி அழகாய்ப் பாடல் வடித்துக்

கொடுத்தார்கள். அருளாளர்களால் பாடல்பெற விட்டுப்போன கோவில்கள்கூட அருசோ அய்யாவால் பாடல் பெற்றுவிட்டது.

நாங்கள் தான் சமத்திகள் என்றிருந்தால் – குழுவில் வந்து பார்த்தால் ஒவ்வொருவரும் மெத்தச் சமர்த்திகளாய் – கட்டிச் சமர்த்திகளாய் – கெட்டி சமர்த்திகளாய் இருக்கிறார்கள். இப்படிப்பட்ட ஆச்சிகளையும் அருமையான அண்ணன்களையும் ஒரு குடும்பமாக ஏற்படுத்திக் கொடுத்த திருவாசகப் புத்தகத்துக்கும் மாணிக்க வாசகருக்கும் தலையாய நன்றிகள் கோடி கோடி! நம் உறவுகளைக் கூட நாம் எப்போதோ ஒருமுறை சந்திப்போம், ஆனால் தினந்தினம் சந்திக்கும் கூடப்பிறக்காத உறவுகளாகிய உங்கள் அனைவருக்கும் நன்றிகள் பல.

முதன் முதலில் என்னை முற்றோதலுக்கு அழைத்துச் சென்ற விசாலாட்சி திருமண மண்டப உமையாள் ஆச்சிக்கு சிரம் தாழ்ந்த நன்றி. என் முதல் முற்றோதல் அரிமளத்தில் நடந்தது. அதனால் தானோ என்னவோ என் பெண்ணை அரிமளத்தில் கொடுக்க நேர்ந்தது. அருமையான அரிமள மாப்பிள்ளை கிடைத்தார்.

சென்ற ஊர்களிலெல்லாம் எங்களுக்கு அருமையான வரவேற்பு; உபசரிப்பு; அன்பளிப்பு என மிக அருமையாக இருந்தது. 96 ஊர்களிலும் எங்களுக்கு உணவளித்து, இடம் அளித்து, அன்பளிப்பு செய்த அனைத்து அண்ணன்களுக்கும் ஆச்சிகளுக்கும் நன்றிகள் பல. அனைத்து தெய்வங்களுக்கும் நன்றாக அலங்காரம் செய்து எங்களுக்கு தரிசனம் செய்வித்த எல்லா

குருக்களய்யாக்களுக்கும் கோவில் சிப்பந்திகளுக்கும் வாகன ஓட்டிகளுக்கும் அனைவருக்குமே நன்றி – நன்றி – நன்றி.

இதை சிதம்பரத்தில் வாசிக்கச் சொன்ன சொக்கலிங்க அண்ணன், ஊக்குவித்த பாலாம்பாளாச்சி, பாராட்டிப் பொன்னாடை போர்த்திய அருசோ அய்யா, வரிக்கு வரி கைதட்டிய அனைத்து நல்ல உள்ளங்களுக்கும், வாசித்த உடன் பாராட்டிக் கைகுலுக்கிய அனைத்து ஆச்சிகள், அண்ணன்களுக்கும் நன்றிகள் பல. மனம் கனக்கிறது, கண்கள் பனிக்கின்றன. வாழ்க பல்லாண்டு!! நன்றி.



# 104 திருவாசக முற்றோதல் உறுப்பினர்கள்

## 96. ஊர்ப் பாதயாத்திரைக் குழுவினர்

| வ.எண் | சிவனடியாரின் பெயர் | சொந்த ஊர்இருப்பு |
|---|---|---|
| 1. | பழ.மாணிக்கம் | க. முத்துப்பட்டணம், சென்னை. |
| 2. | ந.இராமநாதன் | பள்ளத்தூர், ஸ்ரீராம் நகர். |
| 3. | வ.செந்தில்குமரப்பன் | பலவான்குடி. |
| 4. | சுப.லெட்சுமணன் | தேவகோட்டை, பட்டுக்கோட்டை |
| 5. | ந. தங்கராஜன் | காரைக்குடி. |
| 6. | டி.சி.தேனப்பன் | கானாடுகாத்தான். |
| 7. | இராம.நாராயணன் | க.முத்துப்பட்டணம், செக்காலை. |
| 8. | எஸ். சிவனாந்தம் | உறங்கான்பட்டி. |
| 9. | அரு.பழநியப்பன் | காரைக்குடி, நியூடவுன். |
| 10. | சி.இராமையா | கானாடுகாத்தான், சென்னை. |
| 11. | சுப. சாத்தப்பன் | பள்ளத்தூர், சென்னை. |

## திருநாவுக்கரசர் இறைபணி மன்றம் (ஆண்கள்)

| வ.எண் | சிவனடியாரின் பெயர் | சொந்த ஊர்இருப்பு |
|---|---|---|
| 1. | அரு.சோமசுந்தரன் | தேவகோட்டை, காரைக்குடி. |
| 2. | ஈப்போ நாராயணன் | காரைக்குடி. |
| 3. | மு. அருணாசலம் | கண்டனூர், காரைக்குடி, செக்காலை |
| 4. | தெ. சொக்கலிங்கம் | காரைக்குடி, கல்லுக்கட்டி. |
| 5. | சீனி.முத்தையா | கல்லல், காரைக்குடி. |
| 6. | வெ.இராம. வயிரவன் | கண்டனூர், காரைக்குடி. |

| வ.எண் | சிவனடியாரின் பெயர் | சொந்த ஊர்இருப்பு |
|---|---|---|
| 7. | சித.மு. சபாரெத்தினம் | இராயவரம், காரைக்குடி. |
| 8. | இராம.இராமநாதன் | காரைக்குடி. |
| 9. | மு.வெ.சண்முகம் | ஓ.சிறுவயல், காரைக்குடி. |
| 10. | நா.நாச்சியப்பன் | ஆ. முத்துப்பட்டணம், காரைக்குடி. |
| 11. | முரு. அருணாசலம் | காரைக்குடி. |
| 12. | மு. நாச்சியப்பன் | கல்லல், காரைக்குடி. |
| 13. | சுப.அண்ணாமலை | காரைக்குடி, நா.புதூர். |
| 14. | உ.தட்சணாமூர்த்தி | தேவகோட்டை. |
| 15. | மெ.அழ.முருகப்பன் | கண்டரமாணிக்கம், காரைக்குடி. |
| 16. | கோ.இராமு | காரைக்குடி. |
| 17. | இராம.இராமசாமி | க.முத்துப்பட்டணம். |
| 18. | நா.வீர.நாராயணன் | க.முத்துப்பட்டணம். |
| 19. | இராம.சுந்தரம் | காரைக்குடி. |
| 20. | அரு.சபாரெத்தினம் | காரைக்குடி. |
| 21. | கும.சுப. குமரப்பன் | பலவான்குடி. |
| 22. | K.OL.M.சுப்பரமணியன் | பாகனேரி. |
| 23. | இராம.கண்ணப்பன் | அரண்மனை சிறுவயல். |
| 24. | அழ.மெ. மெய்யப்பன் | காரைக்குடி. |
| 25. | இராம. நாராயணன் | பள்ளத்தூர். |
| 26. | அழ.மாணிக்கம் | தேவகோட்டை, காரைக்குடி. |
| 27. | நா.வீர.சுப்பிரமணியன் | க.முத்துப்பட்டணம். |

| வ.எண் | சிவனடியாரின் பெயர் | சொந்த ஊர்இருப்பு |
|---|---|---|
| 28. | வி.இராஜேந்திரன் | காரைக்குடி. |
| 29. | சுப.செட்டியப்பன் | பாகனேரி, கோட்டையூர். |
| 30. | பெரி.முத்துக்கருப்பன் அண்ணாமலை | காரைக்குடி. |
| 31. | நா.மெய்யப்பன் | கல்லுப்பட்டி, காரைக்குடி. |
| 32. | குப.த. கண்ணன் | காரைக்குடி. |
| 33. | கதி. வள்ளியப்பன் | கல்லல், காரைக்குடி. |
| 34. | சொ.லெட்சுமணன் | கண்டனூர், காரைக்குடி. |
| 35. | ஜோதிராஜன் | நாட்டரசன்கோட்டை, காரைக்குடி. |
| 36. | நா.முருகப்பன் | காரைக்குடி. |
| 37. | கரு.அழகப்பன் | கீழச்சிவல்பட்டி, காரைக்குடி. |
| 38. | நா.ப. மாணிக்கம் | காரைக்குடி. |
| 39. | வீர. லெட்சுமணன் | காரைக்குடி. |
| 40. | வீர. மெய்யப்பன் | காரைக்குடி. |
| 41. | அ.சி.கதிரேசன் | காரைக்குடி. |
| 42. | வீர.முருகப்பன் | பள்ளத்தூர். |
| 43. | மு.அண்ணாமலை | காரைக்குடி. |
| 44. | இராம.நாகப்பன் | காரைக்குடி. |
| 45. | வ.பழனியப்பன் | கல்லல். |
| 46. | கண.கரு. சிங்காரம் | அரண்மனை சிறுவயல். |
| 47. | நா.அழகப்பன் | காரைக்குடி. |

| வ.எண் | சிவனடியாரின் பெயர் | சொந்த ஊர்இருப்பு |
|---|---|---|
| 48. | சித. முத்தையா | மிதிலைப்பட்டி, காரைக்குடி. |
| 49. | எஸ்.கருப்பன்செட்டி | காரைக்குடி. |
| 50. | சி.வள்ளியப்பன் | காரைக்குடி. |
| 51. | மணிகண்டன் | கீழப்பூங்குடி. |
| 52. | KR.N. இராஜேந்திரன் | கல்லல், காரைக்குடி. |
| 53. | காடப்பா இராமச்சந்திரன் | ஆத்தன்குடி. |
| 54. | கே. இளையபெருமாள் | மதுரை, பொன்அமராவதி. |
| 55. | எஸ். இராமசாமி | பள்ளத்தூர். |
| 56. | சிவ.சு.சுந்தர மகாலிங்கம் | பள்ளத்தூர். |
| 57. | கே. கண்ணன் | காரைக்குடி. |
| 58. | A.R. ரெகுநாதன் | திருவாடானை, காரைக்குடி. |
| 59. | V. சண்முகம் | காரைக்குடி. |
| 60. | R.M.இளங்கோவன் | கீழச்சிவல்பட்டி, சிதம்பரம் |
| 61. | M. அழகப்பன் | பள்ளத்தூர். |
| 62. | C.T. பழநியப்பன் | பள்ளத்தூர். |
| 63. | AR.RM.VR. இராமசாமி | |
| 64. | L.P. பழநியப்பன் | கோட்டையூர் |
| 65. | க.சி.ஆ.சின்னசாமி | பள்ளத்தூர் |

# திருநாவுக்கரசர் இறைபணி மன்றம் (பெண்கள்)

| வ.எண் | சிவனடியாரின் பெயர் | சொந்த ஊர்இருப்பு |
|---|---|---|
| 1. | சோம.நீலா (அருசோ) | காரைக்குடி. |
| 2. | நா.பாலாம்பாள் (ஈப்போ நா) | காரைக்குடி. |
| 3. | அரு.மாணிக்கவல்லி (மு.அருணா) | கண்டனூர், காரைக்குடி. |
| 4. | சொ.மீனாட்சி (தெசொ) | காரைக்குடி. |
| 5. | வயி. வள்ளியம்மை (வயிரவன்) | கண்டனூர். |
| 6. | ச. கமலாசபா (சபா) | இராயவரம், காரைக்குடி. |
| 7. | இராம.உமையாள் (இராமநாதன்) விசாலாட்சி மண்டபம் | காரைக்குடி. |
| 8. | ச. அலர்மேலு (சண்முகம்) | ஓ.சிறுவயல், காரைக்குடி. |
| 9. | ச. தேனம்மை (நாச்சியப்பன்) | ஆ.முத்துபட்டணம், காரைக்குடி. |
| 10. | அரு. மீனாள் (அருணா) | காரைக்குடி. |
| 11. | நா.மணிமேகலை (நாச்சியப்பன்) | கல்லல், காரைக்குடி. |
| 12. | அண.நாச்சம்மை (சுப.அண) | காரைக்குடி. |
| 13. | தெ. செல்லம்மை (உ.தெட்சிணா) | தேவகோட்டை. |

| வ.எண் | சிவனடியாரின் பெயர் | சொந்த ஊர்இருப்பு |
|---|---|---|
| 14. | முரு.தேனம்மை<br>(முருகப்பன்) | கண்டரமாணிக்கம், காரைக்குடி. |
| 15. | அழ.உமையாள்<br>(அழகப்பன்)<br>1000 ஜன்னல் | காரைக்குடி. |
| 16. | நா. தையல்நாயகி<br>(நாராயணன்) | க. முத்துப்பட்டணம், செக்காலை. |
| 17. | மெ. வள்ளியம்மை<br>(மெய்யப்பன்)<br>பாம்பே டையிங் | காரைக்குடி. |
| 18. | மீ. மெய்யம்மை<br>(மீனவன்) | கண்டரமாணிக்கம், காரைக்குடி. |
| 19. | வே. கண்ணாத்தாள்<br>(வேலாயுதம்) | கொ. அழகாபுரி, காரைக்குடி. |
| 20. | சா. விசாலாட்சி<br>(கொரட்டியார்) | காரைக்குடி. |
| 21. | முரு. அலர்மேலு<br>(தெ.சொ) | காரைக்குடி. |
| 22. | கா.சீதாலெட்சுமி | காரைக்குடி. |
| 23. | பி. சகுந்தலா தேவி | காரைக்குடி. |
| 24. | இராம. உமையாள்<br>(உமா) | கோட்டையூர், காரைக்குடி. |
| 25. | சொ.அழ.அலர்மேலு<br>(கொரட்டியார்) | காரைக்குடி. |
| 26. | மெ.வள்ளிக்கண்ணு<br>(மெய்யப்பா) | கல்லுப்பட்டி, காரைக்குடி. |
| 27. | முத்து. லெ.வள்ளியம்மை<br>(பாட்டுக்காரர்) | காரைக்குடி. |

| வ.எண் | சிவனடியாரின் பெயர் | சொந்த ஊர்இருப்பு |
|---|---|---|
| 28. | சுப.தெய்வானை | கல்லல், காரைக்குடி. |
| 29. | நா. வள்ளிக்கண்ணு | பி. அழகாபுரி. |
| 30. | அழ. அலர்மேலு | காரைக்குடி. |
| 31. | மு. மீனாட்சி (சீனி முத்தையா) | கல்லல், காரைக்குடி. |
| 32. | கண. ருக்குமணி (கண்ணப்பா) | அரண்மனை சிறுவயல், காரைக்குடி. |
| 33. | மா.மீனாள் (மாணிக்கம்) | காரைக்குடி. |
| 34. | சொ. வள்ளியம்மை | காரைக்குடி. |
| 35. | சொ.பாலசரஸ்வதி (சொக்கு) பூங்குடியார் வீடு | காரைக்குடி. |
| 36. | எம்.வசந்தாள் | காரைக்குடி. |
| 37. | செ.மீனாள் (செட்டியப்பன்) | பாகனேரி, கோட்டையூர். |
| 38. | க.அலர்மேலு | காரைக்குடி. |
| 39. | வ. சாரதா (வள்ளியப்பன்) | காரைக்குடி. |
| 40. | எம். விசாலாட்சி | காரைக்குடி. |
| 41. | இராம. மீனாள் (இராமசாமி) | க.முத்துப்பட்டணம். |
| 42. | லெ. உண்ணாமலை லெட்சுமணன்) | கண்டனூர், காரைக்குடி. |
| 43. | வ. நாச்சம்மை (Dr. வள்ளியப்பன்) | கல்லல். |

| வ.எண் | சிவனடியாரின் பெயர் | சொந்த ஊர்இருப்பு |
|---|---|---|
| 44. | ஜோ. நாகம்மை (ஜோதிராஜன்) | நாட்டரசன் கோட்டை, காரைக்குடி. |
| 45. | தி.மீனாட்சி | கோட்டையூர். |
| 46. | Dr. வள்ளிசொக்கலிங்கம் | காரைக்குடி. |
| 47. | நா.லெட்சுமி | நேமத்தான்பட்டி, காரைக்குடி. |
| 48. | ச.தெய்வானை | நாட்டரசன் கோட்டை, காரைக்குடி. |
| 49. | நா.மெய்யம்மை | கண்டரமாணிக்கம். |
| 50. | எஸ்.முத்துக்கருப்பாயி (சபாரெத்தினம்) | காரைக்குடி. |
| 51. | அழ. கல்யாணி (அழகப்பன்) (பாம்பே டையிங்) | காரைக்குடி. |
| 52. | பழ. வள்ளியம்மை | நாச்சியார்புரம். |
| 53. | ஆர். சாந்தாபாய் (இராமலிங்கம்) | காரைக்குடி. |
| 54. | அழ. உமையாள் | காரைக்குடி. |
| 55. | அரு. வள்ளியம்மை | காரைக்குடி. |
| 56. | நா.மீனாட்சி | கோட்டையூர். |
| 57. | இராம.பொன்முடி (அருசோ) | பள்ளத்தூர், காரைக்குடி. |
| 58. | நா.மெய்யம்மை | காரைக்குடி. |
| 59. | இராம. சுசீலா | வெற்றியூர். |
| 60. | மெ. உமையாள் | காரைக்குடி. |
| 61. | சொ.மீனாட்சி | புதுவயல். |
| 62. | பெரி. திருநிலை | காரைக்குடி. |
| 63. | இராம. சிகப்பி | தேவகோட்டை. |
| 64. | கரு.மீனாள் | கீழச்சிவல்பட்டி, காரைக்குடி. |

| வ.எண் | சிவனடியாரின் பெயர் | சொந்த ஊர்இருப்பு |
|---|---|---|
| 65. | கரு. சாத்தம்மை | கீழச்சிவல்பட்டி |
| 66. | இராம. முத்தாள் | கல்லுப்பட்டி, காரைக்குடி. |
| 67. | இராம. உண்ணாமலை (உமா அம்மா) | கண்டனூர், காரைக்குடி. |
| 68. | எம். வள்ளிக்கண்ணு | காரைக்குடி. |
| 69. | பழ.அழகம்மை (வக்கீல் பழ) | காரைக்குடி. |
| 70. | வீர வள்ளிக்கண்ணு | காரைக்குடி. |
| 71. | முரு. மீனாட்சி | பள்ளத்தூர், காரைக்குடி. |
| 72. | பழ. உமையாள் | கானாடுகாத்தான். |
| 73. | சோம. விஜயலெட்சுமி (சோமு) (பூங்குடியார் வீடு) | காரைக்குடி. |
| 74. | இராம. அபிராமி | காரைக்குடி, செக்காலை. |
| 75. | அண. ஞானப்பூங்கோதை (ச.மெய்யப்பன்) | நேமத்தான்பட்டி. |
| 76. | ஏ. சுசீலா | காரைக்குடி. |
| 77. | ரெ.லெ. பொன்னம்மாள் | காரைக்குடி. |
| 78. | அழ.சோலச்சி | காரைக்குடி, டி.டி.நகர். |
| 79. | கா.வள்ளியம்மை (வக்கீல் காளையப்பன்) | காரைக்குடி, க.முத்துப்பட்டணம். |
| 80. | சுப.நாச்சம்மை | காரைக்குடி. |
| 81. | நா. விஜயா | புதுவயல். |
| 82. | லோ. உலகம்மை | ஆத்தன்குடி. |
| 83. | மெ.நாகம்மை | கண்டனூர். |
| 84. | கங்கா மாமி | காரைக்குடி. |

| வ.எண் | சிவனடியாரின் பெயர் | சொந்த ஊர்இருப்பு |
|---|---|---|
| 85. | க. மீனாட்சி | க.முத்துப்பட்டணம். |
| 86. | எல். மீனாள் | கண்டரமாணிக்கம். |
| 87. | திரிபுரசந்தரி (சுந்தரி வைத்யநாதன்) | காரைக்குடி, சுப்பிரமணியபுரம். |
| 88. | க. தமிழ்ச்செல்வி | காரைக்குடி |
| 89. | என் மங்கையர்க்கரசி | ஓ.சிறுவயல். |
| 90. | இராம.கல்யாணி | காரைக்குடி |
| 91. | பழ. வள்ளியம்மை (இராமவிலாஸ்) | காரைக்குடி. |
| 92. | எஸ். அழகம்மை | பி.அழகாபுரி. |
| 93. | கும. கண்ணாத்தாள் | அரண்மனை சிறுவயல். |
| 94. | நா.பரிபூரணம் | உலகம்பட்டி. |
| 95. | எஸ்.பி. லெட்சுமி | காரைக்குடி. |
| 96. | எம். உண்ணாமலை | காரைக்குடி. |
| 97. | பி. சுந்தரி | காரைக்குடி. |
| 98. | நா.அழகம்மை | க.முத்துப்பட்டணம். |
| 99. | பெரிகாந்திமதி | ஓ.சிறுவயல். |
| 100. | சொ.பிச்சம்மை | காரைக்குடி. |
| 128. | வி.செந்தில்நாயகி | காரைக்குடி |
| 129. | வி.என். அலமேலு | |
| 130. | என்.வள்ளிக்கண்ணு | |
| 131. | பொன்னம்மாள் | பள்ளத்தூர். |
| 132. | சி.சுதந்திரதேவி | பள்ளத்தூர். |
| 133. | சிவ.சு.சு. சீதாலெட்சுமி | பள்ளத்தூர். |

குறிப்பு: இந்நூலில் ஏதாவது பிழை இருந்தால் தெரிவிக்கவும். அடுத்த பதிப்பில் திருத்திக் கொள்ளப்படும் – ஆசிரியர்.

– முற்றும் –



"பொற்கிழிக்கவிஞர்" "காசிஸ்ரீ"

## அரு. சோமசுந்தரன் (அருசோ) M.A., B.T

சிறந்த கவிஞர்; 15,000க்கும் மேற்பட்ட கவிதைகளை எழுதியவர். நூறு நூல்களுக்கு ஆசிரியர். கவிதை, கட்டுரை, இலக்கியத் திறனாய்வு, நாடகம், மொழிபெயர்ப்பு, பயணம், ஆன்மீகம் என்று பலதுறைகளில் வல்லுநர். இவருக்குப் "பல்துறைச் செந்நாப் பாவலர்", "கவிஞர்கோ" பட்டங்களையும், தங்கப் பதக்கத்தையும் தவத்திரு குன்றக்குடி அடிகளார் வழங்கிச் சிறப்பித்தார்.

மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில் தமிழக அரசின் சார்பில் நடத்தப்பெற்ற பொற்கிழிக் காவியப் போட்டியில் முதல் பரிசுபெற்று, முதற்பொற்கிழியினைத் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்களிடம் இருந்து பெற்றார்.

இராமேஸ்வரத்தில் இருந்து காசிக்குப் பாதயாத்திரையாக நடந்துசென்று விஸ்வநாதர் கோயில் "காசிஸ்ரீ" பட்டமும், கயிலைக்குச் சென்று "கயிலைமணி" பட்டமும் பெற்றார்.

தமிழக முதல்வர்களான காமராஜ், பக்தவத்சலம், கலைஞர் மு. கருணாநிதி, எம்.ஜி.ஆர்., வி.என். ஜானகி, கவர்னர் கொரானா மற்றும் சி. சுப்பிரமணியம், நெடுஞ்செழியன் ஆகியோரால் பாராட்டப்பெற்று எல்லா அரசுகளாலும் சிறப்பிக்கப் பெற்றார். புதுடில்லி பென்குயின் பதிப்பகம் இவருக்கு வாழ்நாள் சாதனையாளர் விருது வழங்கியுள்ளது.

இராமாயணம், மகாபாரதம், கந்தபுராணம், பெரியபுராணம், திருவிளையாடற் புராணம், பாகவதம், சிலப்பதிகாரம், சிவமகாபுராணம் முதலிய ஆன்மீகச் செல்வங்களைத் தொடர்சொற்பொழிவாக ஆற்றி மக்களை நன்னெறிப் படுத்துகிறார். உலகம் சுற்றிய தமிழர். மதுரை தமிழிசைச் சங்கத்தின் சார்பில் "முத்தமிழ்ப் பேரறிஞர்" பட்டமும், கோவை பாரதியார் பல்கலைக் கழகத்தின் சார்பில் "மகாகவி பாரதி" விருதும் பெற்றவர். ஷேக்ஸ்பியரின் நாடகங்களைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.